श्रीः

श्रीमते लक्ष्मीनृसिंहपरब्रह्मणे नमः

# कठोपनिषत् ।

## प्रथमाध्याये प्रथमवल्ली ।

हरिः ओम् । उशन् ह वै वाजश्रवसस्सर्ववेदसंददौ । तस्य ह नचिकेता नाम पुत्र आस ॥ ॥ १ ॥

---

இந்த உபநிஷத்தில், பரம புருஷார்த்த ரூபமாயும் ப்ரஹ்ம ப்ராப்தியை லக்ஷணமாக உடையதுமான மோக்ஷத்தின் யாதாத்ம்யம், அதற்கு உபாயமாக இருக்கும் பரமாத்மோபாஸநம், பரதத்வ அவரதத்வ ஜ்ஞாநம், ஆகிய இவைகளெல்லாம் விஸ்தாரமாக விளக்கப்படுகின்றன.

பூர்வ காலத்தில் கௌதமர் என்னும் பெயருடைய ஒரு மஹர்ஷி இருந்தார். அவருக்கு நசிகேதஸ் என்னும் பெயருள்ள ஒரு புத்ரன் உண்டு. ஒரு ஸமயத்தில் கௌதமர் விச்வஜித் என்னும் ஒரு க்ரதுவைச் செய்ய ஆரம்பித்தார். அந்த க்ரதுவுக்கு, ஸர்வ ஸ்வத்தையும் தக்ஷிணையாகக் கொடுப்பது லக்ஷணம். அந்த க்ரது முடியும் வேளையில், ஆஸ்திகாக்ரேஸரனாகிற நசிகேதஸ், இந்த க்ரதுவுக்கு ஸர்வ ஸ்வத்தையும் தாநம் செய்யாமலிருந்தால் வைகுண்யம் நேர்ந்துவிடுமே என்று பயந்து, 'அடியேனும் உமக்கு ஒரு ஸ்வம் அன்றோ? அடியேனை யாருக்குத் தாநமாகக் கொடுக்கப்போகிறீர்?' என்று கேட்டான். அதற்குப் பிதா பதில் அளிக்காமலிருந்ததைப் பார்த்துப் புத்ரன் இரண்டு மூன்று தடவை நிர்ப்பந்தித்து அதே கேள்வியைத் திரும்பத் திரும்பக் கேட்க, பிதா கோபங்கொண்டவராய் 'உன்னை ம்ருத்யுவுக்குக் கொடுக்கப்போகிறேன்' என்று பதில் அளித்தார். புத்ரன் உடனே யமலோகம் போய்ச் சேர்ந்தான். அப்பொழுது தர்மராஜன் ஸ்தலாந்தரத்திற்குப் போயிருந்தபடியால், மூன்று இரவு அங்கு நசிகேதஸ் எவ்விதமான ஆஹாரமுமின்றிக்கே தங்கியிருக்கும்படி ஸம்பவித்தது. பிறகு தர்மராஜன் திரும்பி வந்தார். வந்தவுடன் 'மூன்று இரவு ஆஹாரமின்றி ஓர் ஆஸ்திகர் தமது க்ருஹத்தில் தங்கும்படி நேர்ந்துவிட்டதே' என்று பயந்து, அதற்கு ப்ரதிவிதாநமாக நசிகேதஸ்ஸை நோக்கி 'உமக்கு நான் மூன்று வரன்களைக் கொடுக்கிறேன்; நீர் உமக்கு அபேக்ஷித்தவைகளைக் கேட்டுக்கொள்ளும்' என்று சொன்னார். நசிகேதஸ் தனக்குள்ள ஆஸ்திக்யாதிரேகத்தால், 'என்மீது கோபம் கொண்டிருக்கிற என் பிதா கோபமின்றிக்கே ப்ரஸந்நராக இருக்கவேண்டும்' என்று முதல் வரனை யாசித்தான். இரண்டாவது வரனால் தர்மராஜனுக்குத் தெரிந்ததான 'அக்நி வித்யை' என்னும்

तँ ह कुमारँ सन्तं दक्षिणासु नीयमानासु श्रद्धा विवेश । सोऽमन्यत ॥ २ ॥

---

ஸ்வர்க்க ப்ரயோஜநமான ஒரு வித்யையைத் தனக்கு உபதேசிக்கவேண்டு மென்று கேட்டான். மூன்ருவது வரனல், மோக்ஷத்தின் உண்மையை அறிய விருப்பமுள்ளவனய் அது ஸம்பந்தமாக ஒரு ப்ரஶ்நத்தை நசிகேதஸ் செய்ய, தர்மராஜன் மோக்ஷத்தை விவரிக்கப் புகுந்து, உபேய மாகிற ப்ரஹ்மத்தின் ஸ்வரூபம், உபேதாவாகிற ஜீவாத்மாவின் ஸ்வரூபம், உபாயமாகிற உபாஸநத்தின் ஸ்வரூபம், ஆக இம்மூன்றையும் விஸ்தாரமாக விளக்குகிருர். இதுதான் இந்த உபநிஷத்தின் விஷயம். இந்த மூன்ருவது ப்ரஶ்நம் ஜீவாத்மாவைப் பற்றியதென்றும், இதற்கு ஸமாதாநமாக தர்மராஜனல் செய்யப்பட்டுள்ள விவரணமும் ஜீவாத்மாவையே விஷயமாகக் கொண்டதென்றும், அத்வைத வேதாந்திகள் விவரிக்கிருர்கள். 'இது ஜீவாத்மாவைப் பற்றியதன்று, பரமாத்மாவையே பற்றியது' என்பது ஸ்ரீ பாஷ்யகாரருடைய திருவுள்ளம். மூன்ருவது ப்ரஶ்நத்தை விவரிக்கு மிடத்தில் இது விஸ்தாரமாக விசாரிக்கப்படும்.

1. [ப - ரை]. **उशन् ह वै** - [ஒரு பலத்தை] இச்சித்துக்கொண்டு, **वाजश्रवसः** - வாஜஶ்ரவஸ் என்பவருடைய குமாரர், [ஸகல ஸொத்தையும் தக்ஷிணையாகக் கொடுப்பதை அங்கமாக உடைய விஶ்வஜித் என்னும் ஒரு க்ரதுவைச் செய்பவராய்] **सर्ववेदसम्** - ஸகல ஸொத்தையும், **ददौ** - [தக்ஷிணையாகக்] கொடுத்தார். **तस्य** - அவருக்கு, **नचिकेता नाम** - நசிகேதஸ் என்னும் பெயருடைய, **पुत्रः** - பிள்ளை, **आस** - இருந்தார்.

காம்யமாக ஒரு கர்மத்தைச் செய்தால், அதை அங்காங்கிகள் ஒன்றுக்கும் எவ்வித லோபமும் வராமல் செய்தாலொழிய அதற்கு ஸாத்குண்யம் வரமாட்டாது. இந்த மஹர்ஷி செய்யும் விஶ்வஜித் என்னும் க்ரது காம்யமாகச் செய்யப்படுகின்றது என்பதை 'உஶந்' என்னும் பதம் தெரிவிக்கின்றது. ஆகையால், தக்ஷிணைக்கு ப்ராதாந்யம். இவருடைய வம்ஶமே தாநத்திற்குப் பெயர் போனதாகத் தெரிகிறது. இவருடைய தகப்பனருக்கு 'வாஜஶ்ரவஸ்' என்னும் பெயர் ஏற்பட்டதும் இந்தக் காரணத்தாலேயே என்று சொல்லக் கூடும். 'வாஜம்' என்பதற்கு அந்நம் என்பது பொருள்; 'ஶ்ரவஸ்' என்பதற்குக் கீர்த்தி என்பது பொருள். அளவற்ற அந்நதாநம் செய்து அதனல் பெரிய கீர்த்தியை அடைந்தவர் என்பது 'வாஜஶ்ரவஸ்' என்னும் பதத்தின் திரண்ட பொருள், **आस** - இது சாந்தஸம். **बभूव** என்பது லௌகிகமான ரூபம்.

---

2. [ப - ரை]. **दक्षिणासु** - தக்ஷிணைகள், **नीयमानासु** - கொடுபட்டுக்கொண்டிருந்தபொழுது, **तँ ह कुमारम्** - அந்தக் குமாரனுக்கு, **श्रद्धा** - ஒரு ஆஸ்திக்ய புத்தி, **आविवेश** - உண்டாயிற்று. **सः** - அவன், **अमन्यत** - [பின் வருமாறு] ஒரு எண்ணம் கொண்டான்.

पीतोदका जग्धतृणा दुग्धदोहा निरिन्द्रियाः ।
अनन्दा नाम ते लोकास्तान्स गच्छति ता ददत् ॥ ॥ ३॥

सहोवाच पितरम्–"तत कस्मै मां दास्यसि" इति । द्वितीयं तृतीयम् ।
तँ होवाच–"मृत्यवे त्वा ददामि" इति । ॥ ४ ॥

---

நசிகேதஸ்ஸூக்கு ஜநித்த ஆஸ்திக்ய புத்தியானது, பிதாவுக்கு ஹிதத்தைச் செய்யவேண்டும் என்னும் மநோபாவ ப்ரயுக்தம். இந்த வாக்யத்தின் கருத்தை வெளியிடு மிடத்தில் ஸ்ரீ பாஷ்யகாரர், நசிகேதஸ்ஸை 'ஆஸ்திகாக்ரேஸரனுகிற நசிகேதஸ்' என்று புகழ்ந்து பேசுகிறுர்.

---

3. நசிகேதஸ்ஸின் மநஸ்ஸில் ஜநித்த ஶ்ரத்தையை விவரிக்கிறது இந்த வாக்யம்.

[ப - ரை]. **पीतोदकाः** - குடிக்கப்பட்ட ஜலத்தை உடையவையாயும், **जग्धतृणाः** - புஜிக்கப்பட்ட புல்லை உடையவையாயும், **दुग्धदोहाः** - கறக்கப்பட்ட பாலை உடையவையாயும், **निरिन्द्रियाः** - கன்று போடுவதற்கு அஸமர்த்தங்களாயு மிருக்கும், **ताः** - இவைகளை [அதாவது: இப்படிப்பட்ட பசுக்களை], **ददत्** - [ருத்விக்குக்களுக்குத் தக்ஷிணை என்னும் புத்தியுடன்] தாநமாகக் கொடுக்கும், **सः** - அவன், **अनन्दा नाम ते लोकाः** - எவ்வித ஸூகமுமிராத லோகங்கள் சில உண்டு [என்று ஶாஸ்த்ரங்கள் சொல்லுகின்றனவே], **तान्** - அந்த லோகங்களுக்கு, **गच्छति** - போகிறுன்.

இவ்விடத்தில் பசுக்களுக்கு விஶேஷணங்களாக ப்ரயோகிக்கப்பட்டுள்ள நான்கு சொற்களும், அந்தப் பசுக்கள் நிஷ்பலமான கிழப் பசுக்கள் என்பதை ஸூசிப்பிக்கின்றன. நிஷ்ப்ரயோஜநமான பதார்த்தத்தைத் தாநமாகக் கொடுப்பது சரியான தாநமாகமாட்டா தாகையால், அம்மாதிரி வைகுண்யம் தனது பிதாவின் க்ரதுவுக்கு ஏற்படாமல் இருக்க வேண்டும் என்பதே இம்மாதிரி நினைத்ததன் தாத்பர்யம்.

**अनन्दाः** - 'நந்தம்' என்பது ஸூகத்தைக் குறிக்கும். அது எவ்விடத்தில் இல்லையோ அவ்விடம் அநந்தமே. அஸூர்யங்களாகச் சில லோகங்கள் இருக்கின்றன வென்று ஈஶாவாஸ்ய உபநிஷத்தில் [3-வது மந்த்ரத்தில்] சொல்லப்பட்டிருக்கின்றது. அம்மாதிரி அநந்தங்களாகச் சில லோகங்கள் உண்டு. இது ஶாஸ்த்ர ஸித்தம்.

---

4. பிதாவால் கொடுக்கப்பட்ட தக்ஷிணை முடியும் பர்யந்தம் கேட்டிருந்த நசிகேதஸ், தானும் பிதாவின் ஸொத்தில் சேர்ந்திருப்பதால், தன்னைத் தக்ஷிணையாகக் கொடுக்காமல் இருந்தால் க்ரதுவுக்கு வைகுண்யம் நேர்ந்துவிடுமே என்று பயந்து பின் வருமாறு பிதாவைப் பார்த்து ஒரு வார்த்தை சொல்லுகிறுன்.

"बहूनामेमि प्रथमो बहूनामेमि मध्यमः ।
किँ स्विद्यमस्य कर्तव्यं यन्मयाऽद्य करिष्यति ॥ ॥ ५ ॥
अनुपश्य यथा पूर्वे प्रतिपश्य तथा परे ।
सस्यमिव मर्त्यः पच्यते सस्यमिवाजायते पुनः ॥ ॥ ६ ॥

---

[ப - ரை.] **स ह** - அவன், **तत** - ஹே பிதாவே, **माम्** - என்னை, **कस्मै** - யாருக்கு [எந்த ருத்விக்குக்கு], **दास्यसि** - [தக்ஷிணையாகக்] கொடுக்கப் போகிறீர்கள், **इति** - என்று, **पितरम्** - பிதாவை நோக்கி, **उवाच** - கேட்டான். [அந்தக் கேள்வியை உபேக்ஷித்திருந்த பிதாவைப் பார்த்து] **द्वितीयम्** - இரண்டாவது தடவையும், **तृतीयम्** - மூன்றாவது தடவையும் [ப்ரஶ்நம் செய்தான்]. **तँह** - [அப்படி நிர்ப்பந்திக்கப்பட்ட பிதா கோபம் அடைந்தவராய்] அவனைப் பார்த்து, **त्वा** - உன்னை, **मृत्यवे** - ம்ருத்யுவுக்கு, **ददामि** - கொடுக்கிறேன், **इति** - என்று, **उवाच** - [பதில்] சொன்னார்.

---

5. இப்படிச் சொல்லப்பட்டிருந்தும், புத்ரன் பயம் சோகம் ஒன்றும் கொள்ளாதவனைப் பிதாவைப் பார்த்துச் சொல்லுகிறான்.

[ப - ரை.] **बहूनाम्** - [ம்ருத்யு லோகத்திற்குப் போகும்] ஜநங்கள் எல்லாருக்கும், **प्रथमः** - முன்னதாகவே, **एमि** - நான் போகிறேன் ; **बहूनां मध्यमः** - அவர்களின் நடுவிலாவது, **एमि** - போகிறேன். [பயந்து கடைசியாகப் பின்னால் போவேன் என்று ஶங்கிக்கவேண்டாம்]. [ஆனால்] **मया** - என்னாலே, **अद्य** - இப்பொழுது, **यत्** - எதை, **करिष्यति** - [அந்த ம்ருத்யு] செய்யப் போகிறாரோ, **कर्तव्यम्** - [அப்படிச்] செய்யத் தகுந்த கார்யம், **यमस्य** - [அந்த] ம்ருத்யுவுக்கு, **किँस्वित्** - என்ன உண்டு?

இவ்வாறு நசிகேதஸ் கேட்டதன் கருத்து என்னவென்றால்: 'நானோ பாலிஶன் ; பூர்ண காமராயிருக்கும் ம்ருத்யுவுக்கு என்னால் என்ன ப்ரயோஜநம்? ருத்விக்குகளுக்குக் கொடுக்கும் தக்ஷிணை அவர்களுக்கு ப்ரயோஜநமுள்ளதாக வன்றோ இருத்தல் வேண்டும்? ம்ருத்யுவுக்கு என்னால் ஒரு ப்ரயோஜநமும் இருக்கமாட்டாதே என்றே எனக்குக் கொஞ்சம் சோகம் ஜநிக்கின்றது' என்பது தான்.

---

6. புத்ரனுடைய வார்த்தையைக் கேட்ட பிதாவுக்கு அளவற்ற பஶ்சாத்தாப முண்டாயிற்று. 'கோபத்திற்குப் பரவசமாகி நான் இவ்வளவு குணவானாகிற புத்ரனை ம்ருத்யுவுக்குக் கொடுக்கிறேன் என்று சொல்லி விட்டேனே!' என்று ஹ்ருதயத்தினுள் பிதா தபித்தார். அவருடைய முகத்திலிருந்து அந்தத் தாபத்தைப் புத்ரன் அறிந்து, தன் பிதாவை நோக்கி, 'சொன்ன வார்த்தையைக் காப்பாற்றுவது நமது வம்ஶத்தின்

" वैश्वानरः प्रविशत्यतिथि र्ब्राह्मणो गृहान् ।
तस्यैताँ शान्तिं कुर्वन्ति हर वैवस्वतोदकम् ॥ ॥ ७ ॥

आशाप्रतीक्षे सङ्गतँ सूनृताञ्चेष्टापूर्ते पुत्रपशूँश्च सर्वान् ।
एतद्वृङ्क्ते पुरुषस्याल्पमेधसो यस्यानश्नन् वसति ब्राह्मणो गृहे ॥ ८ ॥

---

லக்ஷணமன்ரே? இதைப்பற்றி விசாரப்பட வேண்டாம்' என்று தைர்யம் சொல்லுகிறான்.

[ப - ரை]. **पूर्वे** - [நமது] முன்னோர்கள், **यथा** - எப்படி [ஸத்ய வசநத்தைக் காப்பாற்றி வந்தார்களோ], **अनुपश्य** - [அதைப்] பார்த்தும், **अपरे** - மற்றுமுள்ள [ஸாதுக்கள் எப்படி நடந்து வருகிறார்களோ], **प्रतिपश्य च** - [அதைப்] பார்த்தும், **तथा** - அப்படியே [நீரும் நடக்க வேண்டுமன்ரே?]. **मर्त्यः** - மநுஷ்யன், **सस्यमिव** - [அல்ப] பயிர்போல, **पच्यते** - [ஸ்வல்ப காலத்திற்குள்] நாஶமடைகிறான். **सस्यमिव** [அந்தப்] பயிர் போலவே, **पुनः**-மறுபடியும், **आजायते**-ஜநிக்கிறான். [இப்படி அநித்ய மன்ரே ஜீவலோகம்? இதில் பொய் பேசி என்ன பலம் பெறுவது உண்டு?]

---

7. இவ்வாறு பேசிவிட்டுப் புத்ரன் ம்ருத்யு லோகம் போனான். அவ்விடத்தில் தர்மராஜன் இராதபடியால், மூன்று இரவு காக்கும்படியாக ஸம்பவித்தது. மூன்று இரவும் நசிகேதஸ் நிராஹாரனாக இருந்துகொண்டு தர்மராஜனுடைய வரவை எதிர்பார்த்திருந்தான். பிறகு தர்மராஜன் வந்தார். அவரைப் பார்த்து வாசலில் இருந்த வ்ருத்தர்களான த்வார பாலகர்கள் பின்வருமாறு சொல்லுகிறார்கள்.

[ப - ரை]. **वैश्वानरः** - [ஸாக்ஷாத்] அக்நி பகவானே, **अतिथि ब्राह्मणः** - ப்ராஹ்மண அதிதியாக, **गृहान् प्रविशति** - [நமது] க்ருஹங்களுக்கு வருகிறார்கள். **तस्य** - அவருக்கு, **एतां शान्तिम्** - இந்த ஶாந்தியை [அதாவது: அர்க்ய பாத்யாதிகளை ஸமர்ப்பிப்பதான ஶாந்தியை], **कुर्वन्ति**- [அதை அறிந்தவர்கள்] செய்கிறார்கள். **वैवस्वत** - ஹே! தர்மராஜனே, **उदकम्** - [பாத்யம் முதலியவைகளுக்காக] ஜலத்தை, **हर** - [இந்த நசிகேதஸ்ஸுக்குக்] கொண்டுவாரும்.

அதிதி அக்நியாகையால், அவரிடத்தில் அபசாரப்பட்டால் அப்படி அபசாரப்படுகிறவர்கள் தக்தராகப் போய்விடுவார்கள் என்று ஶாஸ்த்ரம் சொல்லுகின்றது.

---

8. க்ருஹத்திற்கு வந்த அதிதியைப் பூஜியாமல் இருந்த அபசாரத்திற்கு ஶமநம் செய்துகொள்ளாமற்போனால், பலமான ப்ரத்யவாயமும் நேருமென்று அந்த வ்ருத்தர்கள் சொல்லுகிறார்கள்.

" तिस्रो रात्रीर्यदवात्सीर्गृहे मेऽनश्नन् ब्रह्मन्नतिथिर्नमस्यः।
नमस्तेऽस्तु ब्रह्मन् स्वस्ति मेऽस्तु तस्मात् प्रति त्रीन् वरान् वृणीष्व ॥९॥

[ப - ரை]. **यस्य अल्पमेधसः पुरुषस्य** - எந்த புத்தியற்ற க்ருஹஸ்தனுடைய, **गृहे** - வீட்டில், **अनश्नन्** - பட்டினியாக, **ब्राह्मणो वसति** - ஒரு அதிதி வஸிக்கிறுனே, [**तस्य** - அந்த க்ருஹஸ்தனுடைய], **आशाप्रतीक्षे** - ஆசை மனோரதம் இவைகளையும், **सङ्गतम्** - [நல்லோர்களுடைய] சேர்க்கையையும், **सूनृतां च** - உண்மையான ப்ரிய வசனங்களையும், **इष्टापूर्ते** - [அவனுல் செய்யப்படும் யாகம் முதலான] கர்மங்கள் [குளம் வெட்டுவது முதலான] தர்மாநுஷ்டானங்கள் இவைகளையும், **पुत्रपशूंश्च** - ப்ரஜைகள் பசுக்கள் இவைகளையும், **सर्वान्** - [இவைகளைத் தவிர்த்த] மற்றை எல்லா புண்ய கர்மங்களையும், **एतत्** - இது [அதிதி ஆஹாரமின்றிக்கே இருக்கும்படியாக நேர்ந்த பாபமானது], **वृंक्ते** - நாசம் செய்துவிடுகிறது.

**आशा** - ஆசை, அதாவது துர்லபமாக இருக்கும் ஒரு வஸ்துவில் உண்டாகும் இச்சை. **प्रतीक्षा** - எதிர்பார்ப்பது ; அதாவது : கிடைக்கும் போல் இருக்கும் ஒரு வஸ்து கிடைத்துவிடும் என்று நம்பி இருப்பது. அதாவது : காமங்கள் ஸங்கல்பங்கள் இவையெல்லாம்.

**इष्टापूर्ते** - 'இஷ்டம்' என்பது ஶ்ருதியில் சொல்லப்பட்டிருக்கும் யாகம் முதலியவைகளையும், 'பூர்த்தம்' என்பது ஸ்ம்ருதியில் சொல்லப்பட்டிருக்கும் குளம்வெட்டுவது, முதலான புண்யகர்மங்களையும் குறிக்கும்.

---

9. வ்ருத்தர்களுடைய வார்த்தையைக் கேட்ட தர்மராஜன் நசிகேதஸ்ஸைப் பார்த்து சொல்லுகிறுர்.

[ப - ரை]. **ब्रह्मन्** - ஹே பூஜ்யரே! **यत्** - எந்தக் காரணத்தால், **मे गृहे** - என்னுடைய க்ருஹத்தில், **नमस्यः** - பூஜ்யரான, **अतिथिः** - அதிதியாகிற, [**त्वम्** - நீர்], **तिस्रो रात्रीः** - மூன்று இராத்திரி காலம், **अनश्नन्** - ஆஹாரமொன்றுமின்றிக்கே, **अवात्सीः** - வஸித்திருந்திரோ, **तस्मात्** - அந்தக் காரணத்தால், **ब्रह्मन्** - ஹே பூஜ்யரே, **ते नमोऽस्तु** - உம்மை நமஸ்கரிக்கிறேன். **त्रीन् वरान् प्रति** - மூன்று வரன்களை, **वृणीष्व** - வரித்துக்கொள்ளும்; **मे** - எனக்கு, **स्वस्ति अस्तु** - க்ஷேமம் உண்டாகவேண்டும்.

இம்மாதிரி மூன்று வரன்களைக் கொடுத்து நசிகேதஸ்ஸை த்ருப்தி செய்வித்தால், அதிதி க்ருஹத்தில் பட்டினியாக இருந்ததால் ஏற்பட்ட பாபம் ஶமநமாகும் என்னும் எண்ணத்துடன் இம்மாதிரி தர்மராஜன் ப்ரார்த்தித்தான். மூன்று இரவு பட்டினி யிருந்தபடியால், மூன்று வரன்களைக் கொடுக்கலாமென்று நினைத்தான் போலும். நசிகேதஸ் அம்மாதிரி வரன்களை அபேக்ஷியாமல் இருந்தாலும் தன்னை அநுக்ரஹிப்பதற்காகவாவது வரன்களை அங்கீகரிக்க வேண்டுமென்பது தர்மராஜனுடைய கருத்து.

"शान्तसङ्कल्पस्सुमना यथा स्याद्वीतमन्युर्गौतमो माऽभिमृत्यो ।
त्वत्प्रसृष्टं माऽभिवदेत्प्रतीत एतत्त्रयाणां प्रथमं वरं वृणे ॥" १०

"यथा पुरस्ताद्भविता प्रतीत औद्दालकिरारुणिर्मत्प्रसृष्टः ।
सुखँ रात्रीश्शयिता वीतमन्युस्त्वां ददृशिवान् मृत्युमुखात्प्रमुक्तम् ॥" ११

---

10. இவ்வாறு தர்மராஜனால் ப்ரார்த்திக்கப்பட்டவனாய், நசிகேதஸ் தனக்கு இஷ்டமான வரத்தைக் கேட்கிறான்.

[ப - ரை.] **मृत्यो** - ஹே தர்மராஜனே! **गौतमः** - [என்னுடைய பிதாவாகிற] கௌதமர், **मा अभि** - என் விஷயமாக, **शान्तसङ्कल्पः** - சிந்தையற்றவராயும், **सुमनाः** - ப்ரஸந்நமான மநஸ்ஸை உடையவராயும், **वीतमन्युः**- கோபமற்றவராயும், **यथा स्यात्** - எப்படி இருப்பாரோ; **त्वत्प्रसृष्टम्** - உம்மால் திருப்பி அனுப்பப்பட்டுள்ள, **मा अभि** - என்னைக் குறித்து, **प्रतीतः** - ப்ரீதியுடன் கூடினவராய், **[यथा] वदेत्** - எப்படிப் பேசுவரோ; **एतत्** - [அப்படிப்பட்ட] இதை [அதாவது: இந்த யாசநத்தை], **त्रयाणां प्रथमं वरम्** - [நீர் கொடுக்கப்போகும்] மூன்று வரங்களுள் முதல் வரமாக, **वृणे** - வரிக்கிறேன்.

**शान्तसङ्कल्पः** - 'என்னுடைய புத்ரனாகிற நசிகேதஸ் யமனுக்குத் தாநமாகக் கொடுக்கப்பட்டானே. இவனால் பூர்ணகாமனான யமனுக்கு என்ன பலம் ஏற்படும்?' என்று யாதொரு சிந்தை உண்டோ அந்தச் சிந்தையற்றவனாய் என்பது கருத்து.

**वीतमन्युः** - 'என்னை யாருக்குக் கொடுக்கப்போகிறாய்?' என்று இரண்டு மூன்று தடவை நசிகேதஸ் பிதாவைப் பார்த்துக் கேட்டபொழுது, பிதாவுக்கு யாதொரு கோப முண்டாயிற்றோ, அந்தக் கோப மற்றவராய்.

**सुमनाः** - கோபம் ஶமநமாகி மாத்ரம் போதாது; அவர் நசிகேதஸ் விஷயத்தில் அதற்கு முந்தி எம்மாதிரி ப்ரீதியைச் செய்திருந்தாரோ அப்படிப்பட்ட ப்ரீதியுடன் கூடினவராய்.

**अभिवदेत्** - மாநஸிகமாக ப்ரஸந்நராயிருப்பதுடன்கூட, தன்னுடன் ப்ரீதிபுரஸ்ஸரமாக வார்த்தையும் சொல்லவேண்டும் என்பது கருத்து. இந்தப் பதத்திற்கு வேறொரு பொருளும் உரைக்கலாம். **अभिवदति** என்பதற்கு 'ஆசிர்வதிப்பது' என்றும் பொருள் உண்டு. அதாவது—'நான் போய் அவருக்கு நமஸ்காரம் செய்தால், அதை அவர் அங்கீகரித்து என்னை ஆசிர்வதிக்கவேண்டும்.'

---

11. ம்ருத்யு பதில் சொல்லுகிறார்.

[ப - ரை.] **औद्दालकिः** - உத்தாலகருடைய குமாரராயும், **आरुणिः**- அருணனுடைய வம்ஶத்தில் ஜநித்தவருமான [உன் தகப்பனாகிய

" स्वर्गे लोके न भयं किञ्च नास्ति न तत्र त्वं न जरया बिभेति ।
उभे तीर्त्वा अशनायापिपासे शोकातिगो मोदते स्वर्गलोके ॥ १२

" स त्वमग्निँ स्वर्ग्यमध्येषि मृत्यो प्रब्रूहि तँ श्रद्दधानाय मह्यम् ।
स्वर्गलोका अमृतत्वं भजन्त एतद्द्वितीयेन वृणे वरेण ॥" १३

---

கௌதமர்], **मत्प्रसृष्टः** - என்னால் அநுக்ரஹிக்கப்பட்டவராய் [அதாவது: என்னுடைய அநுக்ரஹத்தால்], **यथा पुरस्तात्** - முன்போலவே, **प्रतीतः** - [உன்னிடத்தில்] ப்ரீதியுள்ளவராக, **भविता** - இருப்பர். **मृत्युमुखात्** - ம்ருத்யுவின் முகத்திலிருந்து, **प्रमुक्तम्** - விடப்பட்டிருக்கும், **त्वाम्** - உன்னை, **ददृशिवान्** [**सन्**] - பார்த்துக்கொண்டு, **वीतमन्युः** - கோபமற்றவராய், **रात्रीः सुखं शयिता** - ராத்ரிகாலம் முழுவதும் ஸுகமாகத் தூங்குவர்.

இவ்விடத்தில் ஸந்தோஷாதிக்யத்தால் யமன், நசிகேதஸ்ஸின் பிதாவின் பெயரையும் வம்ஸத்தையுமிட்டுக் கௌதமரை வ்யவஹரிக்கிறார்.

**मत्प्रसृष्टः** - இதற்கு, 'என்னால் அநுஜ்ஞை கொடுக்கப்பட்டவராய்' என்பது பொருள். 'என்னுடைய அநுக்ரஹத்தால்' என்பது தாத்பர்யம். **मत्प्रसृष्टम्** என்றும் ஒரு பாடமுண்டு. அப்பொழுது, 'என்னால் திருப்பி அனுப்பப்பட்ட' [உன்னைக் குறித்து] என்பது பொருள்.

'ராத்ரியெல்லாம் ஸுகமாகத் தூங்குவர்' என்று சொன்னது, கௌதமருடைய விசாரம் கோபம் முதலியவை நீங்கி விட்டன என்பதை விளக்குகின்றது. துக்காவேகம் ப்ராயேண ராத்ரி காலங்களில் அஸஹ்யமாக இருந்துகொண்டு நித்ரையைப் பாதிக்கும் என்பது அநுபவஸித்தம். ஆகையால் 'ராத்ரி ஸுகமாகத் தூங்குவர்' என்று சொல்லப்பட்டிருக்கிறது.

---

12 - 13. இந்த இரண்டு மந்த்ரங்களால் நசிகேதஸ் இரண்டாவது வரத்தை ப்ரார்த்திக்கிறான்.

[ப - ரை.] **स्वर्गे लोके** - மோக்ஷமென்று சொல்லப்படும் ஸ்தாநத்தில், **किञ्चन भयन्नास्ति** - எவ்வித பயமும் இல்லை. **तत्र** - அவ்விடத்தில், **त्वं न** - நீர் இல்லை [அதாவது: உமக்கு அவ்விடத்தில் ப்ரஜைகளைக் கொல்லும் அதிகாரம் இல்லை]; **जरया न बिभेति** - [அவ்விடத்தில் இருக்கும் ப்ரஜைகள்] கிழத்தனத்தால் பயப்படுகிறதில்லை. **स्वर्गे लोके** - அந்த மோக்ஷ ஸ்தாநத்தில், [அவ்விடத்திலிருக்கும் புருஷன்] **अशनायापिपासे** - பசி தாஹங்களாகிற, **उभे** - இவை இரண்டையும், **तीर्त्वा** - கடந்து, **शोकातिगः** - ஶோகமற்றவனாக, **मोदते** - ஆநந்தாநுபவம் செய்கிறான். [இவ்வாறு நான் பெரியோர்களிடமிருந்து கேட்டிருக்கிறேன்.]

**हे मृत्यो** - ஹே ம்ருத்யுவே! **स त्वम्** - ப்ரஸித்தராயிருக்கும் நீர், **स्वर्ग्यम्** - அந்த மோக்ஷ ஸ்தாநத்தை ப்ரயோஜநமாக உடைய, **अग्निम्** -

"प्र ते ब्रवीमि तदु मे निबोध स्वर्ग्यमग्निं नचिकेतः प्रजानन् ।
अनन्तलोकाप्तिमथो प्रतिष्ठां विद्धि त्वमेतं निहितं गुहायाम् ॥" १४

அக்நியை [அதாவது: அக்நி ஸம்பந்தமான ஒரு கர்ம விசேஷத்தை] **अध्येषि** - அறிவீரன்றே? **तम्** - அதை, **श्रद्दधानाय** - [மோக்ஷத்தில்] ச்ரத்தையையுடைய, **मह्यम्** - எனக்கு, **प्रब्रूहि** - உபதேசியும். **स्वर्गलोकाः** - அந்த மோக்ஷ ஸ்தாநத்தை அடைந்திருப்பவர், **अमृतत्वं** - [தேச விசேஷ ப்ராப்தியுடன் ப்ரஹ்மத்தை அடைந்து தனது ஸ்வரூபாவிர்ப்பாவத்தைப் பெறுவதான] அம்ருதத்வத்தை, **भजन्ते** - பெறுகிறார்கள். **एतत्** - இதை, **द्वितीयेन वरेण** - இரண்டாவது வரமாக, **वृणे** - அர்த்திக்கிறேன்.

இவ்விடத்திற் சொல்லப்பட்டுள்ள அக்நி கார்யமானது, ஒரு அநுஸந்தாந விசேஷத்துடன் செய்யப்படும் ஒரு கர்மாவைக் குறிக்கின்றது. அம்மாதிரி உபாஸித்தால் உபாஸகர்கள் மோக்ஷத்தைப் பெறுவார்கள் என்று பெரியோர்கள் சொல்லக் கேட்டு, அதை அறிவதற்கு அவன் விரும்புகின்றான்.

'ஸ்வர்க்கம்' என்னும் பதம் இவ்விடத்தில் மோக்ஷத்தைக் குறிக்கின்றது என்றே சொல்லவேண்டும். அந்த சப்தம், ஜ்யோதிஷ்டோமாதி யாகங்களைச் செய்வதால் கிடைக்கக் கூடியதாயும் அல்பமாயும் அஸ்திரமாயுமுள்ள ஒரு லோகத்தைக் குறிப்பதுடன், சாச்வதமாயும் அநந்தமாயும் இருக்கும் மோக்ஷ ஸ்தாநத்தையும் குறிக்கும். இவ்விடத்தில் அந்த லோகத்தைப்பற்றிய ப்ரச்நத்திலும் ப்ரதிவசநத்திலும் 'அவ்விடத்தில் ஜநந மரணங்கள் இல்லை' என்று சொல்லப்பட்டிருப்பதே அந்த சப்தம் மோக்ஷ ஸ்தாநத்தைக் குறிக்கின்றது என்பதை ஸூசிப்பிக்கின்றது என்பது விளங்கும். நிற்க: மூன்றாவது வரத்தைக் கேட்குமிடத்தில் நசிகேதஸ் ப்ரசம்ஸித்த ஸ்வர்க்கம் போன்ற நச்வர பலங்களை நிந்தித்துப் பேசுகிறான். அவ்விதம் அந்த ஸ்வர்க்கத்தில் வெறுப்புள்ளவன், அதைப் பலமாக உடைய ஜ்ஞாநத்தைப் பெறுவதிலும் அதை அநுஷ்டிப்பதிலும் ஆவலுள்ளவனாக இருக்கிறான் என்று சொல்வது உபபந்நமாகமாட்டாது. 'ஸ்வர்க்க' சப்தம் ப்ரக்ருஷ்ட ஸுகத்தைச் சொல்லுகின்றதாகையால், அதை, நிரவதிக ஆநந்த ரூபமான மோக்ஷத்திற்கு வாசகமாகவும் எடுத்துக்கொள்ளலாம். அம்மாதிரி ப்ரயோகங்களும் ஏராளமாக இருக்கின்றன.

**अशनाया** - பசி; இது **अशन**- என்னும் சப்தத்திலிருந்து உண்டான பதம்; 'ஆ'காரத்தை அந்தத்திலுடைய ஸ்த்ரீலிங்க சப்தம். **पिपासा** - தாஹம். **पातुं इच्छा पिपासा.**

**स्वर्गलोकाः - स्वर्गो लोको येषान्ते** - என்று பஹுவ்ரீஹி. ஸ்வர்க்கத்தை ஸ்தாநமாக உடையவர்கள் என்பது பொருள்.

---

14. ம்ருத்யு பதில் சொல்லுகிறார்.

लोकादिमग्निं तमुवाच तस्मै या इष्टका यावतीर्वा यथा वा ।
स चापि तत्प्रत्यवदद्यथोक्तमथाऽस्य मृत्युः पुनरेवाह तुष्टः ॥ १५

[ப - ரை] **ते** - உனக்கு, **प्रब्रवीमि** - சொல்லுகிறேன் **मे** - என்னிடமிருந்து, **तत् उ** - அதை, **निबोध** - அறிந்துகொள்; **नचिकेतः** - ஹே நசிகேதஸ்ஸே! **स्वर्ग्यं** - மோக்ஷத்தைப் ப்லமாக உடைய, **अग्निम्** - அக்நியை, **प्रजानन्** - அறிந்துகொண்டு [அதை அநுஷ்டிக்கிறவன்], **अनन्तलोकाप्तिम्** - அநந்தனுகிற விஷ்ணுவின் லோக ப்ராப்தியையும், **अथ** - பிறகு, **प्रतिष्ठाम्** - [அவ்விடத்திலேயே] ஸ்திரமான இருப்பையும், [**लभते** - அடைகிறான்]. **एनम्** - இதை [அதாவது : இந்த ஜ்ஞாநம் மோக்ஷத்திற்கு ஹேது வென்பதை], **गुहायां निहितम्** - குஹைக்குள் வைக்கப்பட்டதாக [அதாவது : மற்றொருவராலும் அறியப்படாததாக], **त्वम्** - நீ, **विद्धि** - அறிந்துகொள்.

---

15. இவ்வாறு அதைப் புகழ்ந்து பேசிவிட்டு, ம்ருத்யுவானவர் நசிகேதஸ்ஸுக்கு அதை உபதேஶித்தார் என்று இந்த மந்த்ரம் சொல்லுகின்றது.

[ப - ரை.] **तस्मै** - அவனுக்கு [அந்த நசிகேதஸ்ஸுக்கு], **तम्** - அந்த, **लोकादिम्** - [கீழ்ச் சொல்லப்பட்டுள்ள ஸ்வர்க்க] லோகத்திற்கு ஹேதுவான, **अग्निम्** - அக்நியை, **उवाच** - [ம்ருத்யு] உபதேஶித்தார். **इष्टकाः** - இஷ்டகைகள், **याः** - என்ன லக்ஷணத்துடன் கூடியவையாக இருத்தல் வேண்டும் என்பதையும், **यावतीः** - எவ்வளவு இஷ்டகைகள் தேவை என்பதையும், **यथा वा** - அந்த இஷ்டகைகளை எப்படிச் சயநம் செய்யவேண்டு மென்பதையும், [**उवाच** - சொன்னார்]. **स चाऽपि** - அவனும், **तत्** - அவை எல்லாவற்றையும், **यथोक्तम्** - (ம்ருத்யு) சொன்னபடியே, **प्रत्यवदत्** - திருப்பிச் சொன்னான். **अथ** - பிறகு, **मृत्युः** - ம்ருத்யுவானவர், **तुष्टः** - ஸந்தோஷம் அடைந்தவராய், **अस्य** - அவனுக்கு, **पुनरेव** - மறுபடியும், **आह** - சொன்னார்.

**इष्टका** - இது யாகத்தில் உபயோகப்படும் கல்லுக்குப் பெயர் **चयनम्** - ஒன்றன்மேல் ஒன்றாகவும் பக்கங்களிலும் யாகக் கற்களை அடுக்கும் வ்யாபாரம். அந்தக் கற்களுள் ஒன்றால் அக்நியை எடுப்பதற்கும் இந்த ஶப்தம் வாசகமாகும். இம்மாதிரி கற்களை அடுக்குவதையும், அவைகளின் ஸங்க்யை ப்ரகாரம் இவைகளையும், இந்த அக்நி வித்யைக்கு ப்ரதாந அங்கமாகப்பேசி யிருப்பதையும் பார்த்தால், இது கேவலம் கர்மமோவென்று ஒரு ஸந்தேஹம் ஜநிக்கக்கூடும். இது கேவலம் கர்மமன்று. கேவலம் கர்மமாக இருந்தால், இதற்கு மோக்ஷம் பலமாகமாட்டாது. **नास्त्यकृतः कृतेन** [கேவல கர்மங்களால் அக்ருதமான மோக்ஷம் லபிக்காது] என்று சொல்லப்பட்டிருக்கின்றது. இந்த வித்யையில் யாகம் செய்வதுபோன்ற கர்மம் ப்ரதாநமாக இருந்தாலும், இதற்குப்

तमब्रवीत् प्रीयमाणो महात्मा "वरं तवेहाद्य ददामि भूयः ।
तवैव नाम्ना भविताऽयमग्निः सृङ्काञ्चेमामनेकरूपां गृहाण ॥ १६

त्रिणाचिकेतस्त्रिभिरेत्य सन्धिं त्रिकर्मकृत्तरति जन्ममृत्यू ।
ब्रह्मजज्ञं देवमीड्यं विदित्वा निचाय्येमाँ शान्तिमत्यन्तमेति ॥ १७

---

பரமாத்மோபாஸநத்துடன் ஸம்பந்தமுண்டு என்று சொல்லப்படுகிறபடியால், இதை வித்யையென்று சொல்வதற்கு ஆக்ஷேபமில்லை [17-வது மந்த்ரத்தைப் பார்க்க.]

**तुष्टः** - ஒருதடவை சொன்ன மாத்ரத்தால் ஸகலத்தையும் தவறாது க்ரஹித்த ஶிஷ்யனுடைய க்ரஹண ஸாமர்த்யத்தைப் பார்த்தவுடன் ம்ருத்யுவுக்கு ஸந்தோஷம் உண்டாயிற்று. புத்திமானாக இருக்கும் ஶிஷ்யனிடத்தில் விஶேஷ ப்ரீதி ஜநிப்பது ஆசார்யர்களுக்கு ஸஹஜமே.

---

16. ம்ருத்யு, தாம் அடைந்த ஸந்தோஷத்தின் பரீவாஹமாக நசிகேதஸ்ஸுக்குப் பாரிதோஷிக மொன்றைக் கொடுக்கிறார்.

[ப - ரை.] **प्रीयमाणः** - ஸந்துஷ்டரான, **महात्मा** - [அந்த ஸந்தோஷத்தால்] விஶாலமான மநஸ்ஸை உடைய [ம்ருத்யு], **तम्** - அவனை (நோக்கி), **अब्रवीत्** - சொன்னார். '**तव** - உனக்கு, **इह** - இந்த ஸந்தர்ப்பத்தில், **अद्य** - இப்பொழுது, **भूयः** - மறுபடியும், **वरं ददामि** - ஒரு வரத்தைக் கொடுக்கிறேன். **अयमग्निः** - இந்த அக்நியானது [என்னால் உபதேஶிக்கப்பட்ட இந்த அக்நி], **तवैव नाम्ना** - உன்னுடைய பெயரினாலேயே [அதாவது: நாசிகேதம் என்னும் பெயருடனேயே], **भविता** - ப்ரஸித்தியைப் பெறும். **अनेकरूपाम्** - விசித்ரமான, **इमां सृङ्काञ्च** - இந்த ரத்நமாலையையும், **गृहाण** - வாங்கிக்கொள்.'

இந்த வரத்தை ம்ருத்யு தாமாகவே கொடுக்கிறாராகையால், நசிகேதஸ்ஸால் அர்த்திக்கப்படவேண்டிய மூன்று வரங்களுள் இது ஒன்றாக மாட்டாது. இம்மாதிரி புத்திஶாலியான ஶிஷ்யர்களுக்கு வரதாதாக்கள் தாமே பரிசு வழங்குவது வழக்கம். ரத்நமாலை கொடுப்பதைக்காட்டிலும், அந்த அக்நிக்கு அவனுடைய பெயரை இட்டு அது வழியாக அவனுடைய பெயருக்கு ப்ரஸித்தியை ஸம்பாதித்து வைப்பது மிகவும் உயர்ந்த பரிசே ஆகும். 'ஸ்ருங்கை' என்பது மதுரமான ஒரு ஶப்தத்தைச் செய்யும் ரத்நமாலைக்குப் பெயரென்று சொல்வார்கள்.

---

17. இந்த அக்நிவித்யைக்கு ப்ரஹ்மோபாஸநமே அங்கி என்பதையும், அந்த உபாஸநத்தின் ப்ரகாரம் எப்படிப்பட்டது என்பதையும், இந்த வித்யையின் பலம் அத்யந்த ஶாந்தியை லக்ஷணமாக உடைய

மோக்ஷமே என்பதையும் இந்த மந்த்ரம் விளக்குகின்றது. வேதத்தில் "**अयं वाव यः पवते**" என்று ஓரிடத்தில் மூன்று அநுவாகங்கள் உண்டு. அவை இந்த அக்நி கார்யத்தில் விநியோகப்படுமவை. அந்த அநுவாகங்களை எவன் அத்யயநம் செய்கிறானோ, அவன் 'த்ரிணாசிகேதன்' என்னும் பதத்தால் குறிக்கப்படுகின்றான். இந்த வித்யை நசிகேதஸ்ஸின் பெயரால் ப்ரஸித்தமானதன்றோ?

[ப - ரை.] **त्रिणाचिकेतः**—நசிகேதஸ்ஸின் பெயரால் ப்ரஸித்தி பெற்றுள்ள மூன்று அநுவாகங்களையும் அத்யயநம் செய்கிறவன் [அதாவது: தர்மராஜனால் உபதேசிக்கப்பட்ட இந்தக் கர்மத்தைச் செய்கிறவன்], **त्रिकर्मकृत्** - மூன்று கர்மங்களையும் யதாவத்தாகச் செய்துகொண்டு, **त्रिभिः** - மூன்று தடவை இந்த அக்நியைச் சயநம் செய்தானேயானால், **सन्धिम्** - ஸம்பந்தத்தைப் பெற்று [அதாவது: பரமாத்மோபாஸநத்துடன் ஸம்பந்தத்தைப் பெற்று], **जन्ममृत्यू** - ஜநந மரணங்களை, **तरति** - தாண்டுகிறான். [அவன்] **ब्रह्मजज्ञम्** - ஜீவாத்மாவை, **ईड्यं देवम्** - ஸ்தோத்ரம் செய்வதற்கு அர்ஹமான பரமாத்மாத்மகமாக, **विदित्वा** - அறிந்து, **निचाय्य** - [அப்படி ப்ரஹ்மத்தைத் தனது அந்தராத்மாவாக உடைய தன்னை] ஸாக்ஷாத்கரித்து, **इमां शान्तिम्** - இந்த ஶாந்தியை [அதாவது: கீழ்ச் சொல்லப்பட்டுள்ள ஜநந மரண ரூபமான அநர்த்தத்தின் ஶாந்தியை], **अत्यन्तम्** - ஶாஶ்வதமாக, **एति** - அடைகிறான்.

பரமாத்மோபாஸநம் இரண்டு ப்ரகாரமாகச் செய்யப்படலாம். 'ஜீவன் பரமாத்மாவை அந்தராத்மாவாக உடையவன்' என்று ஜீவாத்மாவை உபாஸிப்பது ஒன்று; 'ஜீவாத்மாவை ஶரீரமாக உடைத்தாயிருக்கிறான் பரமாத்மா' என்று பரமாத்மாவை உபாஸிப்பது மற்றொன்று. இவ்விருவரும் பரமாத்மோபாஸகர்களே யாவார்கள். இந்த இருவர்க்கும் மோக்ஷமே ப்ரயோஜநம். ஆகையால், இவ்விடத்தில் படிக்கப்பட்டிருக்கும் பலம் மோக்ஷமே என்பது ஸித்தம். நிற்க: 'ஜநந மரண ரூபமான அநர்த்தம் அத்யந்தமாக ஶாந்தியை அடைகின்றது என்று சொல்லப்பட்டிருப்பதும் இந்த நிர்ணயத்தையே த்ருடப்படுத்துகின்றது. அடுத்து வரும் 19-வது மந்த்ரத்தில் "**करोति तद्येन पुनर्न जायते** [மறுபடியும் ஜநநம் என்பது, எதைச் செய்தால் ஏற்படாமல் இருக்குமோ அதை இவன் செய்கிறான்] என்று சொல்லப்பட்டிருப்பதும் கவனிக்கத் தகுந்தது.

**त्रिकर्मकृत्** - மூன்று கர்மங்களையும் அநுஷ்டிக்கிறவனுய். மூன்று கர்மங்களாவன :—யாகம் செய்வது, வேதத்தை அத்யயநம் செய்வது, தாநம் கொடுப்பது. இவை வர்ணாஶ்ரம தர்மங்களெல்லாவற்றுக்கும் உபலக்ஷணம். மோக்ஷத்தை இச்சித்துப் பகவானிடத்தில் பக்தியையோ ப்ரபத்தியையோ செய்கிறவர்களும், அந்தப் பக்தி ப்ரபத்திகளுக்கு அங்கமாகக் கர்மங்களை அநுஷ்டித்தே வரவேண்டுமென்பதும் ஶாஸ்த்ரம்.

त्रिणाचिकेतस्त्रयमेतद्विदित्वा य एवं विद्वाँश्चिनुते नाचिकेतम् ।
स मृत्युपाशान् पुरतः प्रणोद्य शोकातिगो मोदते स्वर्गलोके ॥ १८

यो वाप्येतां ब्रह्मजज्ञात्मभूतां चितिं विदित्वा चिनुते नाचिकेतम् ।
स एव भूत्वा ब्रह्मजज्ञात्मभूतः करोति तद्येन पुनर्न जायते ॥ १९

---

**ब्रह्मजज्ञम्** - **ब्रह्मजश्चासौ ज्ञश्च** [ப்ரஹ்மத்திலிருந்து உண்டானவனும் சேதநனும் இருப்பவன்.] ஜீவன் நித்யனாக இருந்தாலும் அவனுடைய ஸத்தை பகவத்தீநமானதால், அவனை ப்ரஹ்மத்தினிடத்திலிருந்து உண்டானவனாகச் சொல்லக்கூடும்.

**देवम्** - இது பரமாத்வைக் குறிக்கும். ஆனால், அந்தப் பொருளை எடுத்துக் கொண்டால், 'ஜீவனை ப்ரஹ்மமென்று அறிந்து' என்று ஜீவ பரமாத்மைக்யம் சொன்னதாகும். அது அநேக ஶ்ருதி வாக்யங்களுக்கு விருத்தமாகையால், அந்த அர்த்தம் த்யஜிக்கப்பட்டு, 'பரமாத்மாவை ஆத்மாவாக உடையவன்' என்னும் பொருள் க்ரஹிக்கப்படுகின்றது.

---

18. மறுபடியும் இந்தக் கர்மாவின் மஹிமையே புகழப்படுகின்றது.

[ப - ரை.] **यः** - எந்த, **त्रिणाचिकेतः** - த்ரிணாசிகேதன், **एतत् त्रयम्** இந்த மூன்றையும் [அதாவது: ப்ரஹ்ம ஸ்வரூபம், அந்த ப்ரஹ்மத்தை ஆத்மாவாக உடைய ஜீவ ஸ்வரூபம், சயநம் செய்யப்படும் அக்நியின் ஸ்வரூபம், ஆக இம்மூன்றையும்], **विदित्वा** - அறிந்து, **एवं विद्वान्** - அப்படிப்பட்ட ஜ்ஞாநத்தை உடையவனாக, **नचिकेतं** - நாசிகேதம் என்னும் பெயரைப் பெற்றிருக்கும் இந்த அக்நிகார்யத்தை, **चिनुते** - சயநம் செய்கிறானே, **सः** - அவன், **मृत्युपाशान्** - ம்ருத்யு பாஶங்களை [அதாவது: ராகத்வேஷாதி லக்ஷணங்களான ம்ருத்யு பாஶங்களை], **पुरतः** - [ஶரீரம் போவதற்கு] முன்னதாகவே, **प्रणोद्य** - விலக்கிவிட்டு, **शोकातिगः** - ஶோகத்தைக் கடந்தவனாய், **स्वर्गलोके** - மோக்ஷஸ்தாநத்தில், **मोदते** - ஆநந்தாநுபவம் செய்து கொண்டிருப்பான்.

**एतत् त्रयम्** - இந்த மூன்றையும். இந்தக் கர்மாவை அநுஷ்டிக்கும் காலத்தில் எவைகளின் அநுஸந்தாநம் முக்யமோ, அவைகளே இவ்விடத்தில் விவக்ஷிதங்கள். அவை: ப்ரஹ்மம், அதை ஆத்மாவாக உடைய ஜீவன், இவைகளின் ஜ்ஞாநத்துடன் செய்யப்படும் அக்நி சயநம், ஆக இந்த மூன்றின் ஸ்வரூபங்களே.

---

19. இந்த மந்த்ரத்தில் அபுநராவ்ருத்தி வ்யக்தமாகச் சொல்லப்படுகின்றது.

त्रिणाचिकेतस्त्रयमेतद्विदित्वा य एवं विद्वाँश्चिनुते नाचिकेतम् ।
स मृत्युपाशान् पुरतः प्रणोद्य शोकातिगो मोदते स्वर्गलोके ॥ १८

यो वाप्येतां ब्रह्मजज्ञात्मभूतां चितिं विदित्वा चिनुते नाचिकेतम् ।
स एव भूत्वा ब्रह्मजज्ञात्मभूतः करोति तद्येन पुनर्न जायते ॥ १९

---

**ब्रह्मजज्ञम्** - **ब्रह्मजश्चासौ ज्ञश्च** [ப்ரஹ்மத்தினிட மிருந்து உண்டான வனும் சேதநனும் இருப்பவன்.] ஜீவன் நித்யனாக இருந்தாலும் அவனுடைய ஸத்தை பகவத்தீநமானதால், அவனை ப்ரஹ்மத்தினிடத்திலிருந்து உண்டானவனாகச் சொல்லக்கூடும்.

**देवम्** - இது பரமாத்வைக் குறிக்கும். ஆனால், அந்தப் பொருளை எடுத்துக் கொண்டால், 'ஜீவனை ப்ரஹ்மமென்று அறிந்து' என்று ஜீவ பரமாத்மைக்யம் சொன்னதாகும். அது அநேக ஶ்ருதி வாக்யங்களுக்கு விருத்தமாகையால், அந்த அர்த்தம் த்யஜிக்கப்பட்டு, 'பரமாத்மாவை ஆத்மாவாக உடையவன்' என்னும் பொருள் க்ரஹிக்கப்படுகின்றது.

---

18. மறுபடியும் இந்தக் கர்மாவின் மஹிமையே புகழப் படுகின்றது.

[ப - ரை.] **यः** - எந்த, **त्रिणाचिकेतः** - த்ரிணசிகேதன், **एतत् त्रयम्** இந்த மூன்றையும் [அதாவது: ப்ரஹ்ம ஸ்வரூபம், அந்த ப்ரஹ்மத்தை ஆத்மாவாக உடைய ஜீவ ஸ்வரூபம், சயநம் செய்யப்படும் அக்நியின் ஸ்வரூபம், ஆக இம்மூன்றையும்], **विदित्वा** - அறிந்து, **एवं विद्वान्** - அப்படிப்பட்ட ஜ்ஞாநத்தை உடையவனாக, **नचिकेतं** - நாசிகேதம் என்னும் பெயரைப் பெற்றிருக்கும் இந்த அக்நிகார்யத்தை, **चिनुते** - சயநம் செய்கிறானோ, **सः** - அவன், **मृत्युपाशान्** - ம்ருத்யு பாஶங்களை [அதாவது: ராகத்வேஷாதி லக்ஷணங்களான ம்ருத்யு பாஶங்களை], **पुरतः** - [ஶரீரம் போவதற்கு] முன்னதாகவே, **प्रणोद्य** - விலக்கிவிட்டு, **शोकातिगः** - ஶோகத்தைக் கடந்தவனாய், **स्वर्गलोके** - மோக்ஷஸ்தாநத்தில், **मोदते** - ஆநந்தாநுபவம் செய்து கொண்டிருப்பான்.

**एतत् त्रयम्** - இந்த மூன்றையும். இந்தக் கர்மாவை அநுஷ்டிக்கும் காலத்தில் எவைகளின் அநுஸந்தாநம் முக்யமோ, அவைகளே இவ்விடத்தில் விவக்ஷிதங்கள். அவை: ப்ரஹ்மம், அதை ஆத்மாவாக உடைய ஜீவன், இவைகளின் ஜ்ஞாநத்துடன் செய்யப்படும் அக்நி சயநம், ஆக இந்த மூன்றின் ஸ்வரூபங்களே.

---

19. இந்த மந்த்ரத்தில் அபுநராவ்ருத்தி வ்யக்தமாகச் சொல்லப் படுகின்றது.

**एष तेऽग्निर्नचिकेतः स्वर्ग्यो यमवृणीथा द्वितीयेन वरेण ।**
**एतमग्निन्तवैव प्रवक्ष्यन्ति जनासस्तृतीयं वरन्नचिकेतो वृणीष्व " ॥** २०

[ப - ரை] **यो वाऽपि** - எவனொருவன், **एतां चितिम्** - இந்தச் சயநரூபமான கர்மாவை, **ब्रह्मजज्ञात्मभूतां** - 'தனது ஸ்வரூபம் ப்ரஹ்மாத்மகம்' என்னும் ஜ்ஞாநத்துடன் கூடினதாக, **विदित्वा** - அநுஸந்தாநித்துக்கொண்டு, **नचिकेतम्** - நசிகேதம் என்னும் அக்நியை, **चिनुते** - சயநம் செய்கிறானோ, **स एव** - அவன்தான், **ब्रह्मजज्ञात्मभूतो भूत्वा** - ப்ரஹ்மாத்மகமான ஸ்வாத்மாவை அநுஸந்தாநம் செய்கிறவனாகி, **येन पुनर्न जायते** - எதைச் செய்தால் மறுபடியும் பிறப்புள்ளவனாக மாட்டானோ, **तत् करोति** - அதைச் செய்தவனாவான்.

இந்தக் கர்மம் இவ்வாறு பகவதுபாஸந பூர்வகமாக இருத்தல் வேண்டுமென்றும், அந்த உபாஸநத்தால் அபுநராவ்ருத்தியை லக்ஷணமாக உடைய மோக்ஷமே ப்ரயோஜநமாகக் கிடைக்கின்றதென்றும் இந்த மந்த்ரங்கள் வ்யக்தமாகச் சொல்வதே இந்தக் கர்மத்திற்குப் பலமாகச் சொல்லப்படும் 'ஸ்வர்க்கம் மோக்ஷத்திற்கு வாசக'மென்பதை நன்றாக விளக்குகின்றது.

---

20. [ப - ரை] **यम्** - எதை, **द्वितीयेन वरेण** - இரண்டாவது வரத்தால், **अवृणीथाः** - ப்ரார்த்தித்தாயோ, **नचिकेतः** - ஹே நசிகேதஸ்ஸே! **स्वर्ग्य एषः** - மோக்ஷத்தை ப்ரயோஜநமாக உடைய இதுவே, **ते** - உனக்கு, [**उपदिष्टः** - உபதேசிக்கப்பட்டது]. **जनासः** - ஜநங்கள், **एतमग्निम्** - இந்த அக்கியை, **तवैव** [**नाम्ना**] - உன்னுடைய [பெயரினாலேயே], **प्रवक्ष्यन्ति** - சொல்லுவார்கள். **नचिकेतः** - ஹே நசிகேதஸ்ஸே! **तृतीयं वरम्** - மூன்றாவது வரத்தை, **वृणीष्व** - வரித்துக்கொள்.

**जनासः** - இது வைதிகமான ரூபம்; **जनाः** - என்பது லௌகிகம்.

கீழே 13-வது ஶ்லோகத்தின் அர்த்தத்தை விவரிக்குமிடத்தில், 'இவ்விடத்தில் ப்ரயோகம் செய்யப்பட்டிருக்கும் 'ஸ்வர்க்க' ஶப்தம் மோக்ஷத்தைக் குறிக்கின்றது; ப்ரஸித்த ஸ்வர்க்கத்தைக் குறிக்கவில்லை' என்று விவரித்திருக்கிறோம். பகவான் பாஷ்யகாரர் அம்மாதிரியே திருவுள்ளம்பற்றி இருக்கிறார். "**स्वर्गशब्देनात्र परमपुरुषार्थलक्षणो मोक्षोऽभिधीयते**" [இவ்விடத்தில் 'ஸ்வர்க்க' ஶப்தமானது பரம புருஷார்த்தமாகிற மோக்ஷத்தையே சொல்லுகின்றது] என்பது அவருடைய திவ்ய ஸூக்தி. இந்த அர்த்தம் அந்த ஶப்தத்திற்கு முக்யமான அர்த்தமாகுமா? இல்லாவிட்டால், அமுக்யமான அர்த்தமேயா? என்று பெரியதொரு விவாதமுண்டு. இரண்டும் உபபந்நமாக மாட்டாது என்பது பூர்வ பக்ஷியின் கக்ஷி. "**स्वर्गापवर्गमार्गाभ्याम्**" "**स्वर्गापवर्गयोरेकम्**" "**न स्वर्गं नापुनर्भवम्**" இத்யாதியான ப்ரயோகங்களில் 'ஸ்வர்க்க' ஶப்த

மானது அபவர்க்க மென்றும் அபுநர்ப்பவ மென்றும் சொல்லப்படும் மோக்ஷத்தைக் காட்டிலும் வேறுபட்டதாக லோகத்திலும் வேதத்திலும் வ்யவஹரிக்கப்படுகின்றது. புராண கர்த்தாக்களும்,

"ध्रुवसूर्यान्तरं यत्तु नियुतानि चतुर्दश।
स्वर्गलोकस्स कथितो लोकसंस्थानचिन்तकैः॥"

['ஸூர்ய த்ருவாந்தர்வர்த்தியான லோக விசேஷமே ஸ்வர்க்க மென்று சொல்லப்படுகின்றது'] என்று ஸ்வர்க்கத்தை ப்ரக்ருதி மண்டலத்திற்கு உட்பட்டதாகவே சொல்லுகிறார்கள். ஆகையால், மோக்ஷ மென்பது 'ஸ்வர்க்க' சப்தத்திற்கு முக்யார்த்தமாக மாட்டாது.

அமுக்யமாக அர்த்தம் கொள்ளலாமோ வென்றால், 'முக்ய மான அர்த்தத்திற்குப் பாதக மிருக்கும் இடங்களில் மாத்ரம் அமுக் யார்த்த க்ரஹணம் கூடுமன்றோ? இவ்விடத்தில் முக்யார்த்தத்தைப் பாதிக்குமவை ஒன்றுமில்லையே!' பாதகங்கள் இருக்கின்றனவே என்றால், அவை யாவை? 'நசிகேதஸ்ஸால் அபேக்ஷிக்கப்படும் ஸ்வர்க்கமானது ஜரை மரணம் அற்றது என்றும், அதில் வஸிக்குமவர்கள் அம்ருதத்வத் தைப் பெறுகிறார்கள் என்றும் சொல்லப்பட்டிருப்பது பாதகமன்றோ? ப்ராக்ருத ஸ்வர்க்கத்திற்கு இம்மாதிரியான பெருமை இல்லை' என்பது ஒன்று. மற்றொன்று, 'நசிகேதஸ் மோக்ஷத்தைத் தவிர்த்த வேறு பலத்தை அபேக்ஷியாதவன்; பலாந்தரங்களை அவன் நிந்திக்கிறான். அவன் எப்படி க்ஷயிஷ்ணுவா யுள்ள ப்ராக்ருத ஸ்வர்க்கத்தை அபேக்ஷிப்பான்?' என்பதுதான். இவை பாதகங்க ளாகமாட்டா. ஏனென்றால்: 'ப்ராக்ருத ஸ்வர்க்கத்தில் வஸிப்பவர்களைப் பற்றிப் பேசுகையில், புராணங்கள், 'அவர்களுக்குக் கிழத்தனம் மரணம் முதலியவை இல்லை யென்று சொல்லவில்லையா? அவர்கள் அம்ருத பாநம் செய்கிறபடியால் அவர் களுக்கு அம்ருதத்வமு முண்டு' என்றும் சொல்லுகின்றனவே. ஆபே க்ஷிகமாகவாவது அவர்களுக்கு இவை உண்டு என்று ஏற்பட்டால், இவை எப்படிப் பாதகங்களாகும்? நசிகேதஸ் பலாந்தர விமுகன் என் பது உண்மையே. ஆனால் அந்த வைமுக்யம் இரண்டாவது வரத்தைக் கேட்கும் காலத்தில் அவனுக்கு இல்லை. இரண்டாவது வரத்தை அளிக் கும்பொழுது, 'அவனுக்கு ஹிதத்தைச் செய்யவேண்டும்' என்னும் எண் ணம் கொண்ட ம்ருத்யு, அவனால் ப்ரஶ்நம் செய்யப்படாமல் இருக்கை யிலும், அநந்த லோக ப்ராப்தியையும் அவ்விடத்தில் ப்ரதிஷ்டையையும் ஜந்ம ம்ருத்யுக்களைத் தாண்டி யிருக்கும் ஒரு ஸ்திதி விசேஷத்தையும் ப்ரஸ்தாவித்து, அது வழியாக மோக்ஷ ஸ்வரூபத்தை உபக்ஷேபிக்கவே, நசிகேதஸ்ஸுக்கு அதில் ஒரு ருசி உண்டாகி அவன் பலாந்தர வைமுக் யத்தைப் பெற்றான். அந்தத் தசையிற் செய்யப்பட்ட பலாந்தர நிந்தை, அதற்கு முன் செய்யப்பட்ட ஸ்வர்க்க ப்ரார்த்தநையை எப்படிப் பாதிக்கும்? ஆகையால் 'ஸ்வர்க்க' சப்தத்தின் முக்யார்த்தத்தைப்

பாதிக்கும் ஸாமக்ரீ ஒன்றுமில்லை என்றே சொல்லவேண்டும். ஆகை யால் அமுக்யார்த்தத்தை க்ரஹிப்பதும் உசிதமாகமாட்டாது.

இவைகளைத், தவிர்த்து 'மோக்ஷம்' என்று அர்த்தம் சொல்ல தற்கு வேறொரு பலீயஸ்ஸான ஆக்ஷேப முண்டு. உபக்ரமாதிகரண ந்யாய ப்ரகாரம் முதலில் இருக்கும் ப்ரஶ்ந வாக்யத்தில் காணப்படும் 'ஸ்வர்க்க' ஶப்தமே பலவத்தரம். உபஸம்ஹாரத்தில் காணப்படும் வாக்யங்க ளெல்லாம் துர்ப்பலங்களே. ஆகையால், பிந்தித் தென்படும் ஜரா ம்ருத்யு தரணம் அம்ருதத்வத்தை அடைவது முதலான வாக்யங்களைக்கொண்டு, பூர்வம் சொல்லப்பட்டுள்ள 'ஸ்வர்க்க' ஶப்தத்தின் அர்த்தத்தை இவை களுக்கு ஒத்துவரும்படி இசைப்பது ந்யாய விருத்தம். முதலில் இருப் பது ஸங்க்யையில் அல்பமாகவும், பிந்தி வருவது பஹுவாகவும் இருந்த போதிலும், உபக்ரமத்தில் இருப்பதே ப்ரபல மென்பது, ந்யாயமன்றோ? இதுதான் பூர்வபக்ஷிகளின் வாதம்.

இவைகளுக்கு ஸமாதாநமாக, முதலில் 'ஸ்வர்க்க' ஶப்தத்திற்கு மோக்ஷமும் முக்யார்த்தமாகக் கூடுமென்று அநேக ப்ரமாணங்களைக் கொண்டு ஸித்தாந்திகள் ஸாதிக்கிறார்கள். அப்படிப்பட்ட ஶக்தி அந்த ஶப்தத்திற்கு உண்டு என்பதை ஸ்தாபித்துவிட்டு, அப்படிப்பட்ட ப்ரயோகமும் இருக்கின்றது என்று அநேக ஶ்ருதி வாக்யங்களையும் உதாஹரித்திருக்கிறார்கள்.

"तस्यां हिरण्मयः कोशः स्वर्गो लोको ज्योतिषावृतः"
"तेन धीरा अपि यन्ति ब्रह्मविदः स्वर्गं लोकमित ऊर्ध्वा विमुक्ताः"
"अपहत्य पाप्मानमनन्ते स्वर्गे लोके ज्येये प्रतितिष्ठति"

இம்மாதிரியான அத்யாத்ம ஶாஸ்த்ர வாக்யங்களில் 'ஸ்வர்க்க' ஶப்தம் மோக்ஷ மென்னும் முக்யார்த்தத்துடனேயே ப்ரயோகம் செய்யப்பட் டிருக்கின்றது. பௌராணிகர்களால் கல்பிக்கப்படும் முக்யார்த்தம் இம் மாதிரி ஶ்ருதி ப்ரயோகங்களுக்கு விருத்தமாகையால், அது அநா தரணீயமே.

இரண்டாவது: ப்ரக்ருதி மண்டலத்திற்கு உட்பட்டிருக்கும் ஒரு லோக விஶேஷமே 'ஸ்வர்க்க' ஶப்தத்தின் முக்யார்த்தம் என்று ஒத்துக்கொண்டபோதிலும், அந்த அர்த்தத்தை த்யஜித்து 'மோக்ஷ' மென்னும் அமுக்யார்த்தத்தை க்ரஹிக்கும்படியாகப் பாதக ஸாமக்ரீகள் பஹுவாக இருக்கின்றனவென்று நிரூபிக்கப்படுகின்றது. ப்ரஸ்துத வாக்யங்களில், அத்யாத்ம ஶாஸ்த்ர ஸித்தமான அபஹதபாப்மத்வம் முதலிய எட்டு ப்ரஹ்ம குணங்களின் ஆவிர்ப்பாவமே வ்யக்தமாகச் சொல்லப்படுகின்றது. அப்படிப்பட்ட ப்ரஹ்ம குணங்களின் ஆவிர்ப் பாவம் ப்ராக்ருத ஸ்வர்க்கத்தை அடையுமவர்களுக்கு ஸம்பவிக்க மாட்டாதாகையால், அந்த ஆவிர்ப்பாவத்தின் ப்ரதீதி பூர்வபக்ஷிகள்

சொல்லும் முக்யார்த்தத்திற்குப் பலவத்தான பாதகம். எவ்விடத்தில் அந்த ஆவிர்ப்பாவம் தோன்றுகிறதென்றால் :—(1) "स्वर्गे लोके न भयं किञ्च नास्ति" என்று முதல் ப்ரஶ்ந மந்த்ரத்தில் அபஹதபாப்மத்வம் ப்ரதிபாதிக்கப்படுகின்றது. ஸ்வர்க்கத்தில் வஸிப்பவர்களுக்கு 'எப்பொழுது இவ்விடமிருந்து விழுந்து விடுவோமோ ?' என்று ஒரு பயமுண்டு. அப்படிப்பட்ட பீதியின் அபாவமே இவ்விடத்தில் விவக்ஷிதம். அது அபஹதபாப்மா எவனோ அவனுக்கே ஸம்பவிக்குமன்றோ ? (2, 3) "न तत्र त्वम जरया बिभेति" என்பதால் விஜரத்வமும் விம்ருத்யுத்வமும், (4, 5) "उभे तीर्त्वा अशनायापिपासे" என்பதால் விஜிகத்ஸத்வமும் அபிபாஸத்வமும், (6) "शोकातिग:" என்பதால் விஶோகத்வமும், (7, 8) "मोदते स्वर्गलोके" என்பதால் ஸத்யகாமத்வமும் ஸத்ய ஸங்கல்பத்வமும் ப்ரதிபாதிக்கப்படுகின்றன. இரண்டாவது :—"स्वर्गलोका अमृतत्वं भजन्ते" என்னும் இரண்டாவது ப்ரஶ்ந மந்த்ரத்தில் [13-வது மந்த்ரம்] சொல்லப்பட்டுள்ள 'அம்ருதத்வ' ஶப்தம் அத்யாத்ம ஶாஸ்த்ரத்தில் மோக்ஷமென்னும் அர்த்தத்திலேயே ப்ரயோகம் செய்யப்பட்டிருக்கின்றது. மூன்றுவது :—"ततो मया नाचिकेतश्चितोऽग्निरनित्यैर्द्रव्यैः प्राप्तवानस्मि नित्यम्" [II—10] என்னும் இடத்தில், 'நித்ய பலமாகிற ப்ரஹ்ம ப்ராப்திக்கு ஸாதநமாயிருக்கும் ஜ்ஞாநத்தை இந்த அக்நி சயநத்தால் நான் பெற்றேன்' என்று நாசிகேத அக்நியினால் ப்ராப்யமான வஸ்து பரப்ரஹ்மமே என்பது வற்புறுத்தப்படுகின்றது. இது ப்ரஸித்த ஸ்வர்க்கத்திற்கு ஸம்பவிக்குமோ ?

நிற்க: 'अमृतत्वं भजन्ते' [அம்ருதத்வத்தை அடைகிறார்கள்] என்னுமிடத்திலுள்ள 'அம்ருத' ஶப்தத்தை முக்த பரமாக எடுத்துக் கொள்வதே உசிதமாகும். மேல் [29-வது] மந்த்ரத்தில் இந்த 'அம்ருத' ஶப்தம், அம்மாதிரி முக்தர்களைச் சொல்வதாகவே ப்ரயோகம் செய்யப்பட்டிருக்கின்றது. ["अजीर्यताममृतानाम्"]. இப்படி அர்த்தம் ஸம்பவிக்கையில், அதை முக்த பரமாக எடுத்துக்கொள்ளாமல், ஆபேக்ஷிகமாக எடுத்துக்கொண்டு, அப்படிப்பட்ட ஆபேக்ஷிகமான அம்ருதத்வத்தை அவலம்பித்து முக்யார்த்தத்தை நிலைநிறுத்தப் பார்ப்பதுஉசிதமாகுமோ?

இரண்டாவது வரத்தைப் பெறுவதற்குமுன் நசிகேதஸ்ஸுக்குப் பலாந்தர வைமுக்யம் இல்லையென்று சொல்வதும் உபபந்நமாக மாட்டாது. இரண்டாவது வரத்தைக் கேட்கும்பொழுதே அவனுக்கு மோக்ஷத்தில் அபிநிவேஶம் இருந்தது என்பது, அந்த ப்ரஶ்ந வாக்யத்தின் உட்கருத்தை அறியுமவர்களுக்கு விளங்கும். குணாஷ்டகத்தின் ஆவிர்ப்பாவத்தை மநஸ்ஸில் வைத்துக்கொண்டன்றோ அந்த ப்ரஶ்நம் கேட்கப்பட்டிருக்கிறது ?

உபக்ரமாதிகரண ந்யாயம் ஸித்தாந்திகளுக்கு விரோதிக்கும் என்று சொல்வதும் உபபந்நமில்லை. உபக்ரமத்திலுள்ள 'ஸ்வர்க்க'

"येयं प्रेते विचिकित्सा मनुष्ये अस्तीत्येके नायमस्तीति चैके ।
एतद्विद्यामनुशिष्टस्त्वयाऽहं वराणामेष वरस्तृतीयः ॥" २१

ஶப்தத்திற்கு மோக்ஷத்தையே முக்யார்த்தமாகக் கொள்ளும் ஸித்தாந்திகளுக்கு அந்த ந்யாயத்தின் ஸஹாயத்தை அபேக்ஷிக்க ஆவஶ்யகதையே இல்லையன்றோ? பாதன் சொல்லுமிடத்திலும் உபஸம்ஹாரத்தில் காணப்படும் வாக்யங்கள் பஹுவாக இருக்கிறபடியால், உபக்ரமத்திலுள்ள அல்ப வாக்யத்தை அவை பாதிக்குமென்பதே ந்யாய வித்துக்களின் மர்யாதை. இரண்டு வாக்யங்களும் ஸம ஸங்க்யாகங்களாக இருக்குமிடத்தில் மாத்ரமன்றோ, பரஸ்பர விரோதம் நேர்ந்தால் முக்யார்த்தத்திற்கு ப்ராபல்யத்தைச் சொல்லுகின்றது ஶாஸ்த்ரம்? ஆகையால் உபக்ரம ந்யாய விரோதம் வருமென்று சொல்வது வீண் வார்த்தையே. இம்மாதிரியான பல காரணங்களைக்கொண்டு இந்த ப்ரகரணத்தில் 'ஸ்வர்க்க' ஶப்தத்தை மோக்ஷ பரமாக எடுத்துக்கொள்வதே உபபந்நமென்று நமது ஆசார்யர்கள் விவரித்திருக்கிறார்கள்.

---

21. நசிகேதஸ் மூன்றாவது வரத்தைக் கேட்கிறான். 'ஸ்தூலமாகப் பார்க்கும்பொழுது, தேஹம் போனவுடன் ஜீவனும் போய் விடுகிறானா? சிலர் போய்விடுகிறானென்றும் சிலர் போகவில்லையென்றும் சொல்லுகிறார்களே! எது தத்யம்?' என்று தேஹாதிரிக்தமான ஜீவ ஸ்வரூபமே இவ்விடத்தில் ப்ரஶ்நம் செய்யப்படுவதுபோலத் தோன்றும். அது பூர்வாபர விருத்த மாகையால், ஸ்ரீ பாஷ்யகாரர் இந்த மந்த்ரத்தின் ஸங்கதமான தாத்பர்யத்தைப் பின் வருமாறு அநுக்ரஹித்திருக்கிறார். "अत्र परमपुरुषार्थरूपब्रह्मप्राप्तिलक्षणमोक्षयाथात्म्यविज्ञानाय तदुपायभूतपरमात्मोपासनपरावरात्मतत्वजिज्ञासया अयं प्रश्नः क्रियते" [ப்ரஹ்ம ப்ராப்தியை லக்ஷணமாக உடையது மோக்ஷம். அதுதான் பரம புருஷார்த்தம். அந்த மோக்ஷத்தின் உண்மையை அறியவேண்டுமென்பது நசிகேதஸ்ஸின் நோக்கம். அதைப் பெறுவதற்கு 'பரதத்வம் எது? அவரதத்வம் எது? பரமாத்மாவை உபாஸிப்பது என்றால் என்ன?' என்பதை முதலில் அறிந்துகொள்ள வேண்டியது அவஶ்யமாகையால், அவைகளைப்பற்றியே இந்த ப்ரஶ்நம் செய்யப்படுகின்றது]. நசிகேதஸ் பெரியோர்களிடமிருந்து, ஜீவாத்மாவுக்குத் தனது கடைசி தேஹம் போனபிறகு அபஹத பாப்மத்வம் முதலான எட்டு குணங்களும் ஆவிர்ப்பவிக்கின்றன வென்பதைக் கேட்டிருந்தான். ஆகையால், முதலில் இரண்டு மந்த்ரங்களால் அப்படிப்பட்ட மோக்ஷத்திற்கு ஸாதநமாயுள்ள அக்நியை உபதேஶிக்க வேண்டுமென்று ப்ரார்த்தித்தான். இப்பொழுது அந்த மோக்ஷத்தைப் பற்றிப் பல பெயர் பலவிதமாகச் சொல்லுகிறபடியால், அது விஷயமாக ஸந்தேஹமுண்டாக அதைத் தெரிந்துகொள்ளும்பொருட்டு இந்த

"देवैरत्राऽपि विचिकित्सितं पुरा न हि सुविज्ञेयमणुरेष धर्मः ।
अन्यं वरन्नचिकेतो वृणीष्व मा मोपरोत्सीरति मा सृजैनम् ॥" २२

மூன்றாவது வார்த்தைக் கேட்கிறான். 'அப்படிப்பட்ட அபஹத பாப்மத்வம் முதலிய எட்டு குணங்களுடன் கூடியவன் முக்த ஆத்மா என்று சிலரும், அப்படி இல்லையென்று மற்றும் சிலரும் சொல்லுகிறார்களே; உம்மால் உபதேசிக்கப்பட்டு இதைத் தெளிய அறிந்துகொள்ள நான் விரும்புகிறேன்' என்பதே இந்த மந்த்ரத்தின் ஸங்கதமான அர்த்தம். இந்த அர்த்தமே ஸங்கதமென்பது போகப்போக விளங்கும்.

[ப - ரை] **मनुष्ये** - ஒரு மனிதன் [அதாவது ஒரு ஜீவன்], **प्रेते** - ஶரீர வியோகம் பெற்றவுடன் [அதாவது: ஸர்வ பந்த நிர்மோக்ஷம் நேரும் காலத்தில் எந்த ஶரீரம் கடைசியாக அவனால் விடப்படுகிறதோ அந்த ஶரீரம் போனவுடன்], **'अयमस्ति'** - 'அவன் இருக்கிறான் [அதாவது: ஆவிர்ப்பூதங்களான எட்டு குணங்களோடு கூடியிருக்கிறான்]', **इत्येके** - என்று சிலரும், **'अयं नास्ति'** - 'அவன் இல்லை [அதாவது: ஆவிர்ப்பூத குணாஷ்டகனாக இல்லை], **इति चैके** - என்று மற்றும் சிலரும், [இவ்வாறு வாதிப்பதால் உண்டாகும்] **येयं विचिकित्सा** - யாதொரு ஸந்தேஹம் உண்டாகின்றதோ [அதை நிவ்ருத்தி செய்துகொள்ளும் பொருட்டு], **एतत्** - இதை [அதாவது: அந்த முக்தாத்மாவின் ஸ்வரூப யாதாத்ம்யத்தை], **त्वया अनुशिष्टः** - உம்மால் உபதேஶிக்கப்பட்டவனாய்க் கொண்டு, **अहं विद्याम्** - நான் அறிந்துகொள்ள வேண்டும். **वराणाम्** - [உம்மால் கொடுக்கப்பட்டுள்ள] வரங்களுக்குள், **एषः** - இது, **तृतीयो वरः**—மூன்றாவது வரம்.

முக்தாத்மாவின் ஸ்வரூபமே கேட்கப்பட்டிருந்த போதிலும், அந்தக் கேள்வியின் வழியாக மூன்று விஷயங்கள் கேட்கப்பட்டவையாகின்றன. அவையாவன : - உபேயமான ப்ரஹ்மத்தின் ஸ்வரூபம், உபேதாவாகிற ஜீவாத்ம ஸ்வரூபம், உபாயமாகிற உபாஸநத்தின் ஸ்வரூபம் என்பவைதாம். ஏனென்றால், இந்தக் கேள்விக்குப் பிந்தி சொல்லப்படும் ஸமாதானத்தில் இந்த மூன்று விஷயங்களும் விளக்கப்படுகின்றன. முக்தாத்ம ஸ்வரூப ஜ்ஞானமானது அதை அநுபந்தித்துள்ள மற்றை ஜ்ஞானங்களை அபேக்ஷித்தே நிற்கின்றதன்றோ ?

---

22. இவ்வாறு மோக்ஷ ஸ்வரூபத்தை நசிகேதஸ் கேட்டான். ம்ருத்யு, 'இது அதிகஹநமாயிற்றே. இதைப் பூர்ணமாக இவன் க்ரஹிப்பானா?' என்று ஶங்கித்து, 'இது வேண்டாம்; வேறு வரத்தைக் கேள்' என்கிறார்.

[ப - ரை] **अत्र** - இதில் [இந்த முக்த ஸ்வரூப விஷயத்தில்], **देवैरपि** - தேவர்களாலே கூட [ஜ்ஞானத்தில் சிறந்தவர்களால் கூட], **पुरा-**

**"देवैरत्राऽपि विचिकित्सितं किल त्वञ्च मृत्यो यन्न सुविज्ञेयमात्थ ।**
**वक्ताचास्य त्वादृगन्यो न लभ्यो नान्यो वरस्तुल्य एतस्य कश्चित् ॥"२३**
**"शतायुषः पुत्रपौत्रान् वृणीष्व बहून् पशून् हस्तिहिरण्यमश्वान् ।**
**भूमेर्महदायतनं वृणीष्व स्वयं च जीव शरदो यावदिच्छसि ॥ २४**

---

முன்காலத்தில், **विचिकित्सितम्** - ஸம்ஶயிக்கப்பட்டது. [ஒருவித நிச்சயமும் பெறப்படவில்லை]. **एष धर्मः** - இந்தத் தர்மமானது [இந்த விஷயமானது], **अणुः** - ஸூக்ஷ்மம். **न सुविज्ञेयं हि** - [ஆத்ம தத்வம் என்னும் இந்த விஷயம்] ஸுலபமாக அறியக்கூடியதன்று. **नचिकेतः** - ஹே நசிகேதஸ்ஸே! **अन्यं वरं वृणीष्व** - வேறு வரத்தை வரித்துக்கொள். **मा मा उपरोत्सीः** - நிர்ப்பந்திக்காதே நிர்ப்பந்திக்காதே. **एनं मा** - இந்த என்னை, **अतिसृज** - விட்டுவிடு.

---

23. நசிகேதஸ் பதில் சொல்லுகிறான்.

[ப - ரை]. **अत्र देवैरपि विचिकित्सितं किल** - தேவர்கள் கூட இதைப் பற்றி நிர்ணயம் பெறாமல் தடுமாறுகிறார்களல்லவா? **मृत्यो** - ஹே ம்ருத்யுவே! **त्वञ्च** - நீரும், **यत्** - எதை, **न सुविज्ञेयम्** - ஸுலபமாக அறியக்கூடாததாக, **आत्थ** - சொல்லுகிறீரோ [அதை நான் வேறு எவ்விதம் அறிந்துகொள்வேன்?] **अस्य** - இதனுடைய, **त्वादृगन्यो वक्ता** - உம்மைப் போன்ற மற்றொரு உபதேஷ்டா, **न लभ्यः** - கிடைக்கமாட்டார். [ஆகையால்] **एतस्य तुल्यः** - இதற்கு ஸமாநமான, **अन्यः कश्चिद्वरो न** - வேறு ஒரு வரமும் இல்லை.

---

24. நசிகேதஸ்ஸின் உறுதியை ம்ருத்யு அறிந்தார். ஆனால், 'ஒருகால் நசிகேதஸ்ஸின் புத்தி விஷயாஸக்தமாக இருக்குமோ? அப்படி இருந்தால் இந்த ரஹஸ்யோபதேஶத்திற்கு அவன் அர்ஹனாகமாட்டானே' என்று ஶங்கித்து, ம்ருத்யு கொஞ்சம் ப்ரலோபநம் செய்கிறார். நசிகேதஸ்ஸுக்கு மோக்ஷத்தில் இருக்கும் இச்சை த்ருடப்படட்டும் என்பதும் ம்ருத்யுவின் கருத்து.

[ப - ரை]. **शतायुषः** - நூறு வருஷம் ஜீவித்திருக்கும், [தீர்க்காயுஸ்ஸுக்களாக இருக்கும்], **पुत्रपौत्रान्** - பிள்ளை பேரன்களை, **वृणीष्व** - வரமாகக் கேட்டுக்கொள். **बहून् पशून्** - பஹுவான பசுக்களையும், **हस्तिहिरण्यम्** - யானைகளையும் ஸ்வர்ண ரூபமான த்ரவ்யத்தையும், **अश्वान्** குதிரைகளையும், [**वृणीष्व** - கேட்டுக்கொள்]. **भूमेर्महदायतनम्** - பூமியில் விஸ்தீர்ணமான ராஜ்யத்தையும், **वृणीष्व** - கேட்டுக்கொள். **स्वयम्** - தானும் [நீயும்], **यावच्छरद इच्छसि** . எவ்வளவு வர்ஷங்கள் [ஜீவித்திருக்க வேண்டுமென்று] விரும்புகிறாயோ, **[तावच्छरदः] जीव** - அவ்வளவு காலம் ஜீவித்திரு.

एतत्तुल्यं यदि मन्यसे वरं वृणीष्व वित्तं चिरजीविकाञ्च ।
महाभूमौ नचिकेतस्त्वमेधि कामानां त्वा कामभाजं करोमि ॥ २५
ये ये कामा दुर्लभा मर्त्यलोके सर्वान् कामाँ श्छन्दतः प्रार्थयस्व ।
इमा रामास्सरथास्सतूर्या न हीदृशा लंभनीया मनुष्यैः ।
आभिर्मत्प्रत्ताभिः परिचारयस्व नचिकेतो मरणं माऽनुप्राक्षीः ॥" २६

---

25. [ப - ரை]. **एतत्तुल्यम्** - [கீழ்க் கூறப்பட்டுள்ள] வரங்களுக்கு ஸமாநமென்று, **वरं मन्यसे यदि** - [மற்றொரு] வரத்தை நீ எண்ணும் பக்ஷத்தில், **वृणीष्व** - [அதையும்] கேட்டுக்கொள். **वित्तं चिरजीविकाञ्च** [அளவற்ற] த்ரவ்யங்களையும், அளவற்ற காலம் ஜீவித்திருப்பதையும் கேட்டுக்கொள். **महाभूमौ** - பெரிய பூமியில், **नचिकेतः** - ஹே நசிகேதஸ்ஸே! **त्वं एधि** - நீ சக்ரவர்த்தியாக ஆவாய். **कामानाम्** - [லோகத்தில்] ஆநந்தகரங்களாக எவை எவை உண்டோ அவை யெல்லாவற்றுக்கும், **त्वा** - உன்னை, **कामभाजम्** - காமநா விஷயமாக, **करोमि** - செய்கிறேன். [அதாவது: லோகத்தில் எவை எவை ப்ரார்த்திக்கத் தகுந்தவை யென்று ஜநங்களால் எண்ணப்படுகின்றனவோ, அவையெல்லாம் உன்னிடம் வந்து உன்னை ப்ரார்த்திக்கும்படி செய்கிறேன்.] **एधि-अस्** என்னும் தாதுவின் **लोट्** மத்யமபுருஷ ஏக வசநம்.

**कामानाम् - काम्यन्त इति कामाः** [எவை விரும்பப்படுகின்றனவோ அவைகளைக் 'காமங்கள்' என்று சொல்லக்கூடும்]. ஆகையால் **कामानाम्** என்பதற்கு, **काम्यमानानाम्** என்பது பொருள். அதாவது: அப்ஸரஸ் முதலிய விஷயங்கள். **कामभाजम्-कामं भजतीति कामभाक् [कामानां विषयतया भजतीत्यर्थः]** எதை நம்முடைய இச்சைக்கு விஷயமாக அடைகிறோமோ அது நமக்குக் 'காமபாக்' ஆகும். லோகத்திலிருக்கும் உத்க்ருஷ்ட பதார்த்தங்களுக் கெல்லாம் நசிகேதஸ்ஸை ப்ரார்த்தநா விஷயமாகச் செய்வதென்றால், அது எவ்வளவு உத்க்ருஷ்டமான பதவியாகும். 'காமாநாம்' என்னும் பதத்தில் காம ஶப்தத்திற்குக் 'காமிக்கப்படும் வஸ்துக்கள்' என்பது பொருள். 'காம பாஜம்' என்னும் பதத்திலுள்ள காம ஶப்தத்திற்குக் 'காமநை' [அதாவது: இச்சை] என்பது பொருள்.

---

26. [ப - ரை]. **मर्त्यलोके** - மநுஷ்ய லோகத்தில், **ये ये कामाः** - எந்த எந்தப் போகங்கள், **दुर्लभाः**-துர்லபங்களோ, **सर्वान् [तान्] कामान्** - அந்தந்தப் போகங்க ளெல்லாவற்றையும், **छन्दतः** - யதேஷ்டமாக, **प्रार्थयस्व** - வரித்துக்கொள். **इमाः** - இந்த [என்னால் கொடுக்கப்பட்டுள்ள] **सरथाः सतूर्या रामाः** - ரதம் வாத்யம் இவைகளுடன் கூடிய ஸ்த்ரீகள், [மநுஷ்யர்களுக்குத் துர்லபர்கள்]. **ईदृशाः**-இப்படிப்பட்டவர்கள், **मनुष्यैः**- மநுஷ்யர்களால், **न हि लभ्यनीया** - பெறக்கூடியவர்க ளல்ல. **मत्प्रत्ताभिः** என்னால் கொடுக்கப்பட்டுள்ள, **आभिः** - இவர்களால், **परिचारयस्व** - கைங்

" श्वोऽभावा मर्त्यस्य यदन्तकैतत् सर्वेन्द्रियाणां जरयन्ति तेजः ।
अपि सर्वं जीवितमल्पमेव तवैव वाहास्तव नृत्यगीते ॥ २७
न वित्तेन तर्पणीयो मनुष्यो लप्स्यामहे वित्तमद्राक्ष्म चेत्त्वा ।
जीविष्यामो यावदीशिष्यसि त्वं वरस्तु मे वरणीयस्स एव ॥ २८

---

கர்யம் செய்யப் பெற்றுக்கொள். **नचिकेतः** - ஹே நசிகேதஸ்ஸே! **मरणमनु** - மரணத்திற்குப் பின் வருமதை [ஸர்வ பந்த விநிர்மோக்ஷத்திற்குப் பின்வரும் முக்தாத்ம ஸ்வரூபத்தை], **मा प्राक्षीः** - கேட்காதே.

27. ம்ருத்யு இவ்வளவு தூரம் ப்ரலோபித்தும், நசிகேதஸ் அந்த ப்ரலோபந மொன்றுக்கும் வசப்படாமல், கலங்காத ஹ்ருதயத்துடன் பதில் சொல்லுகிறுன்.

[ப - ரை] **अन्तक** - ஹே ம்ருத்யோ!, **मर्त्यस्य** - மனிதனுடைய [போகங்களெல்லாம்], **श्वोऽभावाः** - நாளை இராதவை [அதாவது: இரண்டு தினங்கள்கூடத் தொடர்ந்திருக்குமவையல்ல]- **सर्वेन्द्रियाणां यदेतत्तेजः** - இந்த்ரியங்க ளெல்லாவற்றுக்கும் யாதொரு பலம் உண்டோ, **जरयन्ति** - [அதை அப்போகங்கள்] குறைத்து விடுகின்றன. **सर्वं जीवितमपि** - ஸகலமான ஆயுஸ்ஸும் [சதுர்முக ப்ரஹ்மா முதலான எல்லாருடைய ஆயுஸ்ஸும்] **अल्पमेव** - ஸ்வல்பமே [அளவுக்கு உட்பட்டதே]. **वाहाः** - [ரதம் முதலிய] வாஹநங்கள், **तवैव** - உமக்கே [இருக்கட்டும்]; **नृत्यगीते** - நர்த்தநம் பாட்டு [இம்மாதிரியான போகங்களும்], **तव** - உமக்கே.

எல்லாருடைய ஆயுஸ்ஸும் அல்பமே என்று சொன்னது, 'தீர்க்காயுஸ்ஸைக் கொடுக்கிறே' னென்று ம்ருத்யு செய்த ப்ரலோபநத்திற்குப் பதில். ரதம் முதலியவை உமக்கே இருக்கட்டும் என்பதன் தாத்பர்யம், 'எனக்கு அவைவேண்டாம்' என்பதே. இம்மாதிரி சொல்வது மர்யாதைக் குறைவு போலத் தோன்றும். தனக்கு ஸர்வதா அபேக்ஷை இல்லை என்பதைக் காட்டும்பொருட்டு அம்மாதிரி பேசுவது உண்டு.

28. [ப - ரை] **मनुष्यः** — மநுஷ்யன், **वित्तेन** - தநத்தால், **न तर्पणीयः** - த்ருப்தி அடையமாட்டான். [தநத்திலுள்ள த்ருஷ்ணை, எவ்வளவு தநம் கிடைத்தாலும் ஶமநம் அடையமாட்டாதன்றோ?] நிற்க: **त्वा** - உம்மை, **अद्राक्ष्म चेत्** - பார்த்துவிட்டால், **वित्तम्** - தநத்தை, **लप्स्यामहे** அடைந்துவிடுவோம். [ம்ருத்யுபோன்ற தேவதைகளின் அநுக்ரஹம் இருந்தால் தநம் அடைவது ஒரு ஶ்ரமமாகுமோ?]. **त्वम्** - நீர், **यावदीशिष्यसि** - எவ்வளவு காலம் [இந்த ம்ருத்யு பதத்தில்] ஈஶ்வரனாக இருக்கிறீரோ, **जीविष्यामः** - [அவ்வளவு பர்யந்தம்] நாங்களும் ஜீவித்திருப்போம். [உம்முடைய ஆஜ்ஞையை மீறி எங்களைக் கொல்பவனுமுண்டோ?] **मे वरणीयो वरस्तु** - ஆகையால் என்னுல் வரிக்கப்படவேண்டிய வரமோவென்றுல், **स एव** - அதுதான் [முன் நான் ப்ரஸ்தாவித்ததே].

अजीर्यताममृतानामुपेत्य जीर्यन्मर्त्यः क तदास्थः प्रजानन् ।
अभिध्यायन् वर्णरतिप्रमोदानतिदीर्घे जीविते को रमेत ॥ २९
यस्मिन्निदं विचिकित्सन्ति मृत्यो यत्सांपराये महति ब्रूहि नस्तत् ।"
योऽयं वरो गूढमनुप्रविष्टो नान्यन्तस्मान्नचिकेता वृणीते ॥ ३०

इति प्रथमा वल्ली ॥

---

29. [ப - ரை] **जीर्यन्** - கிழத்தனத்தால் [மரணம் முதலியவை களால்] பீடிக்கப்படும், **मर्त्यः** - மநுஷ்யன், **प्रजानन्** - விவேகியாக இருப்பானேயானால், **अजीर्यतां अमृतानाम्** - ஜரை யற்றும் மரணமற்று மிருக்குமவர்களுடைய [முக்தாத்மாக்களுடைய], **उपेत्य** - [ஸ்வரூபத்தை] அறிந்த பிறகும், **तदास्थः क** - அதில் ஆசையுள்ளவனாக [ஜரை மரணம் முதலிய உபத்ரவங்களுடன் கூடியிருக்கும் விஷய ஸுகங்களில் ஆஸ்தையுள்ளவனாக] இருப்பனோ? **वर्णरतिप्रमोदान्** - [ப்ரஹ்மத்தின்] ரூப விசேஷங்களையும் [ப்ரஹ்மபோகத்தால் ஜநிக்கும்] ஆநந்த விசேஷங்களையும், **अभिध्यायन्** - நன்றாக நிரூபித்துத் தெரிந்துகொண்ட, **कः** - எவன், **अनतिदीर्घे जीविते** - அத்யல்பமான ஆயுஸ்ஸில் [அத்யல்பமான இந்த ஐஹிக போகங்களில்], **रमेत** - ப்ரீதியுள்ளவனாக இருப்பான்?

**वर्णरतिप्रमोदान्** - 'வர்ணம்' என்பதற்கு 'ரூபம்' என்பது பொருள். ப்ரஹ்ம லோகத்தில் பகவானுக்குக் கோடி ஸூர்யன் உதித்தாற்போல் ரூபம் உண்டென்றும், நித்யர்கள் முக்தர்கள் இவர்களும் அப்படிப்பட்ட ரூபத்துடன் கூடியிருக்கிறார்களென்றும் சாஸ்த்ரங்கள் சொல்லுகின்றன. அம்மாதிரியான ரூபங்களைப் பார்ப்பது முதலானதால் பற்பல ஆநந்த விசேஷங்கள் ஜநிக்கும். அவைகளின் ஸ்வரூபத்தை அறிந்தவனுக்குக் குத்ஸிதமாயும் அஸ்திரமாயுமுள்ள விஷய ஸுகங்களில் ரதி ப்ரமோதங்கள் எவ்விதம் ஜநிக்கும்?

---

30. [ப - ரை]. **मृत्यो** - ஹே ம்ருத்யுவே! **महति** - பெரியதான, **यस्मिन्** - எந்த, **सांपराये** - பரலோக ஸாதந வ்யாபாரத்தில் [அதாவது: முக்தாத்ம ஸ்வரூபத்தை அறியும் விஷயத்தில்], **यदिदं विचिकित्सन्ति** - [பெரியோர்களும்] யாதொரு ஸம்சயத்தைச் செய்துகொண்டிருக்கிறார்களோ, **तत्** - அதை, **नः** - எனக்கு, **ब्रूहि** - சொல்லும். [இவ்வாறு நசிகேதஸ் சொல்லிமுடித்தான். அதற்குமேல் ச்ருதி சொல்லுகிறது.] **गूढम्** - அதிஸூக்ஷ்மமாயுள்ளதை [அதாவது: முக்தாத்ம தத்வத்தை], **अनुप्रविष्टः** - அநுப்ரவேசித்திருக்கும் [அதாவது: அதி ஸூக்ஷ்மமாயுள்ள முக்தாத்ம ஸ்வரூபத்தைப்பற்றிய], **योऽयं वरः** - யாதொரு வரம் உண்டோ, **तस्मादन्यत्** - அதைக்காட்டிலும் வேறுபட்ட ஒன்றையும், **नचिकेताः** - நசிகேதஸ்ஸானவன், **न वृणीते** - வரிக்கவில்லை.

முதல் வல்லி முற்றிற்று.

श्रीः

# ॥ अथ द्वितीयवल्ली ॥

हरिः ओम् ।

"अन्यच्छ्रेयोऽन्यदुतैव प्रेयस्ते उभे नानार्थे पुरुषँ सिनीतः ।
तयोश्श्रेय आददानस्य साधु भवति हीयतेऽर्थाद्य उ प्रेयो वृणीते ॥ १
श्रेयश्च प्रेयश्च मनुष्यमेतस्तौ संपरीत्य विविनक्ति धीरः ।
श्रेयो हि धीरोऽभिप्रेयसो वृणीते प्रेयो मन्दो योगक्षेमाद्वृणीते ॥ २

---

श्रीः

## இரண்டாவது வல்லி

1. தர்மராஜன் நசிகேதஸ்ஸைப் பரீக்ஷித்தார்; நசிகேதஸ்ஸுக்கு மோக்ஷத்தில் ஸ்திரமான நோக்கம் இருக்கின்றது என்பது வெளிப்பட்டது; ஆகையால் அவன் உபதேசத்திற்கு அர்ஹன் என்று நிச்சயித்து, மோக்ஷம் விரும்புவதைப் புகழ்ந்து பேசுகிறார்.

[ப - ரை] **श्रेयः**—மோக்ஷ மார்க்கம், **अन्यत्** - வேறு. **प्रेयः**—போக மார்க்கம், **अन्यदेव** - வேறு. [மோக்ஷ மார்க்கமே ஶ்லாக்யம் என்பது இதன் தாத்பர்யம்.] **ते उभे** - இந்த இரண்டும், **नानार्थे** [**सती**] - வெவ்வேறு ப்ரயோஜநத்தை உடையவைகளாய்க் கொண்டு, **पुरुषम्** - மநுஷ்யனை, **सिनीतः** - கட்டுகின்றன [அவனைத் தம் வஶமாகச் செய்கின்றன.] **तयोः** - இந்த இரண்டுக்குள், **श्रेयः** - மோக்ஷ மார்க்கத்தை, **आददानस्य** - அவலம்பிக்கிறவனுக்கு, **साधु** - க்ஷேமமானது, **भवति** - உண்டாகின்றது, **यः** - எவன், **प्रेयः** - போக மார்க்கத்தை, **वृणीते** - வரிக்கிறானோ [அவலம்பிக்கிறானோ], [**सः** - அவன்] **अर्थात्** - புருஷார்த்தத்திலிருந்து [ஶாஶ்வதமான க்ஷேமத்திலிருந்து], **हीयते** - நழுவுகிறான். ['**उ**' என்பது நிஶ்சயத்தைக் காண்பிக்கிறது].

---

2. [ப - ரை] **श्रेयश्च प्रेयश्च** - மோக்ஷ மார்க்கமும் போக மார்க்கமும், **मनुष्यम्** - மநுஷ்யனை, **एतः** - அடைகின்றன [அதாவது: மநுஷ்யனால் வரிக்கக்கூடியவையாய் இருக்கின்றன]. **धीरः** - புத்திசாலியாக இருப்பவன், **तौ** - அவை இரண்டையும், **संपरीत्य** - நன்றாகப் பரீக்ஷித்துப் பார்த்து, **विविनक्ति** - பிரிக்கிறான் [அவைகளின் பரஸ்பர வைலக்ஷண்யத்தை அறிகிறான்]. **धीरः** - புத்திஶாலி, **श्रेयः** - மோக்ஷ மார்க்கத்தை, **प्रेयसः अभि** - போக மார்க்கத்தைக் காட்டிலும் ஶ்லாக்யமாக, **वृणीते** - வரிக்கிறான். **मन्दः** - புத்தி யில்லாதவன், **प्रेयः** - போக மார்க்கத்தை,

एवं प्रियान् प्रियरूपाँश्च कामानभिध्यायन्नचिकेतोऽत्यस्राक्षीः ।
नैताँ सृङ्कां वित्तमयीमवाप्तो यस्यां मज्जन्ति बहवो मनुष्याः ॥ ३

**योगक्षेमात्** - யோக க்ஷேமத்தை உத்தேசித்து [சரீரத்தின் போஷணம் அதன் பரிபாலநம் இவைகளை உத்தேசித்து], **वृणीते** - வரிக்கிறுன்.

'**तौ**' என்பது புல்லிங்கம். 'ச்ரேயஸ்' 'ப்ரேயஸ்' இரண்டும் நபும்ஸக லிங்கமானதால், அவைகளைக் குறிக்கும் இந்த சப்தம் நபும்ஸக லிங்கமாகவே இருத்தல் வேண்டும். '**ते उमे**' என்று கீழ் மந்த்ரத்திலும் அப்படியே ப்ரயோகம் இருப்பதைப் பார்க்கலாம். ஆனல் இந்தப் புல்லிங்க ரூபத்திற்கு என்ன கதி என்றுல், 'ச்ரேயஸ்' 'ப்ரேயஸ்' என் பவைகளை 'ச்ரேயஸ் என்னும் பதார்த்தம்', 'ப்ரேயஸ் என்னும் பதார்த்தம்' என்ற அர்த்தத்தில் எடுத்துக்கொண்டு புல்லிங்க ரூபம் ப்ரயோகம் செய்யப்பட்டிருக்கின்றது என்று ஸமாதாநம் சொல்ல வேண்டும். 'பதார்த்த' சப்தம் புல்லிங்கமானதால் '**तौ**' என்னும் புல் லிங்க ரூபம் ஸங்கதமாகிவிடும்.

**योगक्षेमात्** - இந்தப் பதம் நிவேசிக்கப்பட்டிருக்கும் ரீதியைப் பார்த்தால் [**प्रेयसः श्रेयो वृणीते, योगक्षेमात् प्रेयो वृणीते**], 'ப்ரேயஸ:' என் னும் பஞ்சமியைப் 'போக மார்க்கத்தைக் காட்டிலும்' என்று எடுத்துக் கொண்டதுபோல், 'யோக க்ஷேமாத்' என்னும் பஞ்சமியையும் 'யோக க்ஷேமத்தைக் காட்டிலும்' என்று அர்த்தம் சொல்லவேண்டும் என்று தோன்றும். 'யோக க்ஷேமம்' என்னும் சப்தம் மோக்ஷ மார்க்கத்தைக் குறிக்கமாட்டாதாதலால், அந்தப் பஞ்சமிக்குக் 'காட்டிலும்' என்று அர்த்தம் செய்யாமல், '**योगक्षेमात् हेतोः**' [யோக க்ஷேமத்தை உத் தேசித்து] என்று அர்த்தம் செய்யப்பட்டிருக்கிறது. 'யோக க்ஷேமம்' என்னும் பதத்தின் அர்த்தமாவது: '**योगः - अलब्धस्य लाभः, क्षेमः - लब्धस्य परिपालनम्**' [இது பர்யந்தம் நமக்குக் கிடைக்காமல் இருக்கும் பொருளைப் பெறுவது யோகம்; கிடைத்ததை ஸம்ரக்ஷிப்பது க்ஷேமம்] என்பது தான். இவ்விடத்தில் சரீர ஸம்பந்தமாக அந்த யோகக்ஷேமம் விவரிக் கப்பட்டிருக்கிறது.

---

3. [ப-ரை] **स त्वम्** - அப்படிப்பட்ட நீ, **प्रियान्** - ஸ்வபாவத் தாலேயே ப்ரியமாயும், **प्रियरूपान्** - ப்ரியம்போல் தோன்றுவனவாகவும் இருக்கும், **कामान्** - போகங்களை, **अभिध्यायन्** - நன்முக ஆலோசித்துப் பார்த்து [இவை துக்கத்துடன் கலந்தவையாகவும் துக்கத்திலேயே முடியுமவையாகவும் இருக்கின்றன என்பதை உணர்ந்து], **हे नचिकेतः** - ஹே நசிகேதஸ்ஸே! **अत्यस्राक्षीः** - த்யஜித்து விட்டாய். **वित्तमयीं** - தந ரூபமாயுள்ளதும், **सृङ्काम्** - கேட்டை விளைவிக்குமதான, **एताम्** - இதை [இந்தக் காம போகத்தை], **न अवाप्तः** - நீ அடையவில்லை [வேண்டா மென்று த்யஜித்து விட்டாய்]. **यस्याम्** - எதில் [எந்தத் தந ரூபமான

दूरमेते विपरीते विषूची अविद्या या च विद्येति ज्ञाता ।
विद्याभीप्सिनं नचिकेतसं मन्ये न त्वा कामा बहवो लोलुपन्त ॥ ४
अविद्यायामन्तरे वर्तमानाः स्वयं धीराः पण्डितंमन्यमानाः ।
दन्द्रम्यमाणाः परियन्ति मूढा अन्धेनैव नीयमाना यथान्धाः ॥ ५
न सांपरायः प्रतिभाति बालं प्रमाद्यन्तं वित्तमोहेन मूढम् ।
अयं लोको नास्ति पर इति मानी पुनः पुनर्वशमापद्यते मे ॥ ६

---

போகத்தில், **बहवो मनुष्याः** - அநேக மநுஷ்யர்கள் [அநேக மூடர்கள்] **मज्जन्ति** - மூழ்கிவிடுகிறார்களோ.

4. [ப-ரை], **या** - எது, **अविद्येति** - கர்ம ரூபமென்று [அதாவது: போகங்களை உத்தேசித்துச் செய்யப்படும் கர்ம ரூபமானதென்று], **ज्ञाता** -[ஜகத்தில்] ப்ரஸித்தமா யிருக்கிறதோ, **या च** - எது, **विद्येति** - தத்வ ஜ்ஞாந ரூபமென்று [**ज्ञाता** - ப்ரஸித்தமோ], **एते** - இவை [இரண்டும்], **दूरं विषूची** - மிகவும் வேறுபட்டிருக்கும் [மார்க்கங்கள்]; **विपरीते [च]** - பரஸ்பரம் விருத்தங்கள். **नचिकेतसं त्वा** - நசிகேதஸ்ஸாகிற உன்னை, **विद्याभीप्सिनम्** - வித்யை என்னும் [தத்வஜ்ஞாந] மார்க்கத்தை விரும்புமவனாக, **मन्ये** - எண்ணுகிறேன். [ஏனென்றால் **त्वा** - உன்னை], **बहवः कामाः** - அநேக காமங்கள் [மிகவும் ப்ரியமாயுள்ள போகங்கள்கூட], **न लोलुपन्त** - [ஶ்ரேயஸ் என்னும் மார்க்கத்திலிருந்து] திருப்பவில்லை.

---

5. வித்யை என்றும் அவித்யை என்றும் கூறப்பட்டுள்ள இரண்டு மார்க்கங்களுள், அவித்யை யென்னும் கர்ம மார்க்கத்தில் ப்ரவர்த்திப்பவர்களை நிந்திக்கிறார்.

[ப-ரை] **अविद्यायाम्** - அவித்யை என்னும் கர்ம மார்க்கத்தில், **अन्तरे** - [அதன்] நடுவில் [அதாவது: அதில் மூழ்கினவர்களாக], **वर्तमानाः** - இருந்துகொண்டும் [உழன்றுகொண்டும்], **स्वयं धीराः [मन्यमानाः]** - ஸ்வயம் புத்திசாலிகளென்று [தம்மை நினைத்துக்கொண்டும்], **पण्डितंमन्यमानाः** - தாமே பண்டிதர்களென்று நினைத்துக்கொண்டும், **दन्द्रम्यमाणाः** - [பலவித துக்கங்களால்] பீடிதர்களாய், **मूढाः** - விவேக மற்று, **अन्धेनैव नीयमाना अन्धा यथा** - குருடர்களால் நயிப்பிக்கப்படும் குருடர்கள்போல, **परियन्ति** - [ப்ரமித்துச்] சுற்றிச் சுற்றி அலைகிறார்கள்.

'**दन्द्रव्यमाणाः**' என்றும் பாடமுண்டு. அப்பொழுது '[காமமாகிற அக்நியால்] உருக்கப்பட்ட சித்தத்தை உடையவர்களாக' என்று பொருள் கொள்ளவேண்டும்.

---

6. [ப-ரை] **प्रमाद्यन्तम्** - அடங்காமலிருக்கும் மநஸ்ஸை உடையவனாகவும், **वित्तमोहेन मूढम्** - தந மோஹத்தால் நல்லது தீயது

श्रवणायापि बहुभिर्यो न लभ्यः शृण्वन्तोऽपि बहवो यन्न विद्युः ।
आश्चर्यो वक्ता कुशलोऽस्य लब्धा आश्चर्यो ज्ञाता कुशलानुशिष्टः ॥ ७

---

அறியாதவனுகவும் இருக்கிற, **बालम्** - விவேகமற்றவனுக்கு, **सांपरायः** - பரலோகத்தை ஸாதித்துக் கொடுக்கும் வ்யாபாரமானது, **न प्रतिभाति** - ப்ரகாசிக்கிறதில்லை. '**अयं लोकः** - இந்த லோகம்தான் [இருக்கிறது]; **परो नास्ति** - பரலோக மென்று ஒன்றுமில்லை' **इति** - இவ்வாருக, **मानी** - எண்ணிக்கொண்டு, **पुनः पुनः** - திரும்பத் திரும்ப, **मे** - என்னுடைய, **वशम्** - வசத்தை, **आपद्यते** - அடைகிருன். [அதாவது: என்னுல் விதிக்கப்படும் யாதனைகளுக்கு விஷயமாகிருன்].

---

7. [ப - ரை]. **यः** - [ஶாஸ்த்ரங்களில் ப்ரவிசித்தனுக இருக்கிற] எவன், **बहुभिः** - அநேகரால், **श्रवणायापि न लभ्यः** - கேட்பதற்குக்கூட ஸுலபனன்றோ? [அவனைப்பற்றிக் கேட்பதும் மஹத்தான ஸுக்ருதம் செய்திருப்பவர்களுக்கே லபிக்கும் என்பது கருத்து]. **शृण्वन्तोऽपि बहवः** - கேட்சும் பாக்யம் பெற்றவர்களுள் அநேகர், **यम्** - எவனை, **न विद्युः** - [உள்ளபடி அறிகிருர்களில்லையோ], **अस्य** - அப்படிப்பட்ட இவனுடைய [இந்தப் பரமாத்மாவின்], **कुशलो वक्ता** - உள்ளபடி சொல்லுகிறவனும், **कुशलो लब्धा च** - உள்ளபடி அடைகிறவனும், **आश्चर्यः** - ஆஶ்சர்யகரமானவனே [அதாவது: அப்படிப்பட்டவன் மிகவும் துர்லபனே]. **कुशलानुशिष्टः** - ஸமர்த்தனை ஆசார்யனிடமிருந்து உபதேசம் பெற்ற, **ज्ञाता** - அவனை உள்ளபடி உணர்ந்தவனும், **आश्चर्यः** - துர்லபனே.

'ப்ராக்ருத விஷய ஸுகங்களின் அநுபவத்திலேயே ப்ராயேண மநுஷ்யர்க ளெல்லாரும் நோக்கமுள்ளவர்களாக இருக்கிருர்கள்; பகவத் விஷயத்தில் நோக்கமுள்ளவர்கள் மிகவும் துர்லபர்களே' என்னும் பொருளை இந்த மந்த்ரம் வெளியிடுகின்றது. இந்தப் பொருளை இதன் உபப்ருஹ்மணமாக இருக்கும் பகவத் கீதா ஶ்லோகம் நன்கு விளக்குகின்றது. [7-வது அத்யாயம் மூன்ருவது ஶ்லோகம்.]

"मनुष्याणां सहस्रेषु कश्चिद्यतति सिद्धये।
यततामपि सिद्धानां कश्चिन्मां वेत्ति तत्त्वतः ॥"

[ஶாஸ்த்ராதிகாரத்திற்கு யோக்யரா யிருக்கும் ப்ரஜைகளுள் அநேகம் பெயர்கள் ஸித்திக்காக ப்ரயத்நம் செய்தபோதிலும், ஸித்திகைக்குக் கிடைக்கும் பர்யந்தம் விடாமுயற்சியுடன் ப்ரயத்நம் செய்பவர் துர்லபர்; அப்படி ஸித்திபர்யந்தம் யத்நம் செய்பவர் சிலர் உண்டேயாயினும், 'இந்த ஸித்தி பரமாத்மாவிடமிருந்தே கிடைக்கவேண்டும்' என்னும் ஜ்ஞாநத்துடன் யத்நம் செய்பவர்கள் மிகவும் துர்லபர்; அப்படிப்பட்ட ஜ்ஞாநமுடையவர்கள் சிலர் உண்டேயாயினும், பரமாத்

न नरेणावरेण प्रोक्त एष सुविज्ञेयो बहुधा चिन्त्यमानः ।
अनन्यप्रोक्ते गतिरत्र नास्ति अणीयान् ह्यतर्क्यमणुप्रमाणात् ॥ ८

மாவை 'वासुदेवस्सर्वमिति' என்று சொல்லுகிறவர் யதாவஸ்திதமாக அறிபவர்கள் இன்னும் துர்லபர்; 'स महात्मा सुदुर्लभः' என்றன்றோ சொல்லப்பட்டிருக்கிறது?]

இந்த ஶ்லோகம் ப்ரஸ்துத மந்த்ரத்தின் விவரணமாக இருப்பதால், இதில் ப்ரஸ்தாவிக்கப்பட்டுள்ள மூன்று வகுப்பினரே இந்த மந்த்ரத்திலும் விவக்ஷிக்கப்படுகிறார்கள் என்று அறிதல் வேண்டும்.

---

8. [ப-ரை] **एषः** - இந்தப் பரமாத்மா, **अवरेण नरेण** - ப்ராக்ருதனான மநுஷ்யனால் [அதாவது: கேவலம் பாண்டித்யத்தை மாத்ரம் உத்தேஶித்து எவன் வேதாந்த ஶ்ரவணம் செய்திருக்கிறானோ அவனால்], **प्रोक्तः** - விவரிக்கப்பட்டவனாய்க் கொண்டு [அதாவது: விவரிக்கப்படும் பக்ஷத்தில்], **न सुविज्ञेयः** - நன்றாக அறியப்பட்டவனாக மாட்டான். [ஏனென்றால், **सः** - அவன்] **बहुधा** - [பற்பல வாதிகளால்] பற்பல விதமாக, **चिन्त्यमानः** - சிந்திக்கப்பட்டிருக்கிறானன்றோ? [அதாவது: ப்ரஹ்மாத்ம ஸாக்ஷாத்காரத்தை எவன் பெற்றிருக்கிறானோ, அவனுடைய உபதேஶமே ப்ரயோஜநவத்தாகும் என்பது கருத்து]. **अनन्यप्रोक्ते गतिः अत्र नास्ति [अनन्यप्रोक्ते या अवगतिः संभवति सा अत्र नास्ति]** - பகவானிடத்தில் ஏகாந்த புத்தியுடன் அவனுடைய ஸாக்ஷாத்காரம் பெற்றவனால் உபதேசிக்கப்பட்டால் எவ்வித பகவத்ஜ்ஞானம் உண்டாகின்றதோ, அப்படிப்பட்ட ஜ்ஞானம் கேவல பண்டிதனுடைய உபதேஶத்தால் கிடைக்கப்படமாட்டாது. **अणीयान् हि [सः]** - அவன் அதி ஸூக்ஷ்மமான ஸ்வரூபத்தை உடையவனன்றோ? **अणुप्रमाणात्** - [அவனுடைய ஸ்வரூபம்] அதி ஸூக்ஷ்மமானதால், **अतर्क्यम्** - [அது] கேவல தர்க்கத்திற்கு எட்டமாட்டாது.

இந்த மந்த்ரத்தில் '**अनन्य**' என்னும் பதத்திற்கு 'ப்ரஸ்தாவிக்கப்படும் பரமாத்மாவைக் காட்டிலும் வேறுபடாமலுள்ள' என்பது பொருள். அதாவது: 'ப்ரஹ்ம ஸாக்ஷாத்காரம் பெற்றுள்ள பரமைகாந்திகள்' என்பது தாத்பர்யம். மற்றும் ஒரு பொருள் சொல்லக்கூடும். **अनन्यप्रोक्ते** - 'மற்றவர்களிடமிருந்து ஶ்ரவணம் செய்யாமல் ஸ்வயமே புஸ்தகம் பார்த்துத் தெரிந்துகொண்டால்' என்பதுதான் அந்தப் பொருள். '**अन्यप्रोक्ते**' என்றும் ஒரு பாடம் உண்டு. அப்பொழுது 'கேவல பண்டிதனான ஸாமாந்ய மநுஷ்யனால் உபதேஶிக்கப்படும் பக்ஷத்தில்' என்பது பொருள். அப்பொழுது '**अत्र**' என்பதற்கு 'ஆத்மாவை அறியும் விஷயத்தில்' என்று பொருள்கொள்ள வேண்டும். முந்தின பாடத்தில், '**अत्र**' என்பது கேவல பண்டிதனுடைய உபதேஶத்தைக் குறிக்கின்றது.

---

**नैषा तर्केण मतिरापनेया प्रोक्ताऽन्येनैव सुज्ञानाय प्रेष्ठ ।**
**यान्त्वमापः सत्यधृतिर्बतासि त्वादृङ्नो भूयान्नचिकेतः प्रष्टा ॥** ९
**जानाम्यहँ शेवधिरित्यनित्यं न ह्यध्रुवैः प्राप्यते हि ध्रुवं तत् ।**
**ततो मया नचिकेतश्चितोऽग्निरनित्यैर्द्रव्यैः प्राप्तवानस्मि नित्यम् ॥** १०

---

9. கீழ்ச் சொல்லப்பட்ட விஷயமே மறுபடியும் விவரிக்கப் படுகின்றது.

[ப - ரை] **एषा** - பரமாத்மாவைப் பற்றிய ஜ்ஞாநம், **तर्केण** - கேவல தர்க்கத்தால் [அதாவது: குருவின் உபதேசமின்றிக்கே கேவலம் தனது புத்தியைக்கொண்டு ஊஹாபோஹம் செய்வதால்], **न आपनेया** - அடையத் ।தகுந்ததன்று. **प्रेष्ठ** - ஹே ப்ரியதமனே, **अन्येनैव** - தன்னைக் காட்டிலும் வேறுபட்ட குரு முதலானவர்களால், **प्रोक्ता** - உபதேசிக்கப்பட்ட புத்தியே, **सुज्ञानाय** - நல்ல ஜ்ஞாநத்தின் பொருட்டு [அதாவது: பரமாத்ம ஸாக்ஷாத்காரத்தை ஸாதித்துக் கொடுக்கும் பொருட்டு], **भवति** - ஆகும். [அந்த புத்தி எது வென்றால்] **याम्** - எதை **त्वम्** - நீ, **आपः** - அடைந்திருக்கிறாயோ, [அதுதான் மோக்ஷ ஸாதநமாகும்]. **सत्यधृतिरसि** - [நீ] சலிப்பிக்கக் கூடாத உறுதியை உடைத்தாயிருக்கிறாய்; **बत** - ஆஶ்சர்யம். **नचिकेतः** - ஹே நசிகேதஸ்ஸே! **त्वादृक्** - உன்னைப் போன்ற, **प्रष्टा** - ஶிஷ்யன், **नः** - எங்களுக்கு, **भूयात्** - உண்டாக வேண்டும்.

---

10. 'ப்ரஹ்ம ப்ராப்தியானது அநித்ய பல ஸாதகங்களான கர்மங்களால் கிடைக்கமாட்டாது; அது ஜ்ஞாநத்தால் மாத்ரம் கிடைக்கப்படும்' என்பது வேதாந்தத்தால் சொல்லப்படுகின்றது. அப்படி இருக்கையில், கர்மமாகிய நாசிகேத அக்நி சயநத்தால் ப்ரயோஜநமென்ன? என்று ஒரு கேள்வி பிறக்கும். அது இந்த மந்த்ரத்தால் விளக்கப்படுகின்றது. ப்ரஹ்ம ஜ்ஞாநத்தாலேயே மோக்ஷ ப்ராப்தி என்பது உண்மையே; அந்த மோக்ஷ ஜ்ஞாநத்திற்கு ஸாதநம் இந்த அக்நி சயந ரூபமாகிற கர்மம் என்பது கருத்து.

[ப - ரை] **शेवधिः** - ஐஶ்வர்யமானது, **अनित्यमिति** - நித்யமானதன்று என்று, **अहम्** - நான், **जानामि** - அறிவேன். **ध्रुवम् तत्** - நித்யமாக இருக்கும் ஆத்ம தத்வம், **अध्रुवैः** - அநித்யமாயிருக்குமவைகளால் [அநித்யங்களான த்ரவ்யங்களைக் கொண்டு।செய்யப்படும் கர்மங்களால்], **न प्राप्यते हि** - அடையப்படுகிறதில்லை யன்றோ? **ततः** - ஆகையால் [இந்த அறிவு இருந்தபடியால்] **मया** - என்னால், **नाचिकेतः अग्निः चितः** - 'நசிகேதஸ்' என்னும் பெயரால் வழங்கப்படும் அக்நி சயந ரூபமான கர்மமானது அநுஷ்டிக்கப்பட்டது. [அதாவது: இந்தக்

**कामस्याप्तिं जगतः प्रतिष्ठां क्रतोरानन्त्यमभयस्य पारम् ।**
**स्तोमं महदुरुगायं प्रतिष्ठां दृष्ट्वा धीरो नचिकेतोऽत्यस्राक्षीः ॥** ११

கர்மம் மோக்ஷ ஸாதநமாகமாட்டாது என்பதைத் தெரிந்துகொண்டே, நான், ப்ரஹ்ம ப்ராப்திக்கு ஸாதநமாயிருக்கும் ப்ரஹ்ம ஜ்ஞாநத்தைப் பெறும்பொருட்டு இந்த அக்நி சயநத்தைச் செய்தேன். இந்தக் கர்மம் ஜ்ஞாநத்தைக் கொடுத்தது; அந்த ஜ்ஞாநம் ப்ரஹ்ம ப்ராப்திக்குக் காரணம்' என்பது தாத்பர்யம்]. இவ்வாறு, **अनित्यैः द्रव्यैः** - அநித்யங்களான [இஷ்டகை முதலான] த்ரவ்யங்களால், **नित्यम्** - நித்ய பலத்திற்கு ஸாதநமான ஜ்ஞாநத்தை, **प्राप्तवानस्मि** - அடைந்தவனாகிறேன்.

இந்த மந்த்ரத்தில், முதலில் 'அத்ருவங்களால் த்ருவமானது அடையப்பட மாட்டாது' என்றும், அடுத்து வரும் வாக்யத்தில் 'அநித்யங்களான த்ரவ்யங்களால் நித்யத்தை அடைந்தேன்' என்றும் சொல்லப்பட்டிருப்பதைப் பார்க்கும்பொழுது பூர்வாபர விரோதம் இருப்பது போலத் தோன்றும். இவ்விடத்திற் சொல்லப்படும் விஷயமானது 'கேவல கர்மங்கள் மோக்ஷத்திற்கு ஸாதநமாகமாட்டா' என்பதே. அதுதான் முதல் வாக்யத்தின் அர்த்தம். இரண்டாவது வாக்யத்தின் கருத்து 'அநித்யங்களான கர்மங்களால் நித்யமான மோக்ஷத்தை அடைந்தேன்' என்பது அன்று; 'அநித்யங்களான கர்மங்களால் மோக்ஷத்திற்கு ஸாக்ஷாத் ஸாதநமான ஆத்ம ஜ்ஞாநத்தைப் பெற்றேன்'. என்பதுதான் அதன் தாத்பர்யம். ஆகையால் எவ்வித விரோதமும் இல்லை. ஆத்ம ஜ்ஞாநம் நித்யமான வஸ்துவானதால், அது நித்யமென்று வ்யவஹரிக்கப்படுகின்றது.

---

11. '**तादृक् प्रष्टा नः भूयात्**' [அப்படிப்பட்ட ஶிஷ்யனே எனக்கு வேண்டும்] என்று 9-வது மந்த்ரத்தில் நசிகேதஸ் புகழ்ந்து பேசப்பட்டானன்றோ? அப்படிப் புகழப்படுவதற்கு அவனிடம் என்ன குண விசேஷம் இருக்கின்றது என்பது இந்த மந்த்ரத்தால் விளக்கப்படுகின்றது.

[ப-ரை] **जगतः कामस्य आप्तिम्** இந்த ஜகத்தில் கிடைக்கக்கூடிய [சதுர்முக ப்ரஹ்ம ஐஶ்வர்யம் பர்யந்தமான] போக ப்ராப்தியை, **क्रतोः प्रतिष्ठाम्** - கர்மங்களின் பலமென்றும், **आनन्त्यम्** - எல்லையற்றிருக்கும் தன்மை, **अभयस्य पारम्** - நிர்ப்பயமாக இருப்பது, **महत् स्तोमम्**-உயர்ந்த கலியாண குணங்களின் கூட்டம், **उरुगायम्** - அளவற்ற கீர்த்தி [இவைகளை], [**विद्यायाः**]**प्रतिष्ठाम्** - [மோக்ஷ மார்க்கத்தின்] பலமென்றும், **दृष्ट्वा**- பார்த்து [அதாவது:- அறிந்துகொண்டு], **नचिकेतः**:-ஹே நசிகேதஸ்ஸே! **धीरः [त्वम्]** - ப்ரஜ்ஞாஶாலியாயிருக்கும் நீ, **धृत्या**-உறுதியுடன், **अत्यस्राक्षीः**:—விட்டுவிட்டாயன்றோ?

**तं दुर्दर्शं गूढमनुप्रविष्टं गुहाहितं गह्वरेष्ठं पुराणम् ।**
**अध्यात्मयोगाधिगमेन देवं मत्वा धीरो हर्षशोकौ जहाति ॥ १२ ॥**
**एतच्छ्रुत्वा संपरिगृह्य मर्त्यः प्रवृह्य धर्म्यमणुमेतमाप्य ।**
**स मोदते मोदनीयं हि लब्ध्वा विवृतं सद्म नचिकेतसं मन्ये" ॥ १३ ॥**

---

இந்த வாக்யத்தில் பதங்களின் யோஜனை பின் வருமாறு செய்யப்பட்டிருக்கின்றது :—'**कामस्य आप्तिं कर्मणः प्रतिष्ठां, अभयस्य पारं [विद्यायाः] प्रतिष्ठां [च] दृष्ट्वा धीरस्त्वं अत्यस्राक्षीः**' [லௌகிக காமங்கள் அடைவதைக் கர்மங்களின் பலமென்றும், மோக்ஷம் அடைவதை வித்யையின் பலமென்றும் அறிந்து, நீ கர்ம மார்க்கத்தை த்யஜித்துவிட்டாயன்றோ ?] இந்த யோஜனையில் இரண்டு மார்க்கங்களுக்கும் பரஸ்பரம் உள்ள தாரதம்யம் வெளியாகின்றது. ஆனால், இதில் சில பதங்களை அத்யாஹாரம் செய்துகொள்ள வேண்டியிருக்கிறது. அப்படிப் பதங்களை அத்யாஹரித்துக் கொள்வது ஶ்லாக்யமன்றாதலால் வேறு யோஜனையையும் செய்யலாமென்று பாஷ்யகாரர்கள் அபிப்பிராயப்படுகிறார்கள் : **कामस्य आप्तिं क्रतोरानन्त्यं अभयस्यपारं [इत्येतत्सर्वं] प्रतिष्ठां दृष्ट्वा** [ஸர்வ காமாவாப்தியையும், அநந்தங்களான பலத்தை உடைய க்ரதுக்களின் தன்மையையும், அபயமான மோக்ஷத்தையும் இவை முதலிய அநந்த ஸ்திர பலத்தை அறிந்து நீ கர்மமார்க்கத்தை த்யஜித்தாயன்றோ?] என்பதுதான். இந்த யோஜனையில் எல்லா விஶேஷணங்களும் மோக்ஷபரமாக எடுத்துக்கொள்ளப் படுகின்றன.

---

12—13. இவ்வளவு தூரம் மோக்ஷ மார்க்கத்தைப் புகழ்ந்து பேசிவிட்டு, இப்பொழுது நசிகேதஸ்ஸால் வரிக்கப்பட்ட மூன்றாவது கேள்விக்கு ப்ரதிவசநம் அளிக்கிறார்.

[ப - ரை] **दुर्दर्शम्** [7-வது மந்த்ரத்தில் சொல்லியிருக்கிற ப்ரகாரம்] பார்ப்பதற்கு அஶக்யமாயும், **गूढम्** - [நமக்குக் கோசரமாகாமல் குணத்ரயத்தால்] மறைக்கப்பட்டும், **अनुप्रविष्टम्** - ஶரீரங்களின் உள்ப்ரவேஶித்தும், **गुहाहितम्** - அந்த ஶரீரத்திலும் [ஹ்ருதயமாகிற] குஹையில் இருந்துகொண்டும், **गह्वरेष्ठम्** - அதற்கும் அந்தர்க்கதமான ஜீவாத்மாவின் உள்ளில் அந்தர்யாமி ரூபமாக இருந்துகொண்டும், **पुराणम्** - ஆதியற்றும் இருக்கும், **देवम्** - பரமாத்மாவை, **अध्यात्मयोगाधिगमेन** - ஆத்ம ஸம்பந்தமான யோகத்தால் கிடைக்கக்கூடிய ஶுத்த ஜீவாத்ம ஜ்ஞானத்தைக்கொண்டு, **मत्वा** - உபாஸித்து, **धीरः** - புத்திசாலியாயிருப்பவன், **हर्षशोकौ** - ஸந்தோஷம் துக்கம் இவை இரண்டையும் [அதாவது லௌகிக காமம் கிடைப்பதால் உண்டாகும் ஸந்தோஷம், அது கிடைக்காததால் உண்டாகும் ஶோகமும் இவை இரண்டையும்], **जहाति** - விடுகிறான்.

**मर्त्यः** - மநுஷ்யன் [அதாவது, முமுக்ஷுவா யிருப்பவன்], **एतत्**- இதை [அதாவது :—இந்த ஆத்ம தத்வத்தை], **श्रुत्वा** - கேட்டு, **संपरिगृह्य** - மநநம் த்யாநம் இவைகளைச் செய்து, **धर्म्यम्** - கர்மத்தால் ஏற்பட்டுள்ள [ஶரீரத்தை], **प्रवृह्य** - விலக்கி [அதாவது :—த்யஜித்துவிட்டு], **अणुम्** - அதி ஸூக்ஷ்மமா யிருக்கும், **एतम्** – இந்தப் [பரமாத்மாவை], **प्राप्य** - அடைந்து [அதாவது : ஒரு தேஶ விஶேஷத்தில் அடைந்து], **सः** - அந்த [வித்வாந்], **मोदनीयम्** - ப்ரீதி விஷயமாயிருக்கும் [தனது ஸ்வரூபத்தை] **लब्ध्वा** - பெற்று, **मोदते** - ஆநந்திக்கிறான். [இவ்வாறு கேள்விக்கு ப்ரதிவசநத்தை அளித்துவிட்டு, 'நசிகேதஸ்ஸே! உனக்கு மோக்ஷம் கைவசமாகிவிட்டது' என்று அவனைப் புகழ்ந்து பேசுகிறார்.] **नचिकेतसम्** - நசிகேதஸ்ஸுக்கு, **सद्म** [ப்ரஹ்ம ரூபமான] ஸ்தாநமானது, **विवृतम्** - திறந்திருக்கின்றதென்று [அதாவது : தடையின்றி ப்ரவேஶிக்கத் தகுந்ததாகி விட்டதென்று], **मन्ये** எண்ணுகிறேன்.

**अध्यात्मयोगाधिगमेन** -'ஆத்மாவினிடத்தில்' என்னும் அர்த்த முள்ளது 'அத்யாத்ம' என்னும் பதம். ஆகையால் 'அத்யாத்ம யோகம்' என்பதற்கு 'மநஸ்ஸை விஷயங்களிலிருந்து திருப்பி ஆத்ம வஸ்துவினிடத்தில் நிலை நிறுத்துவதாகிற யோகம்' என்பது பொருளாகும். அப்படிப்பட்ட அத்யாத்ம யோகத்தால் உண்டாகும் அதிகமமாவது ஜீவாத்ம ஜ்ஞாநம். 'அந்த ஜ்ஞாநத்தை ஹேதுவாகக்கொண்டு' என்பது திரண்ட பொருள். பரமாத்ம ஜ்ஞாநம் பெறுவதற்கு ஜீவாத்ம ஜ்ஞாநம் ஹேது என்பது ஶாஸ்த்ரம்.

இந்த மந்த்ரத்தில் **अध्यात्मयोगेन** இத்யாதியால் ப்ராப்யத்தின் ஸ்வரூபமும், **मत्वा** - என்பதால் உபாயத்தின் ஸ்வரூபமும் '**धीरो जहाति**' என்பதால் 'ப்ராப்தாவின் ஸ்வரூபமும் ப்ரஸ்தாவிக்கப் படுகின்றன. இந்த மூன்றின் ஸ்வரூபங்களையே நன்றாக ஶோதித்து உபதேஶிக்க வேண்டுமென்று மேல் 14-வது மந்த்ரத்தில் நசிகேதஸ் மறுபடியும் ப்ரார்த்திக்கிறான். இந்த மூன்றுமே பிற்பாடு விஸ்தாரமாக உபதேஶிக்கப்படுகின்றன. இதனால் '**येयं प्रते**' என்னும் மந்த்ரத்தில் நசிகேதஸ்ஸால் கேட்கப்பட்டுள்ள விஷயங்களும் இம்மூன்றாகவே இருத்தல் வேண்டும் என்பது விளங்கும்.

இந்த மந்த்ரம் ஜீவாத்மாவை ப்ரதிபாதிக்கின்றதென்றும், அந்தக் காரணத்தால் கீழில் '**श्रवणायापि**' இத்யாதியான 7-வது மந்த்ரத்தையும் ஜீவ ப்ரதிபாதகமாகவே எடுத்துக்கொள்ளலாமென்றும், அப்படி எடுத்துக்கொண்டால் அந்த 7-வது மந்த்ரத்துக்கும் பகவத் கீதையிலுள்ள அதைப்போலிருக்கும் "**आश्चर्यवत्पश्यति**' இத்யாதியான ஶ்லோகத்திற்கும் ஐகார்த்யம் ஏற்படுகிறதென்றும் சில பூர்வ பக்ஷிகள் வாதிக்கிறார்கள். 'இந்த மந்த்ரத்தில் '**देवम्**' என்னும் பதம் பரமாத்மாவையே குறிக்கக் கூடியதாகையால் இதை ஜீவாத்ம பரமாக எப்படி எடுத்துக்

" अन्यत्र धर्मादन्यत्राधर्मादन्यत्रास्मात् कृताकृतात् ।
अन्यत्र भूताच्च भव्याच्च यत्तत्पश्यसि तद्वद " ॥ १४ ॥

---

கொள்ளக்கூடும்?' என்றால், 'கீழே இந்த உபநிஷத்தின் முதலாவது வல்லியில் 17-வது மந்த்ரத்தில் தென்படும் **देवम्** என்னும் பதத்தை ஜீவாத்ம பரமாக வ்யாக்யாநம் செய்யவில்லையா? அவ்விடத்தில் '**देवम्**' என்னும் பதத்தை 'தேவனை அந்தராத்மாக உடைய' என்று பொருள் படுத்தியதுபோல இவ்விடத்திலும் ஏன் அம்மாதிரி செய்யக் கூடாது?' என்று ஆக்ஷேபிக்கிறார்கள். இதற்கு ஸமாதாநம் ஒன்றே. 'கீழே 17-வது மந்த்ரத்தில், '**ब्रह्मज**' [ப்ரஹ்மத்தினிடமிருந்து ஜநித்த] என்று உபக்ரமத்தில் ஜீவனைக் குறிக்கும் லிங்கம் இருக்கிற படியால், அங்கு அப்படி வ்யாக்யாநிக்கப்பட்டது. இவ்விடத்தில் அப்படிப்பட்ட லிங்கமொன்றும் இல்லையாதலால் 'தேவ' ஶப்தத்தின் முக்யார்த்தத்தைக் கைவிடுவது ந்யாயத்திற்கு ஒத்ததாகமாட்டாது.' இதுதான் ஸமாதாநம். அந்த மந்த்ரத்திற்கும் இந்த மந்த்ரத்திற்கும் விஶேஷமாவது—அந்த மந்த்ரத்தில் பரமாத்மாவை ஆத்மாவாக உடைய ஶுத்த ஜீவ ஸ்வரூபம் ப்ரதிபாதிக்கப்படுகின்றது; இந்த மந்த்ரத்திலோவென்றால், ஜீவனை ஶரீரமாக உடைய பரமாத்ம ஸ்வரூபம் ப்ரதிபாதிக்கப்படுகின்றது என்பதுதான். ஆகையால் இவை இரண்டுக்கும் ஐகார்த்ய ஹாநி இல்லை.

13-வது மந்த்ரத்திலுள்ள '**धर्म्यम्**' என்பதற்கு 'கர்மத்தின் பலமாகக் கிடைக்கும்' என்பது பொருள்; அதாவது—'ஶரீரம்'. அதை விட்டபிறகு 'அணுவின்' ப்ராப்தி கிடைக்கின்றது. அதாவது—ஸூக்ஷ்மமாயும் அப்ரதர்க்யமாயும் இருக்கும் பரமாத்மாவை அடைகிறான் என்று சொன்னதாயிற்று. அதற்குப் பிறகு '**मोदनीयं लब्ध्वा**' என்று ப்ரீதி விஷயமான தொன்றைப் பெறுகின்றான் என்று சொல்லப்பட்டிருக்கின்றது. அதாவது, அபஹத பாப்மத்வம் முதலிய எட்டு குணங்களுடன் கூடிய தனது ஶுத்த ஸ்வரூபம் ஆவிர்ப்பவிக்கின்றது என்று ஏற்படுகின்றது. இந்த க்ரமம் மற்றொரு ஶ்ருதியில் சொல்லப்பட்டிருப்பதற்கு ஒக்கும். "**एष संप्रसादोऽस्माच्छरीरात्समुत्थाय परं ज्योतिरुपसंपद्य स्वेन रूपेणाभिनिष्पद्यते**" [இந்த ஜீவன் இந்த ஶரீரத்தை விட்டுக் கிளம்பி பரஞ்ஜ்யோதிஸ்ஸை அடைந்து தனக்கு இயற்கையாயுள்ள ஶுத்த ஸ்வரூபத்தைப் பெறுகிறான்.] அதாவது—அநாதிகாலமாக மறைந்துகிடந்த தனது ஶுத்த ஸ்வரூபம் வெளிப்படுகின்றது என்பது தாத்பர்யம்.

---

14. இம்மாதிரியான ஆழ்ந்த கருத்தை உடைய வார்த்தைகளைக் கேட்ட நசிகேதஸ்ஸுக்குப் பின்வருமாறு ஶங்கைகள் ஜநித்தன. 'மூதல் முதலில் ஶ்ரேயஸ் என்றும் ப்ரேயஸ் என்றும் இரண்டு மார்க்கங்களை ப்ரஸ்தாவித்து, ப்ரேயஸ்ஸை பஹுப்ரகாரமாக நிந்தித்தார். இப்

பொழுது ஶ்ரேயஸ்ஸைப் பற்றி விவரிக்கப் புகுந்தவர், துர்த்தர்ஶ மாக ஒரு வஸ்து உண்டென்றும் அது மறைக்கப்பட்டிருக்கிறதென்றும் அதை உபாஸிக்க வேண்டுமென்றும் அந்த உபாஸநம் அத்யாத்ம யோகத்தின் பலமாகிற ஜ்ஞாநத்துடன் செய்யப்பட வேண்டுமென்றும், தீரனே அதற்கு அதிகாரி என்றும் அநேக விஷயங்களைப்பற்றிப் பேசுகிறாரே; இவையெல்லாம் கர்ம மார்க்கத்தில் ப்ரஸித்தங்களான உபாயாதிகளைக் காட்டிலும் விலக்ஷணங்களாக இருக்கின்றனவே. இவை என்ன? அந்தத் துர்தர்ஶன் யார்? அதை அடைகிறவன் யார்? அடைவதற்கு உபாயம் என்ன? இத்யாதி விஷயங்களை விளங்கச் சொல்லிக் கேட்கவேண்டுமென்று ஆவலுண்டாயிற்று; மறுபடியும் ஒரு ப்ரஶ்நம் செய்கிறான். இது தனிப்பட்ட நான்காவது ப்ரஶ்நமன்று. ஆகையால், 'மூன்று வரங்களை வரித்துக்கொள்' என்றுதர்மராஜன் சொன்ன வார்த்தைக்கு பங்கமில்லை.

கீழ்ச் சொல்லப்பட்டுள்ள விஷயங்களைப்பற்றியே இந்த மந்த்ரத்தில் ப்ரஶ்நங்கள் கேட்கப்படுகின்றன என்பது இதைப் படித்த மாத்ரத்தில் ஏற்படமாட்டாது. சற்று ஊன்றிப் பார்த்தே தாத்பர்யத்தை க்ரஹித்துக் கொள்ள வேண்டும். ஸ்வர்க்க பலத்தைப் பெரிதாகக் கருதி அதைப் பெறும் பொருட்டுகர்ம மார்க்கத்தில் ப்ரவர்த்திப்பவர்கள் கீழே பஹு ப்ரகாரமாக நிந்திக்கப்பட்டார்கள்; அந்தக் கர்ம மார்க்கத்தை த்யஜித்து வித்யையைப்பெரிதாக எண்ணின நசிகேதஸ் பஹுப்ரகாரமாகப் புகழப் பட்டான். இது நசிகேதஸ்ஸின் மநஸ்ஸில் நன்றாகப் பதிந்திருத்தல் வேண்டும். அவன் தனது ஸம்ஶயத்தை அறிவித்துக் கொள்ளும் பொழுது தனது மநஸ்ஸில் தலையெடுத்து நிற்கும் மநோபாவத்திற்கு அநுரூபமான சொற்களால் அந்த ஸம்ஶயத்தை வெளியிடுகிறான்.

[ப - ரை] **धर्मात्** - [அல்ப போகங்களை விரும்பும் மனுஷ்யர்களால் அநுஷ்டிக்கப்படும் ப்ரஸித்த] உபாயத்தைக் காட்டிலும், **अन्यत्र यत्** - எதை விலக்ஷணமென்று, **पश्यसि** - பார்க்கிறீரோ [அதாவது - அறிகிறீரோ], **तत्** - அதை, **वद** - [விளங்கச்]சொல்லும். [ஸ்வர்க்கம் முதலான போக ஸ்தாநத்தை அபேக்ஷிப்பவர்களால் அநுஷ்டிக்கப் படும் உபாயமானது யாகம் முதலான கர்மங்கள். அந்த ஸ்வர்க்கத்தை நசிகேதஸ் அபேக்ஷிக்கவில்லை. கீழே '**मत्वा**' என்னும் பதத்தால் ஸூசிப்பிக்கப்பட்ட உபாஸநமாகிற உபாயமே அவனுக்கு அபேக்ஷிதம். அதைப்பற்றியே கேட்கிறான்.]

**अधर्मात्** - [அல்பமாயும் அஸ்திரமாயுமுள்ள ப்ரஸித்த] உபேயத்தைக் காட்டிலும், **अन्यत्र यत् पश्यसि** - எதை விலக்ஷணமென்று பார்க்கிறீரோ, **तद्वद** - அதைச்சொல்லும். [கர்மங்களைச் செய்பவர்களால் அடையப்படுவது ஸ்வர்க்கம் முதலான பலம். அதை நசிகேதஸ் அபேக்ஷிக்கவில்லை. கீழே '**ध्रुवं तत्**' - என்றும், '**अणुमेतमाप्य**' என்றும், **मोदनीयं लब्ध्वा**' - என்றும், '**अध्यात्मयोगाधिगमेन**' என்றும் குறிக்கப்

பட்ட ப்ரதேஶங்களில் நிர்த்தேஶிக்கப்படும் ப்ராப்யமே அவனுக்கு அபேக்ஷிதம். அது, தனது முக்தஸ்வரூபம் பரமாத்மஸ்வரூபம் முதலியதே. அது ஸ்வர்க்கரூபமான பலத்தைக் காட்டிலும் அத்யந்தம் விலக்ஷணமன்றோ?]

**अस्मात्** - இதைக்காட்டிலும் [இது புத்திஸ்தனை உபேதாவைக் குறிக்கின்றது], **अन्यत्र यत् पश्यसि** - எதை விலக்ஷணமென்று பார்க்கிறீரோ, **तद्वद** - அதைச்சொல்லும். [ஸ்வர்க்க பலத்தை உத்தேஶித்துக் கர்மங்களைச் செய்யும் ப்ரஸித்த உபேதாவானவன் இந்த்ரியம் முதலியவைகளால் விஶிஷ்டனை பத்த தஶையிலுள்ள போக்தாவாகிற ஜீவன். நசிகேதஸ் அறியவேண்டுமென்று இச்சிக்கும் உபேதாவோ ஶரீர இந்த்ரியங்கள் முதலியவைகளிலிருந்து விடுபட்ட முக்த ஜீவாத்மா. இந்த ஆகாரமே கீழே **धीरः** என்பதால் குறிக்கப்பட்டது. போக தஶையில் இருப்பவனும் பிந்தி பலதஶையில் இருப்பவனும் வஸ்து ஸ்திதியில் ஒன்றாக இருந்தாலும், ஆகாரத்தில் வைலக்ஷண்யம் உண்டாகையால் '**अस्मादन्यत्र**' [இவனைக்காட்டிலும் வேறு] என்று சொல்லப்பட்டிருக்கிறது.

'**कृताकृतात्**' '**भूताद् भव्याच्च**' என்னும் பதங்கள் '**धर्मात्**' இத்யாதியான மூன்றுக்கும் விஶேஷணங்கள். ப்ரஸித்த உபாயம் முதலானவை மநுஷ்யனுடைய ப்ரயத்நத்தால் ஸாதிக்கத்தகுந்ததாகவும் ஒரு காலத்தில் இருந்து மற்றொரு காலத்தில் இராததாகவும் இருக்கும். மோக்ஷ ஸம்பந்தமான உபாயம் முதலியவை அப்படியல்ல. இதுதான் இந்த விஶேஷணங்களின் பொருள்.

ஸ்ரீ ஶ்ருத ப்ரகாஶிகாசார்யர் இந்த மந்த்ரத்திற்கு முதலில் இம்மாதிரி வ்யாக்யாநம் செய்துவிட்டு, பிறகு இப்படி வ்யாக்யாநிப்பதில் சில அநுபபத்திகள் இருப்பதை ஆலோசித்து, வேறுவிதமாக வ்யாக்யாநமொன்றை அநுக்ரஹித்திருக்கிறார். அந்த அநுபபத்திகள் என்னவென்றால்:—(1) மூலத்தில் நான்கு '**अन्यत्र**' ஶப்தங்கள் இருக்க, வ்யாக்யாநத்தில் மூன்று ஶப்தங்களே அபேக்ஷிதங்களாகையால் அவை மாத்ரம் எடுக்கப்பட்டு மற்றொன்று நிரர்த்தகமாக விடப்பட்டுப் போய்விட்டது. (2) உபாயங்களெல்லாம் காலத்ரய பரிச்சிந்நங்களானபடியால், அவைகளில் '**भूताद्भव्यात् धर्मादन्यत्र**' என்பதால் குறிக்கப்படும் காலத்ரய பரிச்சிந்ந வைலக்ஷண்யம் அந்வயிக்கமாட்டாது. இம்மாதிரியான அநுபபத்திகள் நேராமல் இருக்கும்பொருட்டு அவர் பின்வருமாறு பதங்களை யோஜிக்கிறார்.

**अस्माद् धर्मात्** ப்ரஸித்த புண்ய கர்மத்தைக் காட்டிலும், **अस्मात् अधर्मात्** - பாப கர்மத்தைக் காட்டிலும், **अन्यत्र यत्** - வேறுபட்ட உபாயம் எதுவோ [உபாஸநமானது புண்ய பாப ரூபங்களான கர்மங்களைக் காட்டிலும் விலக்ஷணம். அந்த உபாஸநமே இவ்விடத்தில் விவக்ஷிதம்.] **तद्वद** - அதைச் சொல்லும். **कृताकृताद् भूताद्भव्याच्च अन्यत्र यत्** -

" सर्वे वेदा यत्पदमामनन्ति तपांसि सर्वाणि च यद्वदन्ति ।
यदिच्छन्तो ब्रह्मचर्यं चरन्ति तत्तेपदं संग्रहेण ब्रवीम्योमित्येतत् ॥ १५॥

காலத்ரயாபரிச்சிந்நமான உபேயம் எதுவோ, तद्वद - அதைச் சொல் லும். [இந்த அந்வயத்தில் உபாயமும் உபேயமுமே ப்ரஸ்தாவிக்கப் பட்டிருக்கின்றனவே தவிர, உபேதா ப்ரஸ்தாவிக்கப்படவில்லையே என்று ஒரு ஶங்கை ஜநிக்கலாம். உபேதாவானவன் ஜீவன்; அவன் நித்யன், ஶாந்த தஶையில் அவன் ப்ராப்யனாகிறான். ஆகையால் ப்ராப்யம் ப்ரஸ்தாவிக்கப்பட்ட விடத்தில் அவனும் ப்ரஸ்தாவிக்கப் பட்டவனாகிறான். ஆகையால் மூன்றினுடைய ப்ரஶ்நமும் இதில் அடங்கி யுள்ளதென்று அறிந்து கொள்ளவேண்டும்.

இந்த யோஜனையிலும் சில அநுபபத்திகள் தென்படுவதாகத் தோன்றலாம். அவைகள் எல்லாவற்றுக்கும் உசிதமான ஸமாதாநங்கள் உண்டு. க்ரந்தம் விஸ்தரித்து விடும் என்னும் பீதியால் அவை இவ் விடத்திற் சொல்லப்படவில்லை. எந்த யோஜனை எடுக்கப்பட்ட போதி லும், மூன்றின் ப்ரஶ்நமே இந்த மந்தரத்தில் கேட்கப்படுகின்றது என் பது விதத்தம்.

---

15. இவ்வாறு ப்ரஶ்நம் செய்யப்பட்டவராய்க் கொண்டு, ம்ருத்யு, " न जायते म्रियते " இத்யாதியான மந்த்ரங்களால் விஸ்த்ருதமாக பதில் அளிக்கப்போகிறவராய், முதலில், ஶ்ரோதாவுக்கு அதிஶயித மான ஆதரம் உண்டாவதற்காக ப்ராப்யமாக இருக்கும் பரமாத்மாவின் மேன்மையை வெளிக்காட்டக்கூடிய சில விஷயங்களைச் சொல்லுகிறார். ஆகையால் 15, 16, 17 இந்த மூன்று மந்த்ரங்களிற் சொல்லப்பட்டுள்ள விஷயங்களெல்லாம், நசிகேதஸ்ஸுக்கு ஒருவித ஆதராதிசயம் ஜநிப்பதற் காகவே.

[ப - ரை.] सर्वे वेदाः - எல்லா வேதங்களும், यत्पदम् - எந்த ப்ராப்ய ஸ்வரூபத்தை, आमनन्ति - ப்ரதிபாதிக்கின்றனவோ, सर्वाणि तपांसि - தபஸ்ஸை ப்ரதாநமாகவுடைய மேல்வரும் பாகங்களெல்லாம், यत् - எந்த ஸ்வரூபத்தை, वदन्ति - சொல்லுகின்றனவோ, यत् - எந்த ஸ்வரூபத்தை, इच्छन्तः - [அடையவேண்டுமென்று] விரும்பி, ब्रह्मचर्यं - ப்ரஹ்மசர்யமாகிற வ்ரதத்தை, चरन्ति - அநுஷ்டிக்கிறார்களோ ['முமு க்ஷுக்கள்' என்று சேர்த்துக் கொள்ளவேண்டும்], तत्पदं - அந்த ஸ்வ ரூபத்தை, ते - உனக்கு, सङ्ग्रहेण - ஒரு ஶப்த விஶேஷத்தால், ब्रवीमि - சொல்லுகிறேன். ओम् इति - ப்ரணவமே, एतत् - அந்த ஶப்தம்.

पदम् - இதற்கு 'ஸ்வரூபம்' என்பது பொருளாகக் கூறப்பட் டிருக்கின்றது. पद्यत इति पदम् [எது அடையப்படுகிறதோ அது பதம்.] ஸ்வரூபமே ப்ராப்யமாகையால், அதுவே 'பத' என்னும் ஶப்தத்தால்

एतद्ध्येवाक्षरं ब्रह्म एतद्ध्येवाक्षरं परम् ।
एतद्ध्येवाक्षरं ज्ञात्वा यो यदिच्छति तस्य तत् ॥ १६ ॥
एतदालंबनं श्रेष्ठमेतदालंबनं परम् ।
एतदालंबनं ज्ञात्वा ब्रह्मलोके महीयते ॥ १७ ॥

---

சொல்லப்படுகின்றது. **तपांसि** - இதற்கு 'மேல்வரும் உபநிஷத் பாகங்கள்' என்பது பொருள். மேல்வரும் பாகங்கள் தபஸ்ஸை ப்ரதாநமாக ப்ரதிபாதிக்கின்றன. ஆகையால் அம்மாதிரி பொருள் கொள்ளப்பட்டிருக்கிறது.

**सङ्ग्रहेण** - இதில் 'ஸங்க்ரஹ' என்னும் பதத்திற்கு 'ஶப்தம்' என்பது பொருள். **सङ्गृह्यतेऽनेन इति सङ्ग्रहः** [எதனால் அர்த்த க்ரஹணம் ஏற்படுகின்றதோ அது 'ஸங்க்ரஹம்'; அது ஶப்தமே. இவ்விடத்தில் அந்த ஶப்தம் 'ஓம்' என்பதே. இந்த ஶப்தம் ப்ரஹ்ம வாசகம் என்பது ப்ரஸித்தம். இது தவிர, இந்த ஶப்தத்தின் அவயவங்களாகிற 'அ'காரம் விஷ்ணு வாசகமென்றும் 'ம'காரம் ஜீவ வாசகமென்றும் ஶாஸ்த்ரங்களில் விவரிக்கப்பட்டிருக்கிறபடியால், இதில் ப்ரக்ருத உபாயம் உபேதா இவைகளும் உபதிஷ்டங்கள் என்று அறியவேண்டும்.

---

16—17. இந்த இரண்டு மந்த்ரங்களும் ப்ரணவத்தைப் புகழ்கின்றன.

[ப-ரை] **एतदक्षरमेव** - இந்த அக்ஷரமே, **ब्रह्म हि** - ப்ரஹ்மமன்றோ ? [த்யாநத்திற்கு ப்ரணவம் உபகாரகம்; அந்தத்யாநமே ப்ரஹ்ம ப்ராப்திக்கு ஸாதநமாகிறபடியால், ப்ரணவம் ப்ரஹ்மமென்று சொல்லப்படுகிறது]. **एतदेव** - இதுவே, **परमक्षरम्** - ஜபம் செய்யத் தகுந்த மந்த்ரங்களுள் ஶ்ரேஷ்டம். **एतदक्षरं ज्ञात्वा** - இந்த அக்ஷரத்தையே உபாஸித்து, **यो यदिच्छति** - எவன் எதை விரும்புகிறானோ, **तत् तस्य** - அவனுக்கு அது கிடைக்கின்றது.

**एतच्छ्रेष्ठमालंबनम्** - இந்த ஓங்கார ரூபமான ஆலம்பநமே [த்யாநத்திற்கு] ஶ்ரேஷ்டம். **एतदालंबनम् परम्** இந்த ஓங்காரத்தை ஆலம்பநமாக உடைய த்யாநமே எல்லாவற்றுக்கும் உயர்ந்தது. **एतदालंबनं ज्ञात्वा** இந்த ஆலம்பநத்தை அறிந்து, **ब्रह्मलोके महीयते** - ப்ரஹ்மலோகத்தில் ப்ரகாசித்துக் கொண்டிருக்கிறான்.

இவ்வாறு மூன்று மந்த்ரங்களால், நசிகேதஸ்ஸுக்கு அதிகமான ஆதரம் ஸித்திக்கும் பொருட்டு ப்ராப்யமாயிருக்கும் பரமாத்மாவின் வைபவத்தைப் புகழ்ந்து பேசி, இப்பொழுது நசிகேதஸ்ஸால் கேட்கப்பட்ட கேள்விகளுக்குப் பதில் அளிக்க ஆரம்பிக்கிறார். 18—19 மந்த்ரங்களால் ப்ராப்தாவாகிற ஜீவனுடைய ஸ்வரூபமும், 20—22 மந்த்ரங்

**न जायते म्रियते वा विपश्चिन्नायं कुतश्चिन्न बभूव कश्चित् ।**
**अजो नित्यश्शाश्वतोऽयं पुराणो न हन्यते हन्यमाने शरीरे ॥ १८ ॥**

---

களால் ஜீவனுக்கு ஆத்மாவாக இருக்கும் பரமாத்ம ஸ்வரூபமும், 23-வது மந்த்ரத்தால் உபாய ஸ்வரூபமும் விளக்கப்படுகின்றன 24-வது மந்த்ரம் அந்த உபாயத்திற்கு அங்கமாக சில ஸாமாந்ய தர்மங்களைச் சொல்கின்றது. 25 வது மந்த்ரம் பரமாத்மாவின் பெருமை வாங் மநஸ்ஸுக்கு எட்டாதது என்று சொல்லி இந்த இரண்டாவது வல்லியை முடிக்கின்றது.

---

18. [ப-ரை] **विपश्चित् अयं** - விபஶ்சித்தாக இருக்கும் தன்மைக்கு அர்ஹனாயிருக்கும் இந்த ஜீவன், **न जायते म्रियते वा** - [இப்பொழுதும், அதாவது விபஶ்சித்தாக இராமல் இருக்கும் பொழுதும்] ஜநந மரணங்களற்றவன். **अयं कुतश्चिद् न** - இவன் ஒருவிடத்திலிருந்தும் உத்பாதநம் செய்யப்பட்டவனன்று. **न कश्चिद् बभूव** - இதற்கு முன்னும் ஜநநமற்றவன். **अजः** — உற்பத்தியற்றவன் [இது **'न जायते'** என்பதற்கு ஹேது]. **नित्यः**—உத்பத்தியற்றவனானதால் நஶிக்கும் தன்மையுமில்லை. [இது **'न म्रियते'** என்பதற்கு ஹேது]. **शाश्वतः**—ஶாஶ்வதமாக இருப்பவன் [இது **न कुतश्चित्** என்பதற்கு ஹேது]. **पुराणः**—அநாதியாக இருப்பவன் [இது **'न कश्चिद् बभूम'** என்பதற்கு ஹேது]. **शरीरे हन्यमाने [सति]** ஶரீரம் நாஶமடையும் பொழுதும், **न हन्यते** - [இவன்] நாஶம் அடைகிறதில்லை. [இவன் ஶரீரத்தில் அந்தர்வர்த்தியாயிருக்கிற படியால் ஶரீரம் நஶிக்கும் காலத்தில் இவனும் நஶிக்கவேண்டுமன்றோ என்னும் ஸந்தேஹம் வர, 'அப்படி இல்லை' என்று இந்தக் கடைசி வாக்யம் சொல்லுகின்றது].

**विपश्चित् विविधं पश्यन्ती चित् यस्य** [ஸங்கோசமற்ற ஸர்வ விஷயகமான ஜ்ஞாநம் எவனிடம் இருக்கிறதோ அவன் 'விபஶ்சித்'] என்று இந்தப் பதம் வ்யுத்பந்நமாயிருக்கிறபடியால், இது முக்த ஜீவனையே குறிக்கும். பத்த ஜீவனுக்கு அப்படிப்பட்ட அஸங்குசித ஸர்வ விஷயக ஜ்ஞாநம் அஸம்பாவிதம். 'முக்தனாக இருக்கும் தஶையில் மாத்ரம் இவன் ஜநந மரணமற்றவன் என்பதில்லை; பத்த தஶையிலும் அப்படிப்பட்டவன்' என்பதைக் குறிக்கின்றது '**विपश्चित् अयं न जायते म्रियते वा**' என்னும் வாக்யம். இந்த வாக்யத்தில் **'वा'** என்பது **'च'** என்னும் பதத்தின் அர்த்தமுடையது. **न जायते, न च म्रियते.**

இந்த மந்த்ரம் பகவத்கீதையில் ஸ்வல்ப மாறுதலுடன் காணப்படுகின்றது. "**न जायते म्रियते वा कदाचिन्नायं भूत्वा भविता वा न भूयः** என்பது கீதா வாக்யம். அவ்விடத்தில் 'ஜீவன் ஜநந மரண ஶூந்யன்' என்னும் கேவல ப்ரதிஜ்ஞை மாத்ரமன்று; கீழ்ச் சொல்லப்பட்ட அவிநாஶித்வம் முதலிய ஹேதுக்களால் அவன் ஜநந மரணமற்றவனென்பது ஸித்திக்

**हन्ता चेन्मन्यते हन्तुं हतश्चेन्मन्यते हतम् ।**
**उभौ तौ न विजानीतो नायं हन्ति न हन्यते ॥ १९ ॥**

---

கின்றது என்பது சொல்லப்படுகின்றது. இவ்விடத்தில் '**कदाचित्**' என்னும் ஸ்தாநத்தில் '**विपश्चित्**' என்பது தென்படுகிறபடியால் அந்தப் பதத்தின் ஸ்வாரஸ்யத்தை அநுஸரித்து, 'விபஶ்சித்வத்திற்கு யோக்யமாக இருக்கும் தசையிற்போலப் பத்த தசையிலும் அவன் ஜநந மரண மற்றவன்' என்று நிரூபிக்கப்படுகின்றது. கீதா பாஷ்யத்தில், '**शाश्वतः**' '**पुराणः**' என்னும் பதங்களுக்கு ரஸவத்தான தாத்பர்யம் சொல்லப்பட்டிருக்கின்றது. அது என்னவென்றால்: - 'ஜீவன் ஸ்தூல பரிணாம மற்றவன் என்பது மாத்ரமில்லை; ஸூக்ஷ்மமான அவிஶத பரிணாமமும் அவனிடம் இல்லை' என்பதைக் குறிக்கின்றது 'ஶாஶ்வத' என்னும் பதம். 'அநாதியாக இருக்கையிலும் எப்பொழுதும் புதிது புதிதாகவே தென்படுகின்றது; எப்பொழுதும் அபூர்வ வஸ்து போல அநுபவிக்கத் தகுந்தது இந்த ஜீவ ஸ்வரூபம்' என்பதைக் குறிக்கின்றது 'புராண' என்னும் பதம். '**पुराऽपि नवः पुराणः**' என்பது அதன் வ்யுத்பத்தி.

---

19. ஶரீரம் நஶித்தபோதிலும் ஆத்மா நஶியாது என்பதே இந்த மந்த்ரத்தால் விவரிக்கப்படுகிறது.

[ப - ரை] - **हन्ता** - கொல்லுகிறவன் [தேஹத்தைச் சேதிக்கிற ஒருவன்], **हन्तुं मन्यते चेत्** - 'நான் இவனைக் கொல்லுகிறேன்' என்று எண்ணினானேயானால் [அதாவது: தேஹமே ஆத்மாவென்று ப்ரமித்துத் தேஹத்தைச் சேதிக்கிற ஒருவன் 'நான் ஆத்மாவைக் கொல்லுகிறேன்' என்று எண்ணினானே யானால்], **हतः** - கொல்லப்படுகிறவன் [வெட்டுண்ட தேஹத்தை யுடைய ஒருவன்], **हतं मन्यते चेत्** - 'கொல்லப்பட்டுப் போய்விட்டேன்' என்று தன்னை எண்ணிக்கொண்டானே யானால் [அதாவது: தேஹமே ஆத்மாவென்று ப்ரமித்துத் தேஹம் வெட்டுப்பட்டவுடன் ஆத்மா வெட்டுண்டு கொல்லப்பட்டுப் போய்விட்டது என்று எண்ணினானே யானால்], **तावुभौ** - இந்த இருவரும், **न विजानीतः** - அறியாதவர்களே [அதாவது: ஆத்ம ஸ்வரூபத்தை அறியாதவர்களே]. **अयं न हन्ति** - இவன் கொல்லவில்லை [ஆத்மாவைக் கொல்லவில்லை], **न हन्यते** - [இவன்] கொல்லப்படவுமில்லை [அதாவது: ஆத்ம ஸ்வரூபம் கொல்லப்படவில்லை]. ஏனென்றால், ஆத்ம ஸ்வரூபமானது கொல்லப்படத் தகாத வஸ்துவன்றோ? ஒருவனுக்குக் கொல்லும் ஶக்தி இருக்கலாம்; ஆனால் எது கொல்லப்படக் கூடியதோ அதை அவன் கொல்லலாமேயன்றி, கொல்லப்படக் கூடாததை அவன் கொல்ல முடியாதன்றோ? ஜலத்துக்கு நனைக்கும் ஶக்தி உண்டு; அது வஸ்த்ரம் முதலியவைகளை நனைக்கும்; வாயுவையும் அது நனைக்குமோ? அதுபோலவே இவ்விடத்திலும்.

உத்பத்தி நாஶம் இவைகளின் தத்வம் பின்வருமாறு நிற்கும். ஒரு வஸ்து ஓர் அவஸ்தையை இழந்து மற்றோர் அவஸ்தையை அடைந்தால், பழைய அவஸ்தையுடன் கூடியிருந்த வஸ்து நஶித்துவிட்டதென்றும், புதிய அவஸ்தையுடன் கூடிய வஸ்து உத்பத்தியடைந்துவிட்டதென்றும் நாம் வ்யவஹரிக்கிறோம். குடம் உடைந்தால் 'குடம் நஶித்துவிட்டது, கபாலம் உற்பத்தியடைந்திருக்கிறது' என்று நாம் பேசுகின்றோம். உண்மையோ இவ்விடத்தில் அவஸ்தை மாறுதலே. குடமாயிருக்கும் அவஸ்தை கபாலமாயிருக்கும் அவஸ்தையாக மாறிவிட்டது என்பதுதான். அவஸ்தை மாறுதல் என்பது, அசேதந வஸ்து சேதநனாக இருக்கும் ஜீவன் ஈஶ்வரன் ஆக மூவருக்கும் உண்டு. ஆனால், அசேதந வஸ்துவுக்கு ஸ்வரூபமே மாறும்; ஜீவனுக்கு ஸ்வரூபம் மாற மாட்டாது; ஜ்ஞாநம் சுருங்குகிறது மலருகிறது இவைபோன்ற ஸ்வபாவ மாறுதல் அவனுக்கு உண்டு; ஈஶ்வரனுக்கோ வென்றால், ஸ்வரூப மாறுதலுமில்லை ஸ்வபாவ மாறுதலுமில்லை; ஆனால், ப்ரளய காலத்தில் ஸூக்ஷ்ம சேதநாசேதநங்களின் வைஶிஷ்ட்யமும் ஸ்ருஷ்டி காலத்தில் ஸ்தூல சேதநாசேதந வைஶிஷ்ட்யமும் இருக்கிறபடியால், ஶரீரத்வாரா அவனுக்கும் ஒருவித மாறுதல் ஸம்பவிக்கிறது. இந்த மாறுதல்களில் எவைகளுக்கு ஸ்வரூப மாறுதல் இல்லையோ அவைகளை நித்ய வஸ்துக்களென்றும் மற்றவைகளை அநித்யங்களென்றும் நாம் வ்யவஹரிக்கின்றோம். ஆகையால், அசேதநங்களெல்லாம் அநித்யங்கள்; சேதநர்களெல்லாரும் நித்யர்கள். ஜீவனுக்குள்ள நித்யத்வத்திற்கும் ஈஶ்வரனுக்குள்ள நித்யத்வத்திற்கும் வாசி உண்டு. அது என்னவென்றால் :—ஜீவனுக்குக் கேவலம் ஸ்வரூப மாறுதலில்லாமை; ஈஶ்வரனுக்கு ஸ்வபாவ மாறுதல் ஸ்வரூப மாறுதல் இரண்டுமில்லாமை. இதை உத்தேஶித்தே, ஶ்ருதி ஈஶ்வரனை நித்யர்களுக்கெல்லாம் நித்யன் என்று சொல்லுகிறது. 'नित्यो नित्यानाम्'

இந்த இரண்டு மந்த்ரங்களும் ஒரே விஷயத்தைப்பற்றியவை. ஏனென்றால், இரண்டாவது மந்த்ரம் முதல் மந்த்ரத்தில் சொல்லப்பட்டுள்ள 'न हन्यते हन्यमाने शरीरे' என்னும் வாக்யத்தின் விவரணம். 'ஒரே விஷயத்தைப்பற்றியது என்பது யுக்தமே; ஆனால் அந்த விஷயம் ஜீவாத்மாவா? இல்லாவிட்டால் பரமாத்மாவா? என்பதில் மாத்ரம் ஸந்தேஹம்' என்று ஸம்ஶயித்தால், 'அந்த விஷயம் ஜீவாத்மாவே' என்று ஸமாதாநம் சொல்லவேண்டும். இரண்டாவது மந்த்ரம் ஜீவனைப்பற்றியதே என்பது ஸித்தம்; ஏனென்றால், 'கொல்லுகிறான் கொல்லப்படுகிறான்' என்னும் ஶங்கை பரமாத்மாவைப் பற்றி எழாதாகையால். லோகத்தில் 'நான் இவனைக் கொல்லுகிறேன், இவன் என்னைக் கொல்லுகிறான்' என்னும் எண்ணம் தேஹத்துடன் கூடிய ஜீவன்களைப் பற்றி ஏற்படுகிறதேயன்றிப் பரமாத்மாவைப்பற்றி அம்மாதிரி எண்ணம் ஜநிக்கிறதில்லை. இவ்வாறு இந்த மந்த்ரம் ஜீவாத்மாவைப்

**अणोरणीयान्महतो महीयानात्माऽस्य जन्तोर्निहितो गुहायाम् ।**
**तमक्रतुः पश्यति वीतशोको धातुः प्रसादान्महिमानमात्मनः ॥ २० ॥**

---

பற்றியே பேசுகிறது என்பது ஸித்தமாகிவிட்டால், இந்த மந்த்ரமும் இதற்கு முன்னிருக்கும் மந்த்ரமும் ஒரே விஷயத்தைப் பற்றியவையாகை யால், முன் மந்த்ரமும் ஜீவனைப்பற்றியதே என்பது ஸித்தம்.

---

20. இவ்வாறு இரண்டு மந்த்ரங்களால் ஜீவாத்மாவின் ஸ்வ ரூபம் ஶோதிக்கப்பட்டது. ஸாமாந்யமாக ஜநங்கள் தேஹமே ஆத்மா வென்று ப்ரமித்திருக்கிறபடியால், 'இந்தத் தேஹம் ஆத்மாவன்று; இந்த ஶரீரத்துக்குள் அந்த ஜீவன் இருந்தபோதிலும் இந்த ஶரீரம் நாஶம் அடையும் காலத்தில் அந்த ஜீவன் நாஶமடைகிறான் என்பது இல்லை; அவன் ஜநந மரண ஶூந்யன்; அவனுக்கு உத்பத்தியில்லை; நாஶமு மில்லை; அவன் நித்யன்; ஆகையால் தேஹத்தைக் காட்டிலும் அத்யந்தம் விலக்ஷணன்' என்று விளக்கி அந்த ப்ரமத்தைப் போக்கி விட்டுப் பிறகு, 'அப்படி நித்யனாக இருக்கும் ஜீவன் ஒருகால் ஸர்வ ஸ்வதந்த்ரனாக இருக்கிறானோ? அவனுக்கு ஶேஷி ஒருவனும் இல்லையோ?' என்று உதிக்கும் ஶங்கைக்குப் பரிஹாரமாக, 'அவனுக்கும் அந்தராத் மாவாக ஒருவன் இருக்கிறான்; அவனுக்கு இந்த ஜீவன் ஶேஷன்' என்று சொல்லுகிறது இந்த மந்த்ரம். அப்படித் தன்னைக் காட்டிலும் வேறுபட்டும் தனக்கு ஶேஷியாகவும் ஒரு பரமாத்மா இருக்கிறான் என்பதை உணர்ந்து, அவனுடைய ஸர்வ நியந்த்ருத்வ ரூபமான மஹி மையை எப்பொழுது இவன் பார்க்கிறானோ, அப்பொழுது இந்த ஜீவன் அந்தப் பரமாத்மாவின் க்ருபையால் ஶோகமற்றவனாக ஆகிறான் என் றும் இந்த மந்த்ரத்தில் சொல்லப்படுகின்றது. ஆகையால் இந்த மந்த் ரம் பரமாத்மாவைப் ப்ரதிபாதிக்கின்றதென்று அறியவேண்டும்.

[ப-ரை.] **अणोः** - அதி ஸூக்ஷ்மமா யிருக்கிற [வஸ்துவைக் காட்டிலும்], **अणीयान्** - மிக ஸூக்ஷ்மனாகவும், **महतः** மிகப் பெரியதா யிருக்கும் [வஸ்துவைக் காட்டிலும்], **महीयान्** - இன்னும் மிகப் பெரியவ னாகவு மிருக்கும் [மற்றொருவன்], **अस्य जन्तोः** - இந்தச் சேதநனுடைய, **आत्मा** - [உள்ளில் புகுந்து நியமிக்கும் ஸாமர்த்யமுள்ள] ஆத்மாவாக, [**अस्य जन्तोः** - இந்தச் சேதநனுடைய], **गुहायाम्** - [ஹ்ருதய] குஹையில், **निहितः** - இருக்கிறான். **अक्रतुः** - [காம்யங்களான] கர்மங்களைச் செய் யாதவனா யிருந்துகொண்டு [ஒருவன்], [**यदा** - எப்பொழுது], **तम्** - அவனை, **आत्मनो महिमानम्** - தன்னுடைய ஸகலவித பெருமைக்கும் காரணமாக, **पश्यति** பார்க்கிறானோ, [**तदा** - அப்பொழுது], **धातुः** - [ஸகலத்திற்கும்] தாரகனாயிருக்கும் [அந்தப் பரமாத்மாவின்], **प्रसादात्** - க்ருபையால், **वीतशोकः** - ஶோகமற்றவனாக, [**भवति** - ஆகிறான்].

**अणुः** - ஸூக்ஷ்மமா யிருக்கும். அதாவது: உள்ளில் புகுந்து நிற்கக்கூடிய ஸாமர்த்யமுள்ள. இவ்விடத்தில் இந்தப் பதத்தால் ஜீவாத்மா குறிக்கப்படுகிறான். அசேதநமாக இருக்கும் தேஹத்தினுள் ஜீவாத்மா புகுந்து நிற்கிறபடியால், அந்த ஆத்மாவைத் தேஹத்தைக் காட்டிலும் ஸூக்ஷ்மமென்று வ்யவஹரிக்கிறோம். அந்த ஆத்மாவுக்குள்ளும் புகுந்து நிற்கும் மற்றொருவன் உண்டு. அவன் அந்த ஆத்மாவைக் காட்டிலும் ஸூக்ஷ்மன் என்று சொல்லப்படுகிறான். அவன்தான் பரமாத்மா.

**महतो महीयान्** - 'மஹத்' என்பதற்குப் 'பெரியது' என்பது பொருள். அதாவது: வ்யாபித்து நிற்கும். ஆகாஶம் விஸ்தாரமாக வ்யாபித்து நிற்கிறபடியால், அதை 'மஹத்' என்று சொல்லக்கூடும். ஆனால் அந்த ஆகாஶத்தாலும் வ்யாபிக்கப்படாமல் இருக்கும் ப்ரதேஶமுண்டு; அம்மாதிரி ப்ரதேஶத்திலும் வ்யாபித்து நிற்கக்கூடிய ஒரு வஸ்து இருந்தால், அதை ஆகாஶத்தைக் காட்டிலும் மிகப் பெரியது என்று சொல்லக்கூடுமன்றோ? பரமாத்மாவால் வ்யாபிக்கப்படாமலுள்ள ப்ரதேஶமொன்றுமில்லை யாதலால், அவனை மிகப் பெரியவனென்று சொல்லுகிறோம். '**स्वाव्याप्तवस्तुरहितः**' [தன்னால் வ்யாபிக்கப்படாத வஸ்துவற்றவன்].

**अस्य जन्तोः** - கீழில் ப்ரஸ்தாவிக்கப்பட்ட ஜந்துவினுடைய. 'ஜந்து' என்னும் ஶப்தத்திற்குச் 'சேதநன்' என்னும் பொருளும் உண்டு. ஆகையால், இவ்விடத்தில் அந்தப் பதம் 'சேதநனாயிருக்கும் ஜீவாத்மாவைக் குறிக்கின்றது' என்று வ்யாக்யாநம் செய்யப்பட்டிருக்கிறது. இந்த '**अस्य जन्तोः**' என்பது '**आत्मा**' என்னும் பதத்துடன் சேர்க்கப்படுகின்றது. **अस्य जन्तोः आत्मा** - இந்தச் சேதநனாகிற ஜீவாத்மாவுக்கு ஆத்மாவாக. பிந்தி '**गुहायाम्**' [குஹையில்] என்னும் பதம் வருகின்றது. 'யாருடைய குஹையில்?' என்று ஆகாங்க்ஷை பிறக்குமாதலால், அதற்கும் '**अस्य जन्तोः गुहायाम्**' என்று அந்வயம் செய்து கொள்ளப்படுகின்றது. '**अस्य जन्तोः**' என்பது இரண்டுக்கும் நடுவில் ப்ரயோகம் செய்யப்பட்டிருக்கிறபடியால், அதை இரண்டிலும் அந்வயம் செய்யக்கூடும்.

**आत्मा** - ஒரு வஸ்துவின் உள்ளில் புகுந்தும் அதை நியமித்துக்கொண்டும் எது இருக்கிறதோ, அது அந்த வஸ்துவுக்கு ஆத்மாவாகும். [**अन्तः प्रविश्य नियन्ता**] தேஹத்திற்குள் ஜீவன் புகுந்திருக்கிறான்; தேஹத்தை நியமித்துக்கொண்டும் இருக்கிறான். ஆகையால் அந்தத் தேஹத்திற்கு அவன் ஆத்மா. அம்மாதிரியே பரமாத்மா ஜீவனுக்குள் புகுந்து நிற்கிறான்; அந்த ஜீவனை நியமித்துக்கொண்டும் இருக்கிறான். ஆகையால் அவன் அந்த ஜீவனுக்கும் ஆத்மாவாகிறான்.

**अक्रतुः** - 'க்ரது' என்பது கர்மங்களைப் பொதுவாகக் குறிக்கும். இவ்விடத்தில் பலாபிஸந்தியுடன் செய்யப்படும் கர்மங்களை அது குறிக்கின்றது. ஆகையால் 'காம்ய கர்மங்களைச் செய்யாதவன்' என்று வ்யாக்யாநிக்கப்பட்டிருக்கின்றது.

आसीनो दूरं व्रजति शयानो याति सर्वतः ।
कस्तं मदामदं देवं मदन्यो ज्ञातुमर्हति ॥ २१ ॥

குறிப்பு—(1) இந்த மந்த்ரத்தின் இரண்டாவது பாதியில் சில பதங்கள் அத்யாஹரிக்கப்படுகின்றன. **'यदा पश्यति तदा वीतशोको भवति'** [எப்பொழுது பார்க்கிறானோ அப்பொழுது சோகமற்றவனாகிறான்] என்று **'यदा तदा'** பதங்கள் அத்யாஹரிக்கப்படுகின்றன. (2) 'எதைப் பார்க்கிறான்?' என்னும் கேள்விக்கு, **'तम् आत्मनो महिमानं पश्यति'** [அந்தப் பரமாத்மாவைத் தனது மஹிமை யெல்லாவற்றுக்கும் காரணமாகப் பார்க்கிறானோ] என்பது ஸமாதானம். 'மஹிமை' என்னும் பதத்திற்கு 'மஹிமைக்கு ஹேதுவான' என்று தாத்பர்யம் சொல்லப்படுகின்றது. ஜீவனுக்கு முக்தி காலத்தில் ஆவிர்ப்பவிக்கும் ஸர்வஜ்ஞத்வம் முதலான பெருமைகள் எல்லாவற்றுக்கும் பரமாத்மாவே காரணமானதால், இம்மாதிரி இவ்விடத்தில் பேசப்பட்டிருக்கின்றது. [**'महिमानम्-महत्त्वसंपादकं, स्वसार्वज्ञ्यादिगुणाविर्भाव हेतुभूतम् परमात्मानम्'** என்பது பாஷ்யம்.]

**धातुः प्रसादात् - धारकस्य परमात्मनः प्रसादात्** [தாரகனாயிருக்கும் பரமாத்மாவின் அநுக்ரஹத்தால்]. இது **'वीतशोको भवति'** என்பதுடன் அந்வயிக்கப்பட்டிருக்கின்றது. இதை **'पश्यति'** என்பதுடனும் அந்வயிக்கலாம். பரமாத்ம தத்வம் அத்யந்தம் அலௌகிகமானதால், பரமாத்மாவின் அநுக்ரஹமிராவிட்டால் அது தென்படமாட்டாதன்றோ? இது அடுத்த மந்த்ரத்தில் விளக்கப்படுகின்றது.

**'अक्रतुं'** என்று ஒரு பாடமும் உண்டு. அப்பொழுது அது **'तम्'** என்பதற்கு விசேஷணமாகும். கர்மங்களால் ஏற்றமும் குறைவும் பரமாத்மாவுக்கு ஸம்பவியாததலால், அவன் 'அக்ரது' என்று சொல்லப்படக்கூடும். **'महिमानमात्मनः'** என்பதற்குப் பதிலாக **'महिमानमीशम्'** என்றும் ஒரு பாடமுண்டு.

இந்த மந்த்ரத்தில் சொல்லப்பட்டுள்ள அர்த்தத்தை வேறொரு ஸந்தர்ப்பத்தில் பின்வருமாறு ஸ்ரீ பாஷ்யம் விளக்குகின்றது. **"अयं यदा स्वस्मादन्यं सर्वस्येशं प्रीयमाणमस्येश्वरस्य महिमानं च निखिलजगन्नियमनरूपं पश्यति, तदा वीतशोको भवति"** [இந்த ஜீவன் தன்னைக் காட்டிலும் அந்யனாக இருக்கும் பரமாத்மாவை நம்முடைய உபாஸநாதிகளால் ப்ரீதி செய்யப்படுகிறவனென்றும், அந்தப் பரமாத்மாவின் மஹிமை ஸகல ஜகத்தையும் நியமிக்கும் ரூபத்துடன் கூடினதென்றும் எப்பொழுது பார்க்கிறானோ, அப்பொழுது அவன் சோகமற்றவனாகிறான்] இதில், **'महिमानम्'** என்பது **'परमात्मनो महिमानम्'** என்று சேர்க்கப்பட்டிருக்கின்றது. **'महिमानम्'** என்பதற்கு **'जीवात्मनः महत्त्वहेतुभूतम्'** என்று அர்த்தம் செய்யப்படவில்லை. **'आत्मनः'** என்னும் பதம் அவ்விடத்தில் இருந்தால் க்லேசம் ஸம்பவித்திருக்கும்.

---

21. ஆம் மந்த்ரத்தில் பரமாத்மாவின் அநுக்ரஹம் இராமற்

अशरीरं शरीरेष्वनवस्थेष्ववस्थितम् ।
महान्तं विभुमात्मानं मत्वा धीरो न शोचति ॥ २२ ॥

போனல், அவனைப் பார்ப்பது அஸாத்யமென்று சொல்லப்பட்டது. அந்தப் பரமாத்ம தத்வம் அப்படிப்பட்டது என்பது இந்த மந்த்ரத்தால் விளக்கப்படுகின்றது.

[ப - ரை.] **आसीनः** - உட்கார்ந்திருப்பவனுகவே, **दूरं व्रजति** - வெகு தூரம் போகிறுன். **शयानः** - படுத்திருப்பவனுகவே, **सर्वतो याति** - எவ்விடத்திலும் ஸஞ்சரிக்கிறுன். **तम्** - அப்படிப்பட்ட, **मदामदम्** - [பரஸ்பர விருத்த தர்மங்களாகிற] ஸந்தோஷத்துடன் கூடியிருப்பது - அது இராமல் இருப்பது - இவை போன்ற தர்மங்களால் தொடப்படாதவனு யிருக்கும், **देवम्** - பரமாத்மாவை, **मदन्यः**—என்னைத் தவிர்த்த, **कः** - எவன், **ज्ञातुम्** - அறிவதற்கு, **अर्हति** - யோக்யனுவான் ?

'உட்கார்ந்து கொண்டே ஓடுகிறுன், படுத்தே ஸஞ்சரிக்கிறுன்' என்று பேசுவதெல்லாம் பரமாத்மாவின் விசித்ர ஶக்தியைக் குறிப்பதற்காக. 'நமக்கு எவை எவை விருத்த தர்மங்களென்று தென்படுகின்றனவோ, அவையெல்லாம் அவனிடத்தில் ஸம்பவிக்கும். அவ்வளவு ஶக்தி வைசித்ர்யம் அவனிடம் இருக்கின்றது. ஆகையால் அவனை நம்முடைய ப்ரயத்நத்தால் மாத்ரம் அறியமுடியாது' என்பது இந்த மந்த்ரத்தின் தாத்பர்யம்.

**मदामदम्** - இது '**मद**' '**अमद**' ஆக இரண்டு பதங்களின் சேர்க்கையால் உண்டானது. இவைகளுக்கு 'ஸந்தோஷத்துடன் கூடிய' 'அது அற்றிருக்கிற' என்பது பொருள். இம்மாதிரியான விருத்த தர்மங்களின் நடுவில் இருப்பவன் என்பது தாத்பர்யம்.

**मदन्यः** - பரமாத்மாவின் ப்ரஸாதத்தைப் பெற்றிருக்கும் என்னைக் காட்டிலும் வேறுனவன். பரமாத்மாவின் ப்ரஸாதத்தைப் பெற்றவர்களுக்கே அவன் ஸுலபமாக அறியப்படக்கூடியவன் என்பது கருத்து.

---

22. பரமாத்மாவின் விசித்ர வைபவமே வேறு முகமாக மறுபடியும் பேசப்படுகின்றது.

[ப - ரை.] **अशरीरम्** - [கர்மத்தால் ஏற்படும்] ஶரீரமற்றவனுயும், **अनवस्थेषु शरीरेषु** - அஸ்திரங்களான ஶரீரங்களுக்குள், [நித்யமான அந்தராத்மாவாக] இருக்கிறவனுயும், **अवस्थितम्** - பட்ட] மஹா வைபவஶாலியாயு மிருக்கும், **महान्तं विभुम्** -[இப்படிப் **मत्वा** - த்யாநம் செய்துகொண்டு, **धीरः** - நல்ல புத்தியை உடையவன், **आत्मानम्** - பரமாத்மாவை, **न शोचति** - துக்கங்களுக்குப் பாத்ரமாகிறுனில்லை.

ஶரீரம் இராமல் இருக்கையிலும் ஶரீரங்களில் நித்யனுக இருப்பது மஹா வைபவமன்றோ ?

**नायमात्मा प्रवचनेन लभ्यो न मेधया न बहुना श्रुतेन ।**
**यमेवैष वृणुते तेन लभ्यस्तस्यैष आत्मा विवृणुते तनूं स्वाम् ॥ २३ ॥**

---

23. 'அந்தப் பரமாத்மா இவ்வளவு துரதிகமனாக இருந்தால் அவனை அடைவது எப்படி? **'मत्वा'** [த்யானம் செய்து] என்று கீழ் மந்த்ரத்தில் சொல்லப்பட்டுள்ள உபாயம் எப்படிப்பட்டது?' என்று கேள்வி பிறக்க, அதற்கு ஸமாதானமாக அவனை அடையும் உபாயம் யாது என்பதை இந்த மந்த்ரம் விளக்குகின்றது.

[ப - ரை.] **अयमात्मा** - இந்தப் பரமாத்மா, **प्रवचनेन** - [கேவலம்] மநநத்தால், **न लभ्यः** - அடையக்கூடாதவன்; **मेधया**-[கேவலம்] நிதித்யாஸநத்தாலும், **न** - [அடையக்கூடியவன்] இல்லை; **बहुना श्रुतेन** - [கேவலம்] அளவற்ற ஶ்ரவணத்தாலும், **न** - [அடையக்கூடியவன்] இல்லை. **एषः** - இந்தப் பரமாத்மா, **यम्**-எவனை, **वृणुते** வரிக்கிறானோ, **तेनैव**-அவனாலேயே **लभ्यः**-அடையத்தகுந்தவன். **तस्य**-அவனுக்கு, **एष आत्मा**-இந்தப் பரமாத்மா, **स्वां तनुम्** - தன்னுடைய ஸ்வரூபத்தை, **विवृणुते** - ப்ரகாஶிப்பிக்கிறான்.

இதன் கருத்து என்னவென்றால்: 'பக்தியற்ற ஶ்ரவண மநந நிதித்யாஸநங்களால் பரமாத்மா அடையத்தகுந்தவன் அன்று. அவனிடத்தில் எந்த உபாஸகன் அளவற்ற ப்ரீதி செய்கிறானோ, அந்த உபாஸகன் அவனுக்கு அளவற்ற ப்ரீதி விஷயமாகிறான். அப்படி ப்ரீதி விஷயமாயிருப்பவனையே அவன் வரிப்பானாதலால், அந்த உபாஸகனுக்கே அவன் தனது ஸ்வரூபத்தை ப்ரகாஶிப்பிக்கிறான்' என்பதுதான். ஆகையால் 'எவனை வரிக்கிறானோ அவனுக்கே தனது ஸ்வரூபத்தை ப்ரகாஶிப்பிக்கிறான்' என்பதற்கு 'அவன் ஒருவித வ்யாஜத்தையும் அவலம்பியாமல் தனது இஷ்டப்படி குணதோஷ விவேசநமின்றிக்கே தன் ஸ்வரூபத்தைக் கொடுத்துவிடுகிறான்' என்பது கருத்தன்று.

**"प्रियतम एव हि वरणीयो भवति । यस्यायं निरतिशयप्रियः स एवास्य प्रियतमो भवति । यथाऽयं प्रियतमः आत्मानं प्राप्नोति तथा स्वयमेव भगवान् प्रयतते ॥"**

[எவன் ப்ரியதமனோ அவனே வரிக்கத்தகுந்தவனாவான். எந்த உபாஸகனுக்கு இந்தப் பரமாத்மா அத்யர்த்த ப்ரியனோ, அவனே அவனுக்கு ப்ரியதமனாவான். அப்படிப்பட்ட ப்ரியதமன் எப்படி தன்னை அடைவானோ, அப்படி அந்தப் பரமாத்மா ஸ்வயமாகவே ப்ரயத்நப்படுகிறான்] என்பது ஸ்ரீ பாஷ்ய ஸூக்தி. பகவானாலே வரிக்கப்படும் தன்மை பகவானிடத்தில் அளவற்ற ப்ரீதிசெய்பவனுக்கே ஸம்பவிக்கும் என்பது தாத்பர்யம். பகவானிடத்தில் ப்ரீதி செய்கிறவனே பகவத் ப்ரீதி விஷயமாகிறான் என்பதை ஸ்ரீ கீதாசார்யனும் அநுக்ரஹித்திருக்கிறான்.

नाविरतो दुश्चरितान्नाशान्तो नासमाहितः ।
नाशान्तमानसो वाऽपि प्रज्ञानेनैनमाप्नुयात् ॥ २४ ॥

"तेषां सततयुक्तानां भजतां प्रीतिपूर्वकम् ।
ददामि बुद्धियोगं तं येन मामुपयान्ति ते ॥"

**'वृणुते'** - வரிக்கிறுன். 'வரணம்' என்னும் ஶப்தத்திற்கு 'என்னை இவன் அடையக்கடவன் என்னும் ஸங்கல்பம்' என்பது பொருள். **"मामयं प्राप्नुयादित्यमोघः सङ्कल्पः"** என்று தத்வ டீகையில் விவரணம் செய்யப்பட்டிருக்கிறது.

இந்த மந்த்ரத்தில் 'ப்ரவசநம்' 'மேதை' 'ஶ்ருதம்' என்று மூன்று விஷயங்கள் ப்ரஸ்தாவிக்கப்பட்டிருக்கின்றன. இந்த மூன்றும் முறையே 'மநநம்' 'நிதித்யாஸநம்' 'ஶ்ரவணம்' என்று மற்றோரிடத்தில் சொல்லப்படும் மூன்று ப்ரக்ரியைகளைச் சொல்லுகின்றனவென்று வ்யாக்யாநிக்கப்பட்டிருக்கின்றது. இவைகளுள் 'ஶ்ருதம்' என்னும் பதம் 'ஶ்ரவணம்' என்பதைக் குறிக்கின்றது என்பது வ்யக்தம். 'ப்ரவசநம்' என்பது 'மநந'த்தைக் குறிக்கின்றது என்பதும் **'प्रोच्यतेऽनेन'** என்று கரண வ்யுத்பத்தியினுல் ஸித்திக்கும். இப்படி இவ்விரண்டு பதங்களும் ஶ்ரவணத்தையும் மநநத்தையும் குறித்துவிட்டால், நிதித்யாஸநம் ஒன்றே அவஶிஷ்டமாக இருக்கிறபடியால், 'மேதை' என்பது நிதித்யாஸநத்தைக் குறிக்கின்றது என்று சொல்லலாம் என்பது வ்யாக்யாந கர்த்தாக்களின் கருத்து. இதற்குமேல் மற்றும் ஒரு ஸம்ஶயம் வரக்கூடும். **"निदिध्यासितव्यः"** [த்யாநம் செய்யவேண்டும்] என்று ஶ்ருதியில் ஆத்ம நிதித்யாஸநத்தை ஜ்ஞாநத்திற்கு உபாயமாகச் சொல்லியிருக்கிறபடியால், **'मेधया आत्मा न लभ्यः'** [நிதித்யாஸநத்தால் ஆத்ம ப்ராப்தி வரமாட்டாது] என்று சொல்வது ஸங்கதமாகுமோ? என்பதுதான் அந்த ஸம்ஶயம். இதற்குப் பின் வருமாறு ஸமாதாநம் சொல்லப்படுகின்றது. இவ்விடத்தில் 'ஶ்ரவண மநந நிதித்யாஸநங்கள் ஆத்ம ப்ராப்திக்கு ஸாதநங்களல்ல' என்பது சொல்லப்படவில்லை. இவைகள் எவ்வளவு இருந்தாலும் அவை ப்ரீதியற்றவைகளாக இருக்கும் பக்ஷத்தில் அவைகள் ப்ரயோஜநப்படமாட்டா என்றே சொல்லப்படுகிறது. இந்தத் தாத்பர்யத்தை வ்யாக்யாநிக்கிறவர்கள், 'கேவல ப்ரவசநத்தாலாவது கேவல நிதித்யாஸநத்தாலாவது கேவல ஶ்ரவணத்தாலாவது ஆத்மாவை அடைய முடியாது' என்னும் விவரணத்தால் விளக்கி யிருக்கிறுர்கள்.

---

24. இப்படி ப்ரீதியுடன் செய்யப்படும் உபாஸநமே பரமாத்ம ப்ராப்திக்குக் காரணமாகும் என்பதைச் சொல்லிவிட்டு, இனி 'அந்த உபாஸநம் நிறைவேறவேண்டுமாகுல் சில தர்மங்களை அந்த உபாஸநத்திற்கு அங்கமாக அநுஷ்டித்துவரவேண்டு' மென்று சொல்லப்படுகின்றது.

---

यस्य ब्रह्म च क्षत्रं च उभे भवत ओदनः ।
मृत्युर्यस्योपसेचनं क इत्था वेद यत्र सः ॥ २५ ॥

॥ इति द्वितीयवल्ली ॥

[ப - ரை.] दुश्चरितात् - [ஶ்ருதி ஸ்ம்ருதிகளில் ப்ரதிஷித்தங்களாயிருக்கும்] பாப கர்மங்களிலிருந்து, अविरतः - ஒழியாதவனும், अशान्तः - [காம க்ரோதாதிகளிலிருந்து] ஶாந்தி அடையாதவனும், असमाहितः - [லௌகிக வ்யாபாரங்களினால்] சலித்துக் கொண்டிருக்கும் சித்தத்தை உடையவனும், अशान्तमानसः-ஶாந்தி அடையாமல் இருக்கும் மநஸ்ஸை உடையவனுய் மிருப்பவன், एनम् - இந்தப் பரமாத்மாவை, प्रज्ञानेन - [கேவலம்] பரமாத்ம ஜ்ஞாநத்தால் மாத்ரம், नाप्नुयात् - அடைய மாட்டான்.

பரமாத்ம ஜ்ஞாநம் பக்தியுடன் கூடியிருக்கும் பக்ஷத்தில், துஶ்சரிதாதிகளில் ப்ரவ்ருத்தி ஸம்பவிக்கமாட்டாது. பக்தியற்ற கேவல ஜ்ஞாநம் மாத்ரம் இருந்தால் பாபங்களில் நோக்கம் உண்டாகலா மாகையால், அந்த ஜ்ஞாநம் பரமாத்ம ப்ராப்திக்கு ஸாதநமாகமாட்டாது என்பது இவ்விடத்தில் சொல்லப்படுகின்றது.

"अपि चेत्सुदुराचारो भजते मामनन्यभाक् ।
साधुरेव स मन्तव्यः ॥"

[எவ்வளவு துராசாரங்கள் இருந்தபோதிலும், ஒருவனுக்குப் பக்தி மாத்ரம் என்னிடம் பூர்ணமாக இருக்கும் பக்ஷத்தில், அவனைப் பூஜார்ஹனென்றே கொண்டாட வேண்டும்] என்று ஸ்ரீ கீதாசார்யன் அநுக்ரஹித்திருப்பதும்,

"क्षिप्रं भवति धर्मात्मा ॥"

[அந்த உயர்ந்த பக்தி வந்த உத்தர க்ஷணத்திலேயே அவன் தர்மாத்மாவாக ஆய்விடுவன்] என்பதை உத்தேஶித்தே சொல்லப்பட்டது.

---

25. முதலில் (18—19) இரண்டு மந்த்ரங்களால் ப்ரத்யகாத்ம ஸ்வரூபத்தை விளக்கி, பிறகு அந்த ப்ரத்யகாத்மாவுக்கும் ஆத்மாவாக இருக்கும் பரமாத்ம ஸ்வரூபத்தை 'अणोरणीयान्' இத்யாதியான மந்த்ரத்தால் ஒருவாறு விளக்கி, அதற்குப் பிறகு அது அத்யந்தம் அலௌகிகமானதால் அது நம்முடைய ப்ரயத்நத்தால் அடையப்படக் கூடாதது என்பதைச் சொல்லி, பிறகு அப்படி அது பகவதநுக்ரஹத்தாலேயே அடையத்தகுந்த தாகையால் அதற்கு அந்தப் பகவதுபாஸநமே உபாயமென்பதையும், அந்த உபாஸநத்திற்கு அங்கமாகச் சில தர்மங்கள் அநுஷ்டிக்கப்படவேண்டு மென்பதையும் இந்த உபநிஷத் உபதேஶித்தது. இனி இந்தக் கடைசி மந்த்ரத்தால், 'அந்தப் பரமாத்மாவின்

ப்ரகாரம் இப்படிப்பட்டது என்பதை ஒருவரும் பூர்ணமாக அறியார்' என்று சொல்லி இரண்டாவது வல்லியை முடிக்கின்றது.

இந்த மந்த்ரத்திற்கு ஆபாததஃ தோன்றும் பொருளாவது :— 'எவனுக்கு ப்ராஹ்மண க்ஷத்ரிய ஜாதி இரண்டும் ஆஹாரமோ, எவனுக்கு ம்ருத்யுவானவன் உபஸேசநமோ (அந்நத்துடன் சேர்க்கப்பெற்று உட்கொள்ளப்படும் வஸ்துவோ), அவனுடைய ப்ரகாரம் எப்படிப்பட்டது என்பதை யார் அறிவார்?' என்பதுதான். இவ்விடத்தில் 'அந்நமென்று எது வ்யவஹரிக்கப்படுகின்றது? ப்ராஹ்மண க்ஷத்ரிய ஜாதிகள் அந்நமாக வ்யவஹரிக்கப்படுவானேன்? உபஸேசநமென்றால் என்ன? ம்ருத்யு எவ்விதம் உபஸேசந மாவன்?' என்னும் கேள்விகள் உதிக்கின்றபடியால், அந்தக் கேள்விகளுக்குச் சரியான ஸமாதாநம் கிடைக்குமாறு ஆசார்யர்கள் இந்த மந்த்ரத்தை வ்யாக்யாநித்திருக்கிறார்கள்.

[ப-ரை.] **यस्य**-எவனுக்கு, **ब्रह्म च क्षत्रं च उभे**-ப்ராஹ்மண க்ஷத்ரிய ஜாதிகளாகிற இந்த இரண்டு ஜாதிகளும் [அதாவது: ப்ராஹ்மண க்ஷத்ரியர்கள் முதலான ஸகல சராசரங்கள் அடங்கிய ஜகத் முழுவதும்], **ओदनः** - உட்கொள்ளக்கூடிய வஸ்துவாக [ஸம்ஹரிக்கப்படத் தக்கதாக], **भवतः** - இருக்கின்றனவோ ; **यस्य** - எவனுக்கு, **मृत्युः** - [ஸகல ஜகத்தின் ஸம்ஹாரத்துக்கும் உதவியா யிருக்கும்] ம்ருத்யுவானவன், **उपसेचनम्** - [அந்நத்திற்கு ருசியைக் கொடுத்துக்கொண்டு ஸ்வயமும் புஜிக்கப்படத் தக்கதான] உபஸேசந மாகின்றானோ, **सः** - அவன், **यत्र** - எந்த ப்ரகாரத்தில் இருக்கிறான் [அதாவது: எந்த ப்ரகாரங்களுடன் கூடினவனாக இருக்கிறான்], என்பதை, **इत्था** - இப்படிப்பட்டதென்று, **को वेद** - எவன் அறிவான்?

**ब्रह्म च क्षत्रं च** - இந்த இரண்டு பதங்களும் ப்ராஹ்மண க்ஷத்ரிய ஜாதிகளைக் குறிக்கும். இதற்கு, 'அந்த இரண்டு வர்ணங்களைச் சேர்ந்தவர்கள் முதலான ஸகல சராசரங்கள் அடங்கிய ஜகத்' என்று பொருள் கொள்வது எப்படியென்றால்: 'ப்ரஹ்மமும் க்ஷத்ரமும் ஓதநம் [ஆஹாரம்] என்று சொல்லப்பட்டிருக்கின்றது. அந்த இரண்டு ஜாதிகளும் ஒருவனுக்கும் ஸாக்ஷாத் ஆஹாரமாக மாட்டா. ஆகையால், ஓதநம் என்னும் ஶப்தத்திற்கு வேறு பொருள் கொள்ளவேண்டும். அதற்குப் போக்யம் என்றும் நஶிக்கப்படத் தகுந்தது என்றும் இரண்டு பொருள்கள் கொள்ளக் கூடும். அவைகளுள் எதைப் பொருளாகக் கொண்டாலும், அந்த இரண்டு ஜாதிகள் மாத்ரம் ஒருவனுக்கும் போக்ய வஸ்துவாகவாவது நஶிக்கப்படத் தகுந்த வஸ்துவாகவாவது இல்லையாகையால், அந்த ஜாதிகளைக் குறிக்கும் ஶப்தங்களை அந்த ஜாதி முதலான ஸகல ஜகத்தையும் குறிப்பனவாக எடுத்துக் கொள்வதே ஸங்கதமாகும். அப்படியானால் போக்யமென்னும் அர்த்

தத்தை த்யஜித்துவிட்டு விநாஶ்யம் என்னும் அர்த்தத்தைக் கொள்வதேன்? என்றால், பின்வரும் 'ம்ருத்யு உபஸேசநமாகிறான்' என்று சொல்வது போக்ய மென்னும் அர்த்தத்தில் அஸங்கதமாயும் 'விநாஶ்யம்' என்னும் அர்த்தத்தில் ஸங்கதமாயும் இருக்கின்றதாகையால் இதுவே இவ்விடத்தில் விவக்ஷிதமென்று சொல்வதே உசிதமாகும்' என்பதுதான். நிற்க: ப்ரகரணமும் 'ஸம்ஹர்த்ருத்வம்' என்னும் பொருளே ஸங்கதம் என்பதைக் குறிக்கின்றது. **"सोऽध्वनः पारमाप्नोति तद्विष्णोः परमं पदम्"** என்னும் பின்வரும் வாக்யம் விஷ்ணு கர்த்ருகமான கார்யமே விவக்ஷிதம் என்பதை விளக்குகின்றது. அப்படி விஷ்ணு கர்த்ருகமான கார்யமும் சராசரங்கள் அடங்கிய ஜகத்தின் ஸம்ஹாரமே தவிர்த்து, கேவலம் ப்ரஹ்ம க்ஷத்ர வர்ண த்வய பக்ஷணமில்லை.

**उपसेचनम्** - **'स्वयमद्यमानत्वे सति अन्यस्य अदनहेतुः यत्तदुपसेचनम्'** என்று இந்தப் பதத்தின் அர்த்தத்தைப் பெரியோர்கள் விவரித்திருக்கிறார்கள். நாம் புஜிக்கும் அந்நத்திற்குத் தயிர் முதலியவை உபஸேசநமாகும். ம்ருத்யு தன்னைத் தவிர்த்த மற்றை எல்லாவற்றுக்கும் நாஶ ஹேதுவாக இருந்துகொண்டு தானும் முடிவில் நஶிக்கப்படுகிறானாகையால், ம்ருத்யுவை உபஸேசநமாகப் பேசுவது உபபந்நமே. இப்படி ம்ருத்யுவும் உட்கொள்ளப்படத் தகுந்தவனென்றும் உபஸேசநமாகிறானென்றும் சொல்லப்பட்டிருக்கிறபடியால், அந்த ஸாமர்த்யத்தாலே ப்ரஹ்ம க்ஷத்ர ஶப்தங்கள் ஸகல ஜகத்தையுமே குறிக்கின்றன என்று வ்யாக்யாநம் செய்வதே ஸங்கதம்.

இரண்டாவது வல்லீ முற்றிற்று.



# ॥ अथ तृतीयवल्ली ॥

हरिः ओम्।

ऋतं पिबन्तौ सुकृतस्य लोके गुहां प्रविष्टौ परमे परार्ध्ये ।
छायातपौ ब्रह्मविदो वदन्ति पञ्चाग्नयो ये च त्रिणाचिकेताः ॥ १ ॥

## மூன்றாவது வல்லீ

இரண்டாவது வல்லீ, முடிவில், பரமாத்மா அத்யந்தம் அலௌகிகனாகிறபடியால், அவன் துர்ஜ்ஞேயன் என்று சொல்லி, "**क इत्था वेद यत्र सः**" [அவன் மஹிமையை ஒருவனும் அறியான்] என்று அவனுடைய துர்ஜ்ஞேயத்வத்தை வற்புறுத்தி முடித்தது. 'அப்படி அவன் துர்ஜ்ஞேயனானால் அவனை நாம் உபாஸிப்பது எப்படி?' என்று ஶங்கை பிறக்க, உபாஸகனாக இருக்கும் ஜீவன் உபாஸ்யனாக இருக்கும் பரமாத்மா இருவரும் ஒரே குஹையில் [ஹ்ருதய குஹையில்] அநுப்ரவேஶித்திருப்பதால் பரமாத்மாவை உபாஸகன் ஸுகமாக உபாஸிக்க ஶக்தனே யென்று முதலில் இரண்டு மந்த்ரங்களால் விவரித்து, பிறகு மூன்றாவது மந்த்ரம் முதலாக ஒன்பதாவது மந்த்ரம் பர்யந்தம் ஸம்ஸார மாகும் மார்க்கத்திற்குப் பாரமாயிருக்கும் பரமாத்ம ஸ்வரூபத்தை அடைவதற்கு என்ன பரிகரம் வேண்டுமோ அந்தப் பரிகரத்தை உபதேசித்து, பிறகு ப்ராப்தாவாக இருக்கும் ஜீவாத்மாவின் ஸ்வரூபத்தை விஶதமாக விளக்குகின்றது. இதற்கு நடுவில், ஶரீரம் முதலியவைகளை வஶீகரித்தல் வேண்டுமென்றும் அப்படி வஶீகரிக்கப்படவேண்டிய விஷயத்தில் எவை எவை ப்ரதானங்களென்றும் வஶீகரண ப்ரகாரம் எதுவென்றும் விளக்கிக் கடைசியில் அதிகாரி புருஷர்களை அபிமுகீகரித்துப் பேசி உபதேஶத்தை உபஸம்ஹரிக்கிறது.

1. [ப-ரை.] [ஜீவாத்மாவும் பரமாத்மாவும்] **ऋतम्** - கர்மபலத்தை, **पिबन्तौ** - அநுபவித்துக்கொண்டு, **सुकृतस्य** - ஸுக்ருதத்தால் ஸாதிக்கப்படும், **लोके** - [இந்த] லோகத்திலேயே, [**वर्तमानौ** - இருந்துகொண்டு], **गुहाम्** - குஹையில் [ஹ்ருதயமாகிற குஹையில்], **प्रविष्टौ** - ப்ரவேஶித்திருக்கிறார்கள். [அவ்விடத்திலும்] **परार्ध्ये** - மிகவும் உத்க்ருஷ்டமான, **परमे** - பரமமாகிற ஹார்த்தாகாஶத்தில் [இருக்கிறார்கள்].. **छायातपौ** - நிழலும் வெயிலும்போல [ஒருவர் அஜ்ஞராகவும் மற்றொருவர் ஸர்வஜ்ஞராகவும்] இருக்கிறார்கள். [இப்படி] **पञ्चाग्नयः** - பஞ்சாக்நி வித்யாநுஷ்டாநத்தால் பரிஶுத்தமான அந்தஃகரணத்தை உடையவர்களாகவும், **ये च त्रिणाचिकेताः** - [கீழே விவரித்திருக்கிற ப்ரகாரம்] மூன்று ஆவ்ருத்தி நாசிகேத சயநம் செய்து அதனால் பரிஶுத்த மநஸ்கர்

வும் இருக்கும், **ब्रह्मविदः** - ப்ரஹ்மவித்துக்கள், **वदन्ति** - சொல்லு கிறுர்கள்.

**ऋतं पिबन्तौ** - கர்ம பலத்தை அநுபவிக்கிறவன் ஜீவாத்மாவே; பரமாத்மாவுக்கு அவ்வநுபவம் அஸங்கதம். ஆனுலும், இருவரையும் கர்ம பலத்தை அநுபவிப்பவர்களாகப் பேசக்கூடும். எவர்களுடன் ஸம்பந்தம் நமக்கு ஏற்படுகிறதோ அவர்களுடைய வ்யவஹாரங்கள் நமக்கும் இருப்பன போலப் பேசுவது உலக வழக்கம். கையில் குடையைப் பிடித்துக்கொண்டு அநேக ஜநங்கள் போகையில், அந்தக் கூட்டத்திற் சிலர்க்குக் குடை இல்லாமற் போனுலும், எல்லாரையும் சேர்த்து [**'छत्रिणो गच्छन्ति'**] குடை பிடித்துக்கொண்டு ஒரு கூட்டம் போகின்றது என்று லோகத்திற் சொல்வார்கள் அன்றே? [**पातृसंबन्धात्पिबन्तावित्युच्यते छत्रिन्यायेन**] சத்ரி ந்யாயப்படி கர்மபலத்தை அநுபவிக்குமவனுடன் அதை அநுபவியாமல் இருப்பவனும் சேர்த்துப்படிக்கப்பட்டிருக்கிறபடியால், இருவரும் கர்மபலத்தை அநுபவிக்கிறவர்கள் என்று பேசப்படுகிறுர்கள். சத்ரி ந்யாயமென்று இது சொல்லப்படும்.

'ருதம்' என்னும் பதத்திற்குக் 'கர்ம பலம்' என்று பொருள் கூறப்பட்டிருக்கிறது. 'ருதம்' என்பது ஸத்யத்தைக் குறிக்கும். கர்ம பலம் ஸத்யமாக அவஶ்யம் உண்டாகவேண்டுமாதலால் அதை 'ருதம்' என்று சொல்லக்கூடும். இவ்விடத்தில் அந்தப் பதம் புண்ய கர்மத்தை மாத்ரம் குறிக்கின்றது. ஏனென்றுல், 'ஸுக்ருத ஸாத்யமான லோகத்தில்' என்று பிந்தி சொல்லப்பட்டிருக்கிறபடியால். புண்ய கர்மங்களும் பலாபிஸந்தியுடன் செய்யப்படும் பக்ஷத்தில் பாப கர்மங்கள்போலப் பந்தகங்களே.

**परार्ध्ये** - 'பரார்த்தம்' என்பதற்கு 'எண்ணின் முடிவு' 'கடைசி எண்' என்பது பொருள். **परार्धमर्हतीति परार्ध्यम्** - அதாவது: எல்லாவற்றுக்கும் மேல் இருப்பது, உத்க்ருஷ்டமானது என்பது அர்த்தம்.

**छायातपौ** - நிழல் அஜ்ஞாநத்தையும் ப்ரகாஶம் ஜ்ஞாநத்தையும் குறிக்கும். பரமாத்மா ஸர்வஜ்ஞனுக இருக்கிறபடியால் அவன் ப்ரகாஶமாவான்; ஜீவாத்மா ஸங்குசித ஜ்ஞாநனுக இருக்கிறபடியால் அவன் சாயையாவான். இவ்விடத்தில் ஜீவனை அஜ்ஞனென்று சொல்வதற்கு மற்றுமொரு அபிப்ராயமுண்டு. அதாவது—பரமாத்மாவுடன் ஒரே குஹையில் இருக்கையிலும் 'அவனுடன்கூட இருக்கிறேம்; அவனை அநுபவிக்கிறேம்' என்னும் ஜ்ஞாநம் அவனுக்கு அப்பொழுது இல்லையாகையால், அந்தக் காரணத்தைக்கொண்டும் அவனை அஜ்ஞனென்று சொல்லலாமன்றே?

இப்படி ஜீவாத்ம பரமாத்ம பரமாக இந்த மந்த்ரத்திற்குப் பொருள் கூறுவதைச் சிலர் ஆக்ஷேபிப்பார்கள். அந்த ஆக்ஷேபமாவது—'இந்த மந்த்ரம் ஜீவனையும் அவனுடைய புத்தியையும் பற்றிப்

பேசுகிறதென்றே சொல்லவேண்டும். ஏனென்றால்: (1) பரமாத்மைக் கர்மபல போக்தாவாகப் பேசுவது அஸங்கதம்; (2) எங்கும் இருக்கும் பரமாத்மாவை ஹ்ருதய குஹையில் இருப்பதாகப் பேசுவதும் ஸுக்ருத ஸாத்யலோகத்தில் இருப்பதாகப்பேசுவதும் அஸங்கதம். புத்தியையும் ஜீவனையும் பற்றி இது பேசுகின்றது என்று சொல்லும் பக்ஷத்தில், இந்த ஆக்ஷேப மொன்றும் உதியாது. புத்தியைக் கர்மபல போக்தா வென்று பேசுவது ஔபசாரிகம்.

இந்த ஆக்ஷேபங்களுக்குக் கீழே ஸமாதானம் சொல்லப் பட்டிருக்கின்றது. (1) கர்ம பலத்தை அநுபவிக்கிறார்களென்றும், குஹையில் சேர்ந்திருக்கிறார்களென்றும், ஒருவர் நிழல் போலவும் மற்றொருவர் ப்ரகாசம் போலவும் இருக்கிறார்களென்றும், இம்மாதிரி ஒன்றுசேர்த்து இரண்டு வஸ்துக்கள் பேசப்படும் இடத்தில், இரண்டையும் ஒரு வகுப்பைச் சேர்ந்ததாகப் பரிக்ரஹிப்பது உசிதமாகுமே தவிர்த்து, ஒன்றை ஒரு வகுப்பைச் சேர்ந்ததாகவும் மற்றொன்றை மற்றொரு வகுப்பைச் சேர்ந்ததாகவும் பரிக்ரஹிப்பது உசிதமாக மாட்டாதன்றோ? ப்ரக்ருதத்தில் ஒன்று சைதந்யத்தை உடைய ஆத்மவஸ்து வென்பது இருகக்ஷிக் காரர்களாலும் ஒத்துக்கொள்ளப்பட்டிருக்கின்றதாகையால், மற்றொன்றையும் சேதந வஸ்துவாக எடுத்துக்கொள்வதே உசிதமாகும். **“उभौ गृहं प्रविष्टौ”** [இரண்டு பெயர்கள் வீட்டுக்குள் புகுந்தார்கள்] என்று நிர்த்தேசித்தால், அந்த நிர்த்தேசம் ‘ஒரு மனிதனும் அவன் கையில் இருக்கும் தண்டமும் உள்புகுந்தன’ என்பதை ஸூசிப்பிக்குமோ? இரண்டு புருஷர்கள் புகுந்தார்கள் என்பதையன்றோ சொல்லும்? (2) பரமாத்மாவைக் கர்ம பல போக்தாவாகப் பேசுவது கீழே விவரித்திருக்கிறபடி சத்ரி ந்யாயத்தால் உபபந்நமாவதுடன், மற்றுமொரு ப்ரகாரமாகவும் உபபந்நமாகும். லோகத்தில் ஒரு கார்யத்தின் ஸாக்ஷாத் கர்த்தாவையும், அதற்கு ஸாக்ஷாத் கர்த்தாவாக இராமல் அதைச் செய்விக்கிறவனாக மாத்ரம் இருப்பவனையும், ஆக இருவரையும் அந்தக் கார்யத்தின் கர்த்தாக்களாகவே பேசுகிறார்களன்றோ? ஸாக்ஷாத்தாகத் தேரிழுப்பவனையும் அதை ஸாக்ஷாத்தாக இழுக்காமல் ஸமீபத்தில் நின்று மற்றவர்களை இழுக்கும்படிச் செய்கிறவனையும் இரண்டு பெயரையும் தேரிழுப்பவர்களென்றே பேசுகிறோம். அம்மாதிரி ஸாக்ஷாத் கர்ம பல போக்தாவாக இருக்கும் ஜீவனையும், அந்த ஜீவனை அப்படிக் கர்ம பலத்தை அநுபவிப்பிக்கும் பரமாத்மாவையும், இருவரையும் கர்மபல போக்தாக்கள் என்று வ்யவஹரிக்கலாமன்றோ? ஜீவன் ப்ரயோஜ்ய கர்த்தா, பரமாத்மா ப்ரயோஜக கர்த்தா என்பதே இவர்களுள் வாசி. புத்தி என்னும் வஸ்துவினிடத்தில் இம்மாதிரி கர்த்ருத்வ மொன்றும் ஸம்பவிக்கமாட்டாதாகையால், புத்தியைப்பற்றி இந்த மந்த்ரம் பேசுகின்றது என்று சொல்வது ஸர்வதா அஸங்கதமே.

---

यस्सेतुरीजानानामक्षरं ब्रह्म यत्परम् ।
अभयं तितीर्षतां पारं नाचिकेत॰ शकेमहि ॥ २ ॥

आत्मान॰ रथिनं विद्धि शरीर॰ रथमेव तु ।
बुद्धिन्तु सारथिं विद्धि मनः प्रग्रहमेव च ॥ ३ ॥

इन्द्रियाणि हयान्याहुर्विषया॰स्तेषु गोचरान् ।
आत्मेन्द्रियमनोयुक्तं भोक्तेत्याहुर्मनोषिणः ॥ ४ ॥

---

2. இவ்வாறு நமது ஹ்ருதய குஹையில் நம்முடைய உபாஸநத்தின் ஸௌகர்யார்த்தமாகவே அந்தப் பரமாத்மா ஜீவாத்மாவுடன் கூட ப்ரவேஸித்து நிற்கிறபடியால், அவனை நாம் உபாஸிக்க ஸக்தர்களே என்று சொல்லுகிறது இந்த மந்த்ரம்.

[ப - ரை] **यः** - எவன், **ईजानानां सेतुः** - யாகம் செய்பவரெல்லாருக்கும் ஆதாரமாக [அதாவது: கர்ம பல ப்ரதனாக] இருக்கிறானோ, **यत्** - யாதொன்று, **अक्षरं परं ब्रह्म** - நிர்விகாரமான பரப்ரஹ்மமோ, [**यत्** - எது], **तितीर्षताम्** - [ஸம்ஸாரமாகிற ஸமுத்ரத்தைத்] தாண்டவிரும்புமவர்களெல்லாருக்கும், **अभयं पारम्** - நிர்ப்பயமான [அதாவது: த்ருடமான] கரையோ, [**तम्**] **नाचिकेतम्** - அப்படிப்பட்ட நாசிகேதனை [அதாவது: நாசிகேதமான அக்நி சயநத்திற்கு ப்ராப்யமாயிருக்கும் பரமாத்மாவை], [**उपासितुं**] **शकेमहि** - [உபாஸிப்பதற்கு] ஸக்தர்களாகவே இருக்கிறோம். ஆகையால்,'அவன் எவ்விடத்தான்? அவனை நாம் எவ்விதம் உபாஸிக்கக்கூடும்?' என்று பயப்பட வேண்டாம் என்பது கருத்து.

---

3 - 4. இனி அந்த உபாஸநத்திற்கு எது பரிகரமோ அதை உபதேசிக்க ஆரம்பிக்கிறார். அந்த உபதேஸத்தின் ரீதி பின்வருமாறு இருக்கின்றது. உபாஸநம் செய்வதை ஒரு யாத்ரை போலப் பேசி, யாத்ரைக்கு ரதம், ரதத்தை ஓட்டுகிறவன், குதிரை முதலியவை பரிகரங்களாக இருப்பன போல, உபாஸநத்திற்கு உபாஸகனுடைய ஸரீரம், புத்தி, மநஸ், இந்த்ரியங்கள், அந்த இந்த்ரியங்களுக்கு விஷயங்களாக இருக்கும் ரூப ரஸாதிகள், இவையெல்லாம் பரிகரங்களாகின்றனவென்று சொல்லி, எப்படி யாத்ரா பரிகரங்களான குதிரை முதலியவைகளை அடக்கி ஸ்வாதீநமாக வைத்துக்கொண்டால் யாத்ரை நிர்விக்நமாக நிறைவேறுமோ அப்படியே உபாஸந பரிகரங்களான இந்த்ரியம் முதலியவை எவனுக்கு வஸீக்ருதங்களாக இருக்கின்றனவோ அவனுக்கு உபாஸநம் கைகூடுமென்று த்ருஷ்டாந்த புரஸ்ஸரமாக இந்த உபதேஸம் செய்யப்படுகின்றது. எவை எவை, எவை எவைகளுக்கு த்ருஷ்டாந்தங்களாகின்றனவென்பது இந்த மந்த்ரத்தில் விளக்கப்படுகின்றது.

यस्त्वविज्ञानवान् भवत्ययुक्तेन मनसा सदा ।
तस्येन्द्रियाण्यवश्यानि दुष्टाश्वा इव सारथेः ॥ ५ ॥

यस्तु विज्ञानवान् भवति युक्तेन मनसा सदा ।
तस्येन्द्रियाणि वश्यानि सदश्वा इव सारथेः ॥ ६ ॥

---

[ப - ரை] **आत्मानम्** - [ஶரீரத்திற்கு அதிஷ்டாதாவாகவும் உபாஸநத்தில் ப்ரவ்ருத்தனாகவும் இருக்கும்] ஆத்மாவை, **रथिनम्** - ரதத்திற்குச் சொந்தக்காரனாக [அதாவது : யாத்ரை செய்கிறவனாக], **विद्धि** - அறிந்துகொள். **शरीरम्** - [அந்த உபாஸகனுடைய] சரீரத்தை, **रथमेव च** ரதமென்று [அறி]. **बुद्धिन्तु** - புத்தி என்று வ்யவஹரிக்கப்படும் அத்யவஸாயத்தை, **सारथिं विद्धि** - தேர் ஓட்டும் ஸாரதி என்று [அறி.] **मनः** - மநஸ்ஸை, **प्रग्रहमेव च** - கடிவாளமென்று [அறி]. **इन्द्रियाणि** - இந்த்ரியங்களை, **हयान्** - குதிரைகளென்று, **आहुः** - [வித்வான்கள்] சொல்லுகிறார்கள். **विषयान्** - [இந்த்ரியங்களுக்கு] விஷயங்களாக இருக்குமவைகளை, **तेषु** - [குதிரையாக வர்ணிக்கப்பட்ட] இந்த்ரியங்களுக்கு, **गोचरान्** மார்க்கமாகச் [சொல்லுகிறார்கள்]. **आत्मेन्द्रि यमनोयुक्तम्** - தேஹம் இந்த்ரியம் மநஸ் [புத்தி முதலியவை] இவைகளுடன் கூடிய, [**आत्मानम्** - ஆத்மாவை], **भोक्तेति** - [கர்த்ருத்வம்] போக்த்ருத்வம் இவைகளை உடைத்தானவனாக, **मनीषिणः** - வித்வான்கள், **आहुः** - சொல்லுகிறார்கள்.

**आत्मेन्द्रियमनोयुक्तम्** - இவ்விடத்தில் ‘ஆத்மா’ என்னும் பதத்திற்குத் ‘தேஹம்’ என்பது பொருள். ரதம், ஸாரதி, குதிரை முதலிய பரிகரங்கள் இராமல் கேவல ரதீ மாத்ரம் இருக்கும் பக்ஷத்தில் எப்படி அது கார்யகாரி ஆகமாட்டாதோ, அப்படியே தேஹம் இந்த்ரியம் மநஸ் முதலியவை யற்ற கேவல ஆத்மாவுக்குக் கர்த்ருத்வ போக்த்ருத்வம் முதலியவை ஸம்பவிக்கமாட்டா என்று இவ்விடத்தில் சொல்லப்படுகின்றது.

---

5 - 6. மநோபுத்திகள் ஸ்வாதீநமாகாமலிருப்பதால் ஜநிக்கும் தீமையும், அவை ஸ்வாதீநமாக இருப்பதால் நேரும் நன்மையும், இவற்றில் விளக்கப்படுகின்றன.

[ப - ரை] **यः** - எவன், **अविज्ञानवान् भवति** - நல்ல புத்தியை உடைத்தாயிருக்கவில்லையோ, **अयुक्तेन** - வஶ்யமாயிராத, **मनसा** - மநஸ்ஸோடன், **सदा** - எப்பொழுதும் [இருக்கிறானோ], **तस्य** - அவனுக்கு, **इन्द्रियाणि** - இந்த்ரியங்கள், **सारथेः दुष्टाश्वा इव** - ஸாரதிக்கு அடங்காத குதிரைகள் போல, **अवश्यानि** - ஸ்வாதீநங்களாக மாட்டா. **यस्तु** - எவனோ வென்றால், **सदा युक्तेन मनसा** - எப்பொழுதும் அடங்கி இருக்கும் மநஸ்ஸோடன் **विज्ञानवान् भवति** - நல்ல புத்தியுடன் கூடி இருக்கிறானோ, **तस्य** - அவனுக்கு

यस्त्वविज्ञानवान् भवत्यमनस्कस्सदाऽशुचिः ।
न स तत्पदमाप्नोति सꣳसारञ्चाधिगच्छति ॥ ७ ॥

यस्तु विज्ञानवान् भवति समनस्कस्सदा शुचिः ।
स तु तत्पदमाप्नोति यस्माद्भूयो न जायते ॥ ८ ॥

विज्ञानसारथिर्यस्तु मनःप्रग्रहवान्नरः ।
सोऽध्वनः पारमाप्नोति तद्विष्णोः परमं पदम् ॥ ९ ॥

---

**सारथेः सदश्वा इव** - ஸாரதிக்கு நல்ல குதிரைகள் போல, **इन्द्रियाणि वश्यानि [भवन्ति]** - இந்த்ரியங்கள் ஸ்வாதீநங்களாக இருக்கின்றன.

---

7 - 8. இந்த்ரியங்கள் ஸ்வாதீநமாகாமல் இருப்பதால் நேரும் கேடும், அவை ஸ்வாதீநமாக இருப்பதால் நேரும் நன்மையும் இவற்றில் விளக்கப்படுகின்றன.

[ப - ரை] **यः** - எவன், **सदा** - எப்பொழுதும், **अमनस्कः** - அடங்காத மநஸ்ஸுடன் கூடினவனுகவும், **अशुचिः** - [அந்தக் காரணத்தால்] அசுத்தனுகவும் இருந்துகொண்டு, **अविज्ञानवान्** - விஜ்ஞாந மற்றவனுக இருக்கிறுனே [அஸ்வாதீநங்களான இந்த்ரியங்களை உடைத்தாயிருக்கிறுனே], **सः** - அவன், **तत् पदम्** - அந்த ஸ்தாநத்தை [அதாவது : தான் அடையவேண்டும் ஸ்தாநத்தை], **नाप्नोति** - அடைகிறுனில்லை. [தவிர] **संसारञ्च** - ஸம்ஸாரத்தையும், **अधिगच्छति** - அடைகிறுன். **यस्तु** - எவனே வென்றுல், **सदा समनस्कः शुचिः [सन्] विज्ञानवान् भवति** - எப்பொழுதும் அடங்கின மநஸ்ஸுடனும் அந்தக் காரணத்தால் (சுத்தனுகவும்) இருந்துகொண்டு விஜ்ஞாநத்தை [ஸ்வாதீநங்களான இந்த்ரியங்களை] உடைத்தாயிருக்கிறுனே, **स तु** - அவன், **यस्माद् भूयो न जायते** - எதிலிருந்து மறுபடியும் [ஸம்ஸாரத்திற்குத் திரும்பி வரமாட்டானே] **तत्पदम्** - அப்படிப்பட்ட ஸ்தாநத்தை, **आप्नोति** - அடைகிறுன்.

---

9. ‘மநோபுத்திகளை அடக்கி இந்த்ரியங்களை எவன் ஸ்வாதீநமாக வைத்துக்கொள்ளுகிறுனே, அவன் புநராவ்ருத்தி ரஹிதமான உத்தம ஸ்தாநத்தை அடைகிறுன்; அப்படிக்கில்லாதவன் ஸம்ஸார காந்தாரத்தில் உழலுகிறுன்’ என்பது சொல்லப்பட்டது. இனி: அந்த உத்தமமான பதம் எது என்பதைக் காண்பிக்கின்றது இந்த மந்த்ரம்.

[ப - ரை] **यस्तु नरः** - எந்த மநுஷ்யன், **विज्ञानसारथिः**- விஜ்ஞாநமாகிற ஸாரதியை உடையவனுயும், **मनःप्रग्रहवान्** - மநஸ்ஸாகிற கடிவாளத்தை உடையவனுகவும் இருக்கிறுனே [அதாவது: ஶுத்தமான மநஸ்ஸையும் அடங்கின இந்த்ரியங்களையும் உடைத்தாயிருக்கிறுனே], **सः** - அவன், **अध्वनः** - [ஸம்ஸாரமாகிற] வழியினுடைய, **पारम्** - எல்லையை,

इन्द्रियेभ्यः परा ह्यर्था अर्थेभ्यश्च परं मनः ।
मनसश्च परा बुद्धिर्बुद्धेरात्मा महान् परः ॥ १० ॥

महतः परमव्यक्तमव्यक्तात्पुरुषः परः ।
पुरुषान्न परं किञ्चित्सा काष्ठा सा परा गतिः ॥ ११ ॥

---

**आप्नोति** - அடைகிறான். [அது எதுவென்றால்] **तत्** - அது, **विष्णोः** - பரமாத்மாவின், **परमं पदम्** - உத்தமமான ஸ்வரூபமே.

---

10 - 11. தூர்ப்போதமாயிருக்கும் பரமாத்மாவை ஜீவாத்மா உபாஸிப்பது எப்படி ஸாத்யமென்று பயந்த ஶிஷ்யனுக்கு, 'உபாஸ்யன் உபாஸகன் இருவரும் ஒரே குஹையில் ப்ரவேஶித்திருக்கிறபடியால் உபாஸ்யனை இருக்கும் பரமாத்மாவை ஸுலபமாக உபாஸிக்கக்கூடும்' என்பதை விளக்கி, அந்த உபாஸநம் ஸபலமாவதற்கு இந்த்ரியம் முதலியவைகளின் வஶீகரணம் அவஶ்யம் அபேக்ஷித மென்பதை ஒரு த்ருஷ்டாந்தத்தை முன்னிட்டு ஆசார்யன் உபதேஶித்தார். இப்பொழுது அந்த இந்த்ரியம் முதலியவைகளை வஶீகரணம் செய்வதில், எவை எவை ப்ரதாநங்கள் என்பதை இந்த இரண்டு மந்த்ரங்களால் விளக்குகிறார். இந்த ப்ராதாந்யத்தின் க்ரமமாவது:—

முதலில் இந்த்ரியங்களை அடக்கவேண்டும். அந்த இந்த்ரியங்களைக் காட்டிலும் வஶீகரிக்கப்படவேண்டியதில் ப்ரதாநமாயிருப்பவை 'அர்த்தங்கள்' என்று சொல்லப்படும் விஷயங்களே. ஏனென்றால்: விஷயங்கள் ஸந்நிஹிதங்களாய் இருந்தால், இந்த்ரியங்களை அடக்குவது ஶ்ரம ஸாத்யமன்றோ? அப்படி விஷயங்கள் இந்த்ரியங்களுக்கு தூர்நிக்ரஹத்வத்தைக் கொடுக்கக்கூடியவை யாதலால், அந்த விஷயங்களை அடக்குவது இந்த்ரியங்களை அடக்குவதைக் காட்டிலும் முக்யமாகின்றது. விஷயங்களை அடக்குவதாவது: அவைகளைத் தூர விலக்குவதும் அவை ஹேயங்கள் என்பதை உணர்வதுமே. இரண்டாவது: அந்த விஷயங்களைக் காட்டிலும் மநஸ் இன்னும் பலிஷ்டம். ஏனென்றால்: விஷயங்கள் தூர விலக்கப்பட்டிருந்தபோதிலும் மநஸ்ஸுக்கு அவதாநமிராவிட்டால் விஷயங்களைத் தூர விலக்குவதால் என்ன பயன்? ஆகையால் மநஸ்ஸை அடக்குவது முக்யம். மநஸ்ஸை அடக்குவதாவது: விஷயங்களிலுள்ள தோஷங்களை அடிக்கடி ஸம்ஶீலநம் செய்துகொண்டு அவைகளிலிருந்து மநஸ்ஸை நிவர்த்திக்கும் முயற்சியே. மூன்றாவது: மநஸ்ஸைக் காட்டிலும் புத்தி என்பது இன்னும் ப்ரதாநம். இவ்விடத்தில் 'புத்தி' என்னும் பதம் உறுதி என்று சொல்லப்படும் ஜ்ஞாந விஶேஷத்தைக் குறிக்கின்றது. 'விஷயங்களெல்லாம் அல்பங்கள் அஸ்திரங்கள் துஸ்ஸாதங்கள் துக்க மிஶ்ரங்கள்; ஆகையால் ஹேயங்கள்'

என்று யாதொரு உறுதியுண்டோ, அந்த உறுதியே இவ்விடத்தில் விவக்ஷிதம். அந்த உறுதி இராவிட்டால் மநஸ் சலிக்கக்கூடும்; ஒரு ஸமயத்தில் விஷய ப்ராவண்யம் இராமல் இருந்தபோதிலும் மற்றொரு ஸமயத்தில் அந்த ப்ராவண்யம் ஸம்பவித்துவிடு மன்றோ? ஆகையால் அந்த உறுதி ஸாதாரண மநஸ்ஸைக் காட்டிலும் பலீயஸ். அதை அடக்குவதாவது: விஷய தோஷங்களை அடிக்கடி ஸம்ஶீலநம் செய்வதால் விஶேஷித்த தார்ட்யத்தை ஸம்பாதித்துக் கொள்வதே. நான்காவது: அந்த உறுதியைக் காட்டிலும், அந்த உறுதிக்கு ஆஶ்ரயமாயிருக்கும் ஆத்மா இன்னும் ப்ரதாநம். ஏனென்றால்: அந்த உறுதியைப் பெறுவதும் ஆத்மாவின் இச்சையைப் பொருத்ததன்றோ? ‘இந்த்ரியங்களை ஜயிக்கவேண்டும்; உறுதியை ஸம்பாதித்துக்கொள்ளவேண்டும்’ என்னும் இச்சை ஒருவனுக்கு ஜநிக்காவிட்டால் உறுதி என்பது ஸாதிக்கப்பட மாட்டாதன்றோ? அந்த இச்சை சேதந கர்த்ருகமாதலால், இவ்விடத்தில் ‘ஆத்மாவானது புத்தியைக் காட்டிலும் பரம்’ என்று சொல்லப்படுகிறது. அந்த ஆத்மாவை அடக்குவதாவது: ஆத்ம ஸ்வரூபத்தின் யாதாத்ம்யத்தை அறியவேண்டும் என்னும் இச்சையை ஸம்பாதித்துக் கொள்வதே. ஐந்தாவது: அந்த ஆத்மாவைக் காட்டிலும் ஶரீரம் இன்னும் பலீயஸ். ஏனென்றால்: ஆத்மாவுக்கு ஏதேனும் இச்சை ஜநிப்பதெல்லாம், அந்த ஆத்மா அடைந்திருக்கும் ஶரீரத்தின் ஸத்வ ரஜஸ் தமோ குணங்களின் உந்மேஷத்தைச் சார்ந்ததன்றோ? ஶரீரத்தில் ரஜஸ் தமோ குணங்கள் தலையெடுத்து நின்றால், ஆத்ம ஸ்வரூப யாதாத்ம்யத்தின் அத்யவஸாயத்தில் ப்ராவண்யம் எப்படி ஜநிக்கும்? ஆகையால் ஶரீரம் ப்ரதாநமாகின்றது. அந்த ஶரீரத்தை வஶீகரிப்பதாவது: ஸத்வ ப்ராசுர்யத்திற்கு ஹேதுக்களான பரிஶுத்த ஆஹாராதிகளை ஸேவித்து அதனால் ஶரீரத்திற்கு ஸத்வோத்ரேகத்தை ஸம்பாதித்துக்கொள்வதே. ஆறாவது: அந்த ஶரீரத்தைக் காட்டிலும் ஸர்வாந்தர்யாமியாக இருக்கும் பரம புருஷன் இன்னும் ப்ரதாநம். ஏனென்றால்: கீழ்ச் சொல்லப்பட்டுள்ள ஸமஸ்த வஸ்துக்களின் ப்ரவ்ருத்திகளெல்லாம் அவனுடைய ஸங்கல்பாயத்தமன்றோ? ஆகையால் அவனை வஶீகரிப்பதே மிகவும் ப்ரதாநம். அவனை வஶீகரிப்பதாவது: அவனை ஶரணமாக அடைவதே. இந்த க்ரமமே இவ்விடத்திற் சொல்லப்படுகின்றது.

[ப - ரை] अर्थाः - விஷயங்கள், इन्द्रियेभ्यः - இந்த்ரியங்களைக் காட்டிலும், पराः - [வஶீகரிக்கப்படவேண்டிய வகையில்] ப்ரதாநங்கள்; अर्थेभ्यः - அந்த விஷயங்களைக் காட்டிலும், मनः - மநஸ்ஸானது, परम् - ப்ரதாநம்; मनसः - அந்த மநஸ்ஸைக் காட்டிலும், बुद्धिः - புத்தியானது, परा - ப்ரதாநம்; बुद्धेः - அந்தப் புத்தியைக் காட்டிலும், महान् आत्मा - [தனது இச்சையால் எல்லாவற்றையும் நடத்தக்கூடிய] மஹிமையையுடைய ஆத்மா, परः - ப்ரதாநன்; महतः - அப்படிப்பட்ட மஹிமையை

உடையவனைக் காட்டிலும் [அதாவது: அந்த ஆத்மாவைக் காட்டிலும்], **अव्यक्तम्** - ஶரீரமானது, **परम्** - ப்ரதாநம்; **अव्यक्तात्** - அந்த ஶரீரத்தைக் காட்டிலும், **पुरुषः** - பரமாத்மாவானவன், **परः** - ப்ரதாநன். **पुरुषात्** - அந்தப் பரமாத்மாவைக் காட்டிலும், **किञ्चिदपि** - மற்றொன்றும், **न परम्**- ப்ரதாநமன்று. **सा काष्ठा** - அவன்தான் எல்லை [அதாவது: உபாயங்களுக்கெல்லாம் எல்லை நிலம்]; **सा परा गतिः** - அவனே பரம ப்ராப்யன்.

இந்த மந்த்ரங்களுக்கு இவ்விதம் வ்யாக்யாநம் செய்வதின் விஷயமாக இரண்டொரு ஶங்கைகள் தோன்றலாம். முதலாவது: இவ்விடத்தில், 'இந்த்ரியங்களைக் காட்டிலும் அர்த்தங்கள் பரங்கள்' என்று 'பரம்' என்னும் பதமே ப்ரயோகம் செய்யப்பட்டிருக்கின்றது. 'பர' என்னும் ஶப்தத்திற்கு 'ப்ரக்ருஷ்ட [உயர்ந்தது]' என்று பொதுவாகப் பொருள் கொள்வதே பொருந்தியதாக இருக்கையில், 'வஶீகரிக்கப்படுவதில் உயர்ந்தது [அதாவது—ப்ரதாநம்]' என்று குறுக்கிப் பொருள் கொள்வானேன்? உயர்வென்பது வேறு ப்ரகாரங்களில் ஸம்பவிக்கமாட்டாதோ? இது ஒரு ஶங்கை. இதற்கு ஸமாதாநமாவது: இப்படிப் பொருள் கொள்வதே ப்ரகரணத்திற்கு ஸங்கதம். (1) 'ரதம்-ரதத்தை உடையவன்' முதலிய த்ருஷ்டாந்தத்தால் உபாஸந உபகரணத்வம் தோன்றுகிறது. (2) **'यस्त्वविज्ञानवान् भवति'** இத்யாதி வாக்யங்களால் இந்த்ரியாதிகளை வஶீகரிப்பதால் உண்டாகும் பயன் அவைகளை வஶீகரியாவிட்டால் உண்டாகும் அபாயம்-இவை இவ்விடத்தில் பேசப்படுகின்றன. (3) பிந்தி **'यच्छेद्वाङ्मनसी'** என்று இந்த்ரியங்களை வஶீகரிக்கும் ப்ரகாரம் ப்ரஸ்தாவிக்கப்படுகின்றது. இவை யெல்லாவற்றையும் பராமர்ஶித்தால், இந்த மந்த்ரத்தில் வஶீகரிக்கப்பட வேண்டியதிலுள்ள ப்ராதாந்யமே 'பர' ஶப்தத்தால் விவக்ஷிதம் என்பது விளங்கும்.

**'अव्यक्तम्'** என்னும் ஶப்தத்திற்கு 'ஶரீரம்' என்று எப்படிப் பொருள் கிடைக்கும்? என்பது மற்றொரு ஶங்கை. கீழே **'आत्मानं रथिनं विद्धि'** இத்யாதியான மந்த்ரத்தில் உபாஸகனுடைய ஆத்மா ஶரீரம் புத்தி மநஸ் இந்த்ரியங்கள் அவைகளின் விஷயங்கள் இவையெல்லாம், ப்ரயாணத்திற்குப் பரிகரங்களாயிருக்கும் ரதீ ரதம் ஸாரதி ப்ரக்ரஹம் அஶ்வம் அது போகும் மார்க்கம் இவையாக ரூபணம் செய்யப்பட்டிருக்கின்றன. அவைகளே வஶீகரிக்கும் ப்ரகாரத்தை விவரிக்கும் இம்மந்த்ரத்தில் நிர்த்தேஶிக்கப் படுகின்றன. ஆனால் ஶரீரத்தைத் தவிர்த்த இந்த்ரியம் முதலிய மற்றவையெல்லாம் ஸ்வஸ்வ ஶப்தங்களால் நிர்த்தேஶிக்கப்படுகையில், ரதமென்று ரூபிக்கப்பட்ட ஶரீரம் மாத்ரம் ஸ்வ ஶப்தத்தால் நிரூபிக்கப்படாமல், அதன் ஸ்தாநத்தில் 'அவ்யக்தம்' என்னும் ஶப்தத்தால் நிரூபிக்கப்பட்டிருக்கிறபடியால், அந்த ஶப்தத்தால் ஶரீரமே விவக்ஷிதமென்று நிஶ்சயிக்கலாம். நிற்க: 'அவ்யக்தம்' என்பது ஸூக்ஷ்மாவஸ்தையில் இருக்கும் 'ப்ரதாநம்' என்னும் தத்வத்தைக் குறிக்கும். ஶரீரம் என்பது அந்த ஸூக்ஷ்மாவஸ்தையி லிருக்கும்

ப்ரதாநத்தின் கார்ய மாகையால், ஶரீரமும் அவ்யக்தமென்று வ்யவஹரிக்கப்படக்கூடும். கார்யங்களாயிருக்கும் பொருள்கள் காரணத்தைச் சொல்லும் ஶப்தங்களால் லக்ஷணயா வ்யவஹரிக்கப்படுவது உபபந்நமே.

ஆத்மா அணுவன்றே? அதை 'மஹாந்' [பெரியது] என்று எப்படி விஶேஷிக்கக் கூடும்? இது மற்றும் ஒரு ஶங்கை. இவ்விடத்திற் சொல்லப்பட்டுள்ள இந்த்ரியம் முதலானவை அசேதநங்கள்; ஆத்மாவோ சேதந வஸ்து; ஆகையால் அதற்கு அஸாதாரணமாக வரும் கர்த்ருத்வத்தை உத்தேஶித்து அது 'மஹாந்' என்று உத்க்ருஷ்டமாகப் பேசப்படுகின்றது என்பதே இந்த ஶங்கைக்கு ஸமாதாநம். அப்படி 'மஹாந்' என்பதை 'ஆத்மா' என்பதற்கு விஶேஷணமாக எடுத்துக் கொள்ளும் பக்ஷத்தில், அடுத்த வாக்யத்தில் 'அந்த ஆத்மாவைக் காட்டிலும்' என்றன்றோ நிர்த்தேஶிக்கப்பட்டிருக்கவேண்டும்? அப்படி நிர்த்தேஶியாமல், 'அந்த மஹத்தைக் காட்டிலும்' என்று சொல்லப்பட்டிருப்பதைப் பார்க்கும்பொழுது, முன் வாக்யத்தில் 'ஆத்மா' என்பதை விஶேஷ்யமாக எடுத்துக்கொள்வது உபபந்ந மன்றென்றும் 'மஹாந்' என்பதையே விஶேஷ்யமாகச் சொல்வதே உபபந்நமாகு மென்றும் தோன்றவில்லையா? இதுவுமொரு ஶங்கை. ஆக்ஷேபம் சரியானதே; முன் வாக்யத்தில் எது விஶேஷ்யமோ அந்த விஶேஷ்ய வாசியான பதத்தாலேயே அடுத்துவரும் வாக்யத்தில் அதை நிர்த்தேஶம் செய்வது தான் ஸாது; ஆனால், சிற்சில விடங்களில் விஶேஷண வாசி பதத்தாலும் ப்ரக்ருத விஶேஷ்யம் நிர்த்தேஶிக்கப்படுவது உண்டு. 'கால் நடையாகப் போகும் தேவதத்தனைக் காட்டிலும் குதிரையின் மீது போகும் யஜ்ஞதத்தன் ஶீக்ரம் போவான்; குதிரையின் மீது போகிறவனைக் காட்டிலும் தூம சகடத்தில் செல்லும் விஷ்ணுமித்ரன் இன்னும் ஶீக்ரம் போகக்கூடியவன்' என்னும் ப்ரயோகங்கள் இதற்கு நிதர்ஶநங்கள்.

**सा काष्ठा सा परा गतिः** இந்த மந்த்ரத்தில் உபாஸநத்தை நிறைவேற்றிக் கொடுக்கும் உபாயங்கள் வரிசையாக ப்ரஸ்தாவிக்கப்பட்டு வருகின்றன. அவைகளுள் கடைசி உபாயம் பரமாத்மாவே என்பதைக் காட்டுகின்றது 'ஸா காஷ்டா' என்பது. அவன் அந்தர்யாமியாக இருந்துகொண்டு உபாஸநத்தை நிறைவேற்றிக் கொடுக்கிறானன்றோ? 'அப்படிப் பரமாத்மாவும் உபாயங்களுள் ஒன்றாகிவிட்டால், உபேயம் வேறொன்று இருக்கின்றதோ?' என்று உதிக்கும் ஶங்கைக்கு ஸமாதாநத்தை '**सा परा गतिः**' [அவனே பரம ப்ராப்யன்] என்பது விளக்குகின்றது. அதாவது: அவனே உபாயம், அவனே உபேயம்; அவனே ப்ராபகன், அவனே ப்ராப்யன் என்பது கருத்து.

—

एष सर्वेषु भूतेषु गूढोऽऽत्मा न प्रकाशते ।
दृश्यते त्वग्र्यया बुद्ध्या सूक्ष्मया सूक्ष्मदर्शिभिः ॥ १२ ॥

यच्छेद्वाङ्मनसी प्राज्ञस्तद्यच्छेद् ज्ञान आत्मनि ।
ज्ञानमात्मनि महति नियच्छेत्तद्यच्छेच्छान्त आत्मनि ॥ १३ ॥

---

12. இப்படி: 'பர' என்னும் ஶப்தத்தால் சொல்லப்படும் உத்கர்ஷமானது வஶீகரிக்கப்படவேண்டிய வகையில் விவக்ஷித மென்பதை இந்த மந்த்ரமும் இதற்கு அடுத்து வரும் மந்த்ரமும் விளக்குகின்றன.

[ப - ரை] **सर्वेषु भूतेषु** - எல்லா ப்ராணிகளிடத்திலும், **गूढ एष आत्मा** - அந்தர்யாமியாக இருக்கும் இந்தப் பரமாத்மா, **न प्रकाशते** - ['யஸ்த்வவிஜ்ஞாநவாந் பவதி' இத்யாதியான வாக்யங்களிற் சொல்லியிருக்கிறபடி இந்த்ரியாதிகளை வஶீகரியாதவர்களுக்கு] உள்ளபடி ப்ரகாஶிக்கிறதில்லை. **तु** - ஆனால், **सूक्ष्मदर्शिभिः** - [இந்த்ரியாதிகளை வஶீகரித்து] ஸூக்ஷ்மமான ஆத்ம தத்வத்தைத் தர்ஶிக்கும் ஶீலமுள்ளவர்களால், **अग्र्यया सूक्ष्मया बुद्ध्या** - ஐகாக்ரயத்துடனும் ஸூக்ஷ்மார்த்தத்தைப் பிரித்து அறிவிக்கும் ஶக்தியுடனும் கூடின புத்தியைக் கொண்டு, **दृश्यते** - பார்க்கப்படுகிறான். '**गूढोऽऽत्मा**' - ஸந்தி ஆர்ஷம்.

---

13. இந்த்ரியம் முதலியவைகளை வஶீகரணம் செய்யவேண்டுமென்று கீழே சொல்லப்பட்டது. 'வஶப்படுத்துவது என்பதற்கு அடக்கி வ்யாபார மற்றவையாக அவைகளை வைத்துக் கொள்ளவேண்டும் என்று அர்த்தமன்றோ? அது எப்படி' என்பது இப்பொழுது விவரிக்கப்படுகின்றது.

[ப - ரை] **प्राज्ञः** - உபாஸகன் **वाक्** - வாக் இந்த்ரியத்தை [வாக் முதலிய கர்மேந்த்ரியம் ஜ்ஞாநேந்த்ரியம் இவை யெல்லாவற்றையும்], **मनसी** - மநஸ்ஸில், **यच्छेत्** - நியமிக்கவேண்டும்; **तत्** - அந்த மநஸ்ஸை, **आत्मनि ज्ञाने** - ஆத்ம விஷயமான அத்யவஸாயத்தில், **यच्छेत्** - நியமிக்கவேண்டும்; **ज्ञानम्** - அந்த புத்தியை, **महति आत्मनि** - [கர்த்ருத்வமாகிய] உத்கர்ஷத்தை யுடைய ஆத்மாவினிடத்தில், **नियच्छेत्** - அடக்கவேண்டும்; **तत्** - அந்த ஆத்மாவை, **शान्त आत्मनि** - [ஸர்வாந்தர்யாமியா யிருக்கும்] ஷூர்மிஷட்க ரஹிதமான பரமாத்மாவினிடத்தில், **यच्छेत्** - அடக்கவேண்டும்.

இவ்விடத்தில் கவனிக்கவேண்டிய விஷயங்கள் சில உண்டு. (1) '**वाक्**' என்பது '**वाचम्**' என்பதற்குப் பதிலாகவும், '**मनसी**' என்பது '**मनसि**' என்பதற்கு பதிலாகவும் '**तद्यच्छेच्छान्त आत्मनि**' என்னும் இடத்தில், '**तम्**' என்பதற்குப் பதிலாக '**तत्**' என்றும் ப்ரயோகிக்கப்பட்டிருக்கின்றன. இம்மாதிரி ப்ரயோகங்களை வேதத்தில் காண

லாம். (2) மநஸ்ஸை ஜ்ஞாநத்தில் நியமிக்கவேண்டுமென்னு மிடத்தில், 'आत्मनि ज्ञाने' என்னும் பதங்கள் காணப்படுகின்றன. இதற்கு 'ஆத்மாவாகிற ஜ்ஞாநத்தில்' என்றுவது, 'ஜ்ஞாநமாகிற ஆத்மாவில்' என்றுவது அந்வயிப்பது அஸங்கதம். 'ஆத்மாவினிடத்தில் இருக்கும் ஜ்ஞாநத்தில்' [आत्मनि वर्तमाने ज्ञाने] என்று பொருள் கொள்ளலாமோ வென்றால், ஆத்மாவினிடம் இராத ஜ்ஞாநம் இல்லையாகையால், 'ஆத்மாவினிடம் இருக்கும்' என்னும் விசேஷணம் வ்யர்த்தமாகும். இம்மாதிரியான க்லேசங்களை நிவர்த்திக்கும் பொருட்டு, 'ஆத்ம விஷயகமான ஜ்ஞாநம்' என்று பொருள் கொள்ளப்படுகின்றது. அப்படிப் பொருள் கொள்ளும்பக்ஷத்தில், அடுத்து வரும் வாக்யம் வ்யர்த்தமாகிவிடுமோ வென்னும் சங்கைக்கு இடமில்லை. இது மேல் விவரிக்கப்படும் விவரணத்திலிருந்து விளங்கும்.

'வாக் முதலிய இந்த்ரியங்களை மநஸ்ஸில் நியமிக்கவேண்டும்' இத்யாதியான வாக்யங்களின் கருத்தாவது: வாக்கை மநஸ்ஸில் நியமிப்பதாவது—மநஸ்ஸுக்கு அநுகுணமல்லாத ப்ரவ்ருத்தியிலிருந்து வாக்கை விமுகமாகச் செய்வதே. மநஸ்ஸைப் புத்தியில் நியமிப்பதாவது: புத்தி என்று சொல்லப்படும் அத்யவஸாயத்திற்கு அநுகுணமான ப்ரவ்ருத்தியில் மநஸ்ஸைச் செலுத்துவதே. அதாவது—'ஆத்மா உபாதேயம்; மற்றவை ஹேயங்கள்' என்னும் அத்யவஸாயத்தைக் கொள்வதே. புத்தியை ஆத்மாவில் நியமிப்பதாவது—'ஆத்மாவே உபாதேயம், ஆகையால் அதுவே ஸாக்ஷாத்கரிக்கப்படவேண்டும்' என்னும் விஷயத்தில் புத்தியைச் செலுத்துவதே. அந்த ஆத்மாவை சாந்தமான பரமாத்மாவினிடம் நியமிப்பதாவது—'ஆத்மாவானது பரமாத்மாவுக்கு சேஷபூதன்' என்னும் ப்ரதிபத்தியே. அதாவது: அவனை சரணமாக அடைவதே.

'கீழே ரூபகத்தில் ரூபிதமாயிருக்குமவையெல்லாம் இந்த மந்த்ரத்தில் உதாஹரிக்கப்படவில்லையே; சரீர நியமநம் விஷய ஸந்நிதி பரிவர்ஜ்ஜநம் இவை இதில் ப்ரஸ்தாவிக்கப்படவில்லையே; ஆகையால் அவைகளை வசீகரிப்பதன் ப்ரகாரம் இதில் சொல்லப்படுகின்றது என்பது எப்படி யுக்தமாகும்?' என்றால், அவை இரண்டும் அர்த்த ஸித்தமென்று விலக்கப்பட்டன. நிற்க: அவை இரண்டும் யோகத்தின் உத்பாதந காலத்தில் [வாக் முதலியவைகளுக்கு கொஞ்சம் வ்யாபாரம் இருக்கும் காலத்தில்], ஸம்பாதிக்கப்பட வேண்டியவை; இந்த மந்த்ரத்திலோ வென்றால், வாக் முதலியவைகளுக்கு வ்யாபாரம் சுத்தமாக அற்றுப்போயிருக்கும் யோக காலத்தில் செய்யப்படவேண்டிய நியமநமே சொல்லப்படுகின்றது. அந்தக் காரணத்தால்தான் அவை இரண்டும் ப்ரஸ்தாவிக்கப்படவில்லை. ஆதலால், இந்த மந்த்ரத்தில் வசீகரண ப்ரகாரம் சொல்லப்படுகின்றது என்று சொல்வது யுக்தமே ஆகும்.

उत्तिष्ठत जाग्रत प्राप्य वरान्निबोधत ।
क्षुरस्य धारा निशिता दुरत्यया दुर्गं पथस्तत्कवयो वदन्ति ॥ १४ ॥

अशब्दमस्पर्शमरूपमव्ययं तथाऽरसन्नित्यमगन्धवच्च यत् ।
अनाद्यनन्तं महतः परं ध्रुवं निचाय्य तं मृत्युमुखात्प्रमुच्यते ॥१५॥

---

14. இவ்விதம் வஶீகரண ப்ரகாரத்தை உபதேஶித்து விட்டு, ஆசார்யர் உபாஸகர்களை நோக்கிப் பின்வருமாறு எச்சரிக்கிறார்.

[ப-ரை] **उत्तिष्ठत** - எழுந்திருங்கள் [ஆத்ம ஜ்ஞானத்திற்கு அபிமுகமாக இருங்கள்]; **जाग्रत** - விழித்திருங்கள் [அஜ்ஞானமாகிற நித்ரையை விட்டுவிடுங்கள்]; **वरान्** - ஶ்ரேஷ்டர்களை [ப்ரஹ்ம வித்துக்களை], **प्राप्य** - அடைந்து, **निबोधत** - [ஆத்ம தத்வத்தை] அறியுங்கள். [அது] **क्षुरस्य** - க்ஷுரம் என்னும் ஆயுத விஶேஷத்தின், **धारा** - நுனி [போல்] **निशिता** - கூர்மையானது; **दुरत्यया** - கஷ்டப்பட்டே தாண்டப்பட வேண்டியது. **कवयः** - ஜ்ஞானிகள், **तत्** - அதை, **दुर्गं पथः** - கஷ்டப்பட்டுப் போகக்கூடிய மார்க்கமென்று, **वदन्ति** - சொல்லுகிறார்கள் [கத்தி முனையில் பழகுவதுபோல் ஆத்ம தத்வத்தை ஸாவதானமாக அறியவேண்டும். ஸ்வல்ப அநவதானமும் நாஶத்தை விளைவித்துவிடும் என்பது கருத்து.]

---

15. அந்த ஆத்ம தத்வம் துரவபோதம்; அதாவது: அது பாஹ்யேந்த்ரியங்களால் அறியக்கூடியதன்று என்பதை விவரித்துவிட்டு, கீழ்ச் சொல்லியிருக்கும் ப்ரகாரம் இந்த்ரியாதிகளை வஶீகரணம் செய்தவர்கள் அந்த ஆத்மாவைத் தர்ஶந ஸமாநாகாரமான உபாஸநத்தால் விஷயீகரித்து ஸம்ஸாரத்திலிருந்து விடப்பட்டவர்களாகிறார்கள் என்று இந்த மந்த்ரத்தில் ஆசார்யன் செய்யும் உபதேஶம் உபஸம்ஹரிக்கப்படுகின்றது.

[ப-ரை] **यत्** - எந்தக் காரணத்தால், [அந்தப் ப்ரமாத்ம தத்வமானது] **नित्यं अशब्दम्** - எப்பொழுதும் பெயரற்றதோ, **नित्यं अस्पर्शम्** - எப்பொழுதும் தொடக்கூடாததாயும், **नित्यं अरूपम्** - ரூபமற்றதாயும் இருக்கிறதோ, **अव्ययम्** - [இப்படி அஶப்தமாயும் அஸ்பர்ஶமாயும் அரூபமாயும் இருக்கிறபடியால்] அவயவ வ்ருத்தி க்ஷயங்களற்றிருக்கின்றதோ, **तथा अरसं अगन्धवच्च** - அப்படியே கந்தம் ரஸம் இவையற்றுமிருக்கிறதோ, **अनादि अनन्तम्** - ஆதியும் அந்தமுமற்றதோ, [அந்தக் காரணத்தால்], **महतः परम्** - மஹானாக இருக்கும் ஜீவனைக் காட்டிலும் உத்க்ருஷ்டனை, **ध्रुवम्** - ஸ்திரமான, **तम्** - அந்தப் பரமபுருஷனை, **निचाय्य** - ஸாக்ஷாத்கரித்து, **मृत्युमुखात्** - பயங்கரமான ஸம்ஸாரத்திலிருந்து, **प्रमुच्यते** - விடப்படுகிறான்.

नाचिकेतमुपाख्यानं मृत्युप्रोक्तं सनातनम् ।
उक्त्वा श्रुत्वा च मेधावी ब्रह्मलोके महीयते ॥ १६ ॥

य इदं परमं गुह्यं श्रावयेद्ब्रह्मसंसदि ।
प्रयतः श्राद्धकाले वा तदानन्त्याय कल्पते तदानन्त्याय कल्पते ॥१८

इति तृतीयवल्ली ।

इति प्रथमोऽध्यायः ॥

---

16 - 17. இந்த மந்த்ரங்களில் பல ஶ்ருதி சொல்லப்படுகின்றது.

[ப - ரை] **मृत्युप्रोक्तम्** - யமதர்மராஜனால் சொல்லப்பட்டதும், **सनातनम्** - நித்யமானதுமான, **नाचिकेतमुपाख्यानम्** - நசிகேதஸ் ஸம்பந்தமான உபாக்யாநத்தை, **उक्त्वा** - சொல்லியும், **श्रुत्वा च** - கேட்டும், **मेधावी** - புத்திஶாலியாகிற [உபாஸகன்], **ब्रह्मलोके** - ப்ரஹ்ம லோகத்தில், **महीयते** - ப்ரகாஶித்துக்கொண்டிருக்கிறான்.

**यः** - எவன், **इदं परमं गुह्यम्** - பரம ரஹஸ்யமான இந்த உபாக்யாநத்தை, **ब्रह्मसंसदि** - ப்ராஹ்மண ஸமாஜத்திலாவது, **श्राद्धकाले वा** - ஶ்ராத்த காலத்திலாவது, **प्रयतः** - ஶுத்தனாக இருந்துகொண்டு, **श्रावयेत्** - ஶ்ரவணம் செய்விக்கிறானோ, [அவன்] **तदानन्त्याय** - மோக்ஷத்திற்கு, **कल्पते** - யோக்யனாகிறான்.

மூன்றாவது வல்லி முற்றிற்று.

முதல் அத்யாயம் முற்றுப்பெற்றது.



श्रीः

# अथ द्वितीयाध्यायः ।

हरिः ओम् ।

**पराञ्चि खानि व्यतृणत्स्वयंभूस्तस्मात्पराक्पश्यन्ति नान्तरात्मन् ।**
**कश्चिद्धीरः प्रत्यगात्मानमैक्षदावृत्तचक्षुरमृतत्वमिच्छन् ॥ १ ॥**

---

श्रीः

## இரண்டாவது அத்யாயம்

கீழே அதிகாரி புருஷர்களைப் பார்த்து 'ஆத்ம ஜ்ஞானத்தை நீங்கள் பெறவேண்டும்; அஜ்ஞானமாகிற தூக்கத்தை விடுங்கள்' என்று ப்ரோத்ஸாஹனம் செய்தும், ஒருவரும் ஆத்ம ஸ்வரூபத்தை அறிவதற்கு முயற்சி செய்யவில்லையே என்று வருந்தி, மறுபடியும் அந்த ஆத்ம ஸ்வரூபத்தை ப்ரகாராந்தரமாக இந்த வல்லியில் விளக்குகிறார்.

1. [ப - ரை.] **स्वयंभूः** - [ஸ்வதந்த்ரனாக இருக்கும்] ஈச்வரன், **खानि** - இந்த்ரியங்களை, **पराञ्चि** - வெளியிலுள்ள பொருள்களில் மாத்ரம் ப்ரஸரிப்பவைகளாக, **व्यतृणत्** - ஸ்ருஷ்டித்தார். **तस्मात्** - அந்தக் காரணத்தால், **पराक्** - வெளியில் இருக்கும் பொருள்களையே, **पश्यन्ति** - [ஜனங்கள்] பார்க்கிறார்கள்; **अन्तरात्मन्** - உள்ளே இருக்கும் ஆத்மாவை, **न [पश्यन्ति]** - பார்க்கிறார்களில்லை. **कश्चिद्धीरः** - [லோக ஸ்வபாவம் இவ்வாறு இருக்கையிலும்] எவனோ ஒரு தீரன், **आवृत्तचक्षुः** - திருப்பப்பட்ட கண்களை [இந்த்ரியங்களை] உடையவனாக இருந்துகொண்டு, **अमृतत्वम्** - மோக்ஷத்தை, **इच्छन्** - விரும்புகிறவனாய், **प्रत्यगात्मानम्** - ப்ரத்யக்கான [அதாவது: தனக்கே தான் தோற்றும் திறமையை யுடைய] ஆத்மாவை, **ऐक्षत्** - பார்க்கிறான்.

**स्वयंभूः** - மற்றைப் பொருள்களிடமிருந்து உத்பத்தியைப் பெறாதவன்; [அதாவது: ஸ்வயமாகவே இருப்பவன், பிறப்பற்றவன்]. இவ்விடத்தில் இந்தப் பதம் 'ஸ்வதந்த்ரன்' 'இச்சிக்கிறபடி கார்யங்களைச் செய்பவன்' என்னும் குறிப்பை யுடையது. 'ஐயோ! இந்த இந்த்ரியங்களைப் பராக்குக்களாக ஸ்ருஷ்டிப்பானேன்? ப்ரத்யக்குக்களாக ஸ்ருஷ்டித்திருக்கக்கூடாதா?' என்று ஆசார்யன் சோகிக்கிறான். அப்படி சோகிக்கும்பொழுது, 'அவன் ஸ்வதந்த்ரனாயிற்றே; அவனை இவ்விதம் ஏன் ஸ்ருஷ்டித்தாய் என்று கேட்பதற்கு யார் சக்தன்?' என்பதை ஸூசிப்பிக்கிறது இந்தப் பதம்.

**व्यतृणत्** - 'ஸ்ருஷ்டித்தார்' என்பதை இதற்குப் பொருளாகக் கூறியிருக்கிறோம். ஆனால் '**तृह**' என்னும் தாதுவுக்கு 'ஸ்ருஷ்டிக்கிறது'

**पराचः कामाननुयन्ति बालास्ते मृत्योर्यन्ति विततस्य पाशम् ।
अथ धीरा अमृतत्वं विदित्वा ध्रुवमध्रुवेष्विह न प्रार्थयन्ते ॥ २ ॥**

---

என்பது பொருள் அன்று; அதற்கு 'ஹிம்ஸிப்பது' என்பதே பொருள். நிர்வேதப்பட்டுச் சொல்வதால், 'இவ்விதம் ஹிம்ஸிக்கிறுனே' என்று பேசுவது உபபந்நமாகும்.

**पराञ्चि**-இது **'पराक्'** என்னும் ஶப்தத்தின் பஹுவசநம் [பன்மை]; இவ்விடத்தில் த்விதீயா விபக்தி [இரண்டாம் வேற்றுமை]. **परान् अञ्चन्ति पराञ्चि** [வெளியில் இருக்கும் பொருள்களை நோக்கிச் செல்லும். அதாவது: விஷயீகரிக்கும்]. இதற்கு எதிரிடையான ஶப்தம் **'प्रत्यक्'** என்பது. இதற்கு **प्रतीपमञ्चति** [வெளியில் ப்ரஸரியாமல் வேறு பக்கமாகச் செல்லும், அதாவது: உள்நோக்கிச் செல்லும்] என்பது பொருள். இந்தக் காரணத்தைக் கொண்டே நாம் ஆத்மாவை 'ப்ரத்யக்' என்று வ்யவஹரிக்கிறேம். ஆத்ம விஷயத்தில் உள் நோக்கிச் செல்வதாவது தனக்குத் தான் தோற்றுகையே. இந்தத் தோற்றம் ஜீவாத்மா பரமாத்மா இவர்களிருவருக்கும் உண்டு; அதாவது: சைதந்யத்தை யுடைய வஸ்துக்க ளெல்லாவற்றுக்கும் ஸாதாரணம். ஆனல் 'சைதந்யம்' என்பதற்கும் 'ப்ரத்யக்த்வம்' என்பதற்கும் வாசியுண்டு. ஜ்ஞாநத்திற்கு ஆஶ்ரயமா யிருப்பதைச் 'சேதநன்' என்றும், தர்ம பூத ஜ்ஞாந நிரபேக்ஷமாகக் கேவலம் 'நான்' என்று உண்டாகும் தோற்றமுடையதை 'ப்ரத்யக்' என்றும் வ்யவஹரிக்கிறர்கள்.

**अन्तरात्मन्** - அந்தராத்மாவை. இது வைதிக ப்ரயோகம். லௌகிகத்தில் இது **'अन्तरात्मानम्'** என்று இருத்தல் வேண்டும்.

**ऐक्षत्** - இந்தத் தாது ஆத்மநே பதம்; ஆகையால் **ऐक्षत** என்பது சரியான ரூபம். வேத ப்ரயோகமாகையால், பரஸ்மைபத ரூபம் கிடைத்தது. தவிர. இது இறந்தகால வினை. இவ்விடத்தில் நிகழ்காலத்தைக் குறிக்கின்றது. இதுவும் சாந்தஸம்.

---

2. வெளியிலுள்ள வஸ்துக்களில் இந்த்ரியங்கள் சென்றல் என்ன தோஷம் என்றல், அவைகளை யடைய விரும்புமவர்கள் அஜ்ஞர்களே என்று நிந்திக்கிறர்.

[ப - ரை.] **पराचः** - பாஹ்யங்களான, **कामान्** - போகங்களை, **बालाः** - அல்ப ப்ரஜ்ஞையை யுடையவர்களே, **अनुयन्ति** - பின்தொடருகிறர்கள். **ते** - அவர்கள், **विततस्य** - விஸ்தீர்ணமான [அதாவது: நீடித்திருக்கும்], **मृत्योः** - ஸம்ஸாரத்தின், **पाशम्** - பந்தத்தை, **यन्ति** - அடைகிறர்கள். **अथ धीराः** - தீரர்களோ வென்றல், [**प्रत्यगात्मन्येव** - ப்ரத்யகாத்மாவி னிடத்திலேயே], **ध्रुवम्** - ஶாஶ்வதமான, **अमृतत्वम्** - மோக்ஷத்தை, **विदित्वा** - அறிந்து, **इह** - இந்த ஸம்ஸார மண்டலத்தி

येन रूपं रसं गन्धं शब्दान् स्पर्शांश्च मैथुनान् ।
एतेनैव विजानाति किमत्र परिशिष्यते ॥ एतद्वै तत् ॥ ३ ॥

स्वप्नान्तं जागरितान्तञ्च उभौ येनानुपश्यति ।
महान्तं विभुमात्मानं मत्वा धीरो न शोचति ॥ ४ ॥

य इदं मध्वदं वेद आत्मानं जीवमन्तिकात् ।
ईशानं भूतभव्यस्य न ततो विजुगुप்सते ॥ एतद्वै तत् ॥ ५ ॥

---

ளுள்ள, **अध्रुवेषु** - நஶ்வரங்களான [பதார்த்தங்க ளொன்றிலும்], **न प्रार्थयन्ते** - விருப்பத்தைச் செய்யமாட்டார்கள்.

3. இனி ஆத்ம ஸ்வரூபத்தை பஹுவித ப்ரகாரமாக விளக்குகிறார். முதலில் ஸகல விஷயங்களும் ஆத்ம ஸ்வரூபத்தால் அநுக்ரஹிக்கப் பட்டே தம் தம் ஶக்தி விஶேஷத்தை அவை பெறுகின்றனவென்று சொல்லப்படுகின்றது.

[ப - ரை.] **येन एतेनैव** - எதைக் கொண்டே [அதாவது: எதை ஸாதநமாகக் கொண்டே; எதனுடைய அநுக்ரஹ பலத்தாலேயே], **रूपं रसं गन्धं शब्दान् स्पर्शान् मैथुनांश्च** - ரூபம் ரஸம் கந்தம் ஶப்தம் ஸ்பர்ஶம் இன்னும் மிதுந நிமித்தகமாக உண்டாகும் ஸுக விஶேஷங்கள் இவை எல்லாவற்றையும், **विजानाति** - [ஜந்துவானது] அறிகின்றதோ, [அந்த ஆத்ம தத்வத்தையே தீரன் பார்க்கிறான்]. **अत्र** - இங்குள்ள பதார்த் தங்களுள், **किम्** - எது, **परिशिष्यते** - [அதனால் ப்ரகாஶிக்கப்படத் தகாத தாக] எஞ்சி நிற்கின்றது? **तत्** - கீழே ப்ரதிபாதிக்கப்பட்டிருக்கும் பரம ப்ராப்யமான அந்த வஸ்துவானது, **एतद्वै** - இதுவே [இவ்விடத்தில் ப்ரதிபாதிக்கப்படும் ஆத்ம ஸ்வரூபமே].

---

4. ஸ்வப்நத்தில் தென்படு மவைகளும், விழித்துக் கொண்டிருக் கும் காலத்தில் தென்படும் பதார்த்தங்களும், அந்தப் பரமாத்மாவின் அநுக்ரஹம் பெற்றே தம் தம் கார்யங்களைச் செய்ய ஶக்தங்களாகின்றன வென்று இந்த மந்த்ரத்தில் சொல்லப்படுகின்றது.

[ப - ரை.] **स्वप्नान्तम्** - ஸ்வப்நத்தில் காணப்படும் ப்ரபஞ்சமும், **जागरितान्तञ्च** - விழித்துக் கொண்டிருக்கும் பொழுது தென்படும் ப்ரபஞ்ச மும், **उभौ** - இவை இரண்டையும், **येन** - எந்த ஸாதநத்தால், **अनुपश्यति** - [லோகமானது] பார்க்கிறதோ, [**तम्** - அந்த], **महान्तं विभुमात्मानम्** - பெரிய விபுவான ஆத்மாவை, **मत्वा** - உபாஸித்து, **धीरः** தீரனானவன், **न शोचति** - ஸம்ஸாரமாகிற துக்கத்தை அடைகிறானில்லை.

---

5. இவ்வாறு பரமாத்மாவை அறிந்தால், மோக்ஷத்தைப்

यः पूर्वं तपसो जातमद्भ्यः पूर्वमजायत ।
गुहां प्रविश्य तिष्ठन्तं यो भूतेभिर्व्यपश्यत । एतद्वै तत् ॥ ६ ॥

---

பெறலாமென்று சொல்லவிட்டு, அப்படி அறிந்தவனை நிந்திக்கக்கூடாதென்று அவனைப் புகழ்ந்து பேசுகிறார்.

[ப - ரை.] **यः** - எவன், **इदम्** - இந்த, **मध्वदम्** - மதுவென்று சொல்லக்கூடிய கர்ம பலத்தை அநுபவிக்கும், **आत्मानम्** - ஜீவாத்மாவையும், **जीवमन्तिकात्** - அந்த ஜீவாத்மாவுக்கு ஸமீபத்திலுள்ள [அந்த ஜீவாத்மாவுடன் ஒரே ஹ்ருதய குஹையில் புகுந்து], **भूतभव्यस्य ईशानम्** - இறந்த காலம் நிகழ் காலம் எதிர் காலம் ஆக மூன்று காலங்களிலும் இருக்கும் சேதநா சேதநவர்க்கம் முழுவதையும் நியமிக்கிறவனாக இருக்குமவனையும், **वेद** - அறிந்து உபாஸிக்கிறானோ, **ततः** - அவனை, **न विजुगुप्सते** - நிந்திக்கக்கூடாது. [அதாவது: அவனிடத்தில் ஏதாவது தோஷம் தென்பட்டபோதிலும், அவனுடைய ஜ்ஞாந மாஹாத்ம்யத்தைப் பார்த்து அவனைப் பூஜிக்கவேண்டுமே தவிர அவனை இகழக்கூடாது என்பது கருத்து] **एतद्वै तत्** - அது இதுதான்.

---

6. ஜகத்தின் ஸ்ருஷ்டி கர்த்தா வென்று க்யாதி பெற்றுள்ள ஸாக்ஷாத் சதுர்முக ப்ரஹ்மாவும், இந்தப் பரமாத்மாவின் கடாக்ஷம் பெற்றே தமது பெருமையை அடைந்திருக்கிறார் என்று இந்த மந்த்ரம் சொல்லுகின்றது.

[ப - ரை.] **यः** - எவன் [எந்தச் சதுர்முக ப்ரஹ்மா], **अद्भ्यः पूर्वम्** - ஜலத்திலிருந்து முதல் முதலில், **अजायत** - ஜநித்தாரோ, [**तम्** - அந்த], **तपसः** - ஸங்கல்ப மாத்ரத்தாலே, **पूर्वं जातम्** - [மற்றைத் தேவதைகளுக்கெல்லாம்] முன்னதாகப் பிறப்பைப் பெற்றும், **गुहां प्रविश्य** - ஹ்ருதய குஹையில் ப்ரவேஶித்து, **भूतेभिः** - தேஹம் இந்த்ரியம் முதலியவைகளுடன் கூடியும், **तिष्ठन्तम्** - இருக்கும் [சதுர்முக ப்ரஹ்மாவை], **यः** - எந்தப் பரமாத்மாவானவன், **व्यपश्यत** - கடாக்ஷித்தானோ ['இந்தச் சதுர்முகன் ஜகத்தை ஸ்ருஷ்டிக்கட்டும்' என்று அநுக்ரஹித்தானோ], **तत्** - அந்தப் பரப்ரஹ்மம், **एतद्वै** - இதுதான்; [இவ்விடத்தில் ப்ரதிபாதிக்கப்படுவது தான்].

**अद्भ्यः पूर्वमजायत** - முதல் முதலில் ஜலம் ஸ்ருஷ்டிக்கப்பட்டதென்றும், அந்த ஜலத்தில் வீர்யத்தைச் செலுத்தின பிறகு அதில் ஸ்வர்ணமயமான ஓர் அண்ட முண்டாயிற்றென்றும், அதில் சதுர்முக ப்ரஹ்மா உண்டானார் என்றும் ஸ்ம்ருதிகள் சொல்லுகிறபடியால், ப்ரஹ்மாவை ஜலத்திலிருந்து உண்டானதாகச் சொல்வது உபபந்நமே. ப்ரஹ்மா உண்டாவதற்கு முன் பகவான் தனது ஸங்கல்பத்தால் பஞ்ச பூதங்களை

**या प्राणेन संभवत्यदितिर्देवतामयी ।**
**गुहां प्रविश्य तिष्ठन्ती या भूतेभिर्व्यजायत ॥ एतद्वै तत् ॥ ७ ॥**

ஸ்ருஷ்டித்ததை ஸமஷ்டி ஸ்ருஷ்டியென்றும், ப்ரஹ்மா உண்டான பிறகு ஏற்பட்ட ஜகத் ஸ்ருஷ்டியை வ்யஷ்டி ஸ்ருஷ்டி யென்றும் சொல்வார்கள். இவ்விடத்தில், சதுர்முகனை ஸமஷ்டி ஸ்ருஷ்டிக்குப் பிறகும் வ்யஷ்டி ஸ்ருஷ்டிக்கு முன்னும் உண்டானுனென்பது சொல்லப்படுகிறது.

**भूतेभिः** - இது வைதிக ரூபம். லோகத்தில் **भूतैः** என்றே ரூபம் ஏற்படும்.

---

7. 'ஜீவ வர்க்கம் முழுவதும் அந்தப் பரப்ரஹ்மத்தையே ஆத்மாவாக உடைத்தா யிருக்கின்றது. அதாவது: ஜீவவர்க்கம் முழுவதும் தங்கள் தங்கள் கார்யங்களைச் செய்வதில் தமக்கு இருக்கும் அஸாதாரண ஶக்தியை அந்தப் பரமாத்மாவின் அநுக்ரஹ விஶேஷத்தாலேயே பெற்றிருக்கின்றது' என்பது இந்த மந்த்ரத்தின் விஷயம்.

[ப - ரை.] **या अदितिः** - கர்ம பலத்தை அநுபவிக்கும் யாதொரு ஜீவனனது, **प्राणेन सम्भवति** -ப்ராணனுடன் கூடி யிருக்கிறதோ, [**या** - எந்த ஜீவனனது], **देवतामयी** - இந்த்ரியங்களுக்கு அதீநமான போகத்தை உடைத்தாயிருக்கின்றதோ, [**या** - எந்த ஜீவனனது,] **गुहां प्रविश्य तिष्ठन्ती** - [ஹ்ருதயமாகிற] குஹைக்குள் ப்ரவேஶித்து நிற்கின்றதோ, **या** - எதானது, **भूतेभिः** - ஐந்து பூத மயமான தேஹத்துடன் கூடியதாய், **व्यजायत** - பலவிதமாக ஜநிக்கின்றதோ, **एतद्वै** - அந்த [ஜீவனும்], **तत्** - அந்த ப்ரஹ்மத்தையே அந்தர்யாமியாக உடைத்தா யிருக்கின்றது.

**अदितिः** - இந்த ஶப்தமானது தேவர்களுடைய மாதாவாகிற 'அதிதி' என்பவளுக்குப் பெயர்; வேதங்களில் 'பூமி'யையும் குறிக்கும். இவைகளே இந்த ஶப்தத்திற்கு ப்ரஸித்தமான பொருள்கள். ஆனால், இந்தப் பொருள் ஒன்றும் இவ்விடத்திற்கு ஸங்கதமாக மாட்டாது. அவர்களுக்கு மநுஷ்யர்களுடைய ஹ்ருதயமாகிய குஹையில் ப்ரவேஶம் ஸம்பவிக்கமாட்டாதன்றே? இவ்விடத்திலோ 'அதிதி' என்று பேசப்படும் வஸ்துவுக்கு '**गुहां प्रविश्य तिष्ठन्ती**' [குஹையில் ப்ரவேஶித்திருக்கின்றது] என்று குஹா ப்ரவேஶம் சொல்லப்பட்டிருக்கின்றது. இந்தக் குஹா ப்ரவேஶ வ்யபதேஶம், "**आत्मा गुहायान्निहितः**" [ஆத்மா குஹையில் இருக்கின்றது], "**यो वेद निहितं गुहायाम्**" [எவன் குஹையில் இருப்பவனை உபாஸிக்கிறானோ], என்கிறபடி ஆத்ம வஸ்துவுக்கே ப்ரஸித்தம். ஆகையால், இவ்விடத்தில் 'அதிதி' என்னும் ஶப்தம் 'ஆத்மா' என்று பொருள் பெற்றிருப்பதாக வ்யாக்யாநம் செய்யப்படுகின்றது. அந்த அர்த்தம் எப்படிக் கிடைக்கின்றது என்றால், அந்தப் பதத்தின் தாதுவின் அர்த்தத்தைப் பார்த்

தால் அது விளங்கும். "अत्तीति अदितिः" [எது சாப்பிடுகிறதோ : (अत्ति), அதாவது: அநுபவிக்கிறதோ, அது அதிதி]. எவற்றை அநுபவிக்கின்றது என்றால் : கர்ம பலங்களை அநுபவிக்கின்றது என்று சொல்லி, 'ஜீவன்' என்னும் அர்த்தத்தைச் செய்கிறார்கள். "ऋतं पिबन्तौ सुकृतस्य लोके गुहां प्रविष्टौ" என்னும் இந்த உபநிஷத்தின் முதல் அத்யாயம் மூன்றாவது வல்லியின் முதல் மந்த்ரத்தைப் பார்க்கவும். ஆனால், அவ்விடத்தில் பரமாத்மாவுக்கும் குஹா ப்ரவேஶம் சொல்லப்பட்டிருக்கிறபடியால், இவ்விடத்தில் ஏன் பரமாத்மாவைப் பொருளாகக் கொள்ளக்கூடாது? என்று ஒரு ஶங்கை ஜநிக்கலாம். ப்ராணனுடன் இருக்கின்றது என்றும், இந்த்ரியாதீநமான போகங்களை உடைத்தா யிருக்கின்றது என்றும், ப்ருதிவீ முதலிய பூதங்களுடன் கூடிய பல தேஹங்களை எடுத்துக்கொள்ளுகின்றது என்றும் இவ்விடத்தில் சொல்லப்பட்டிருப்பதால், அந்தப் பொருள் உபபந்நமாகமாட்டாது. ஆகையால் ஜீவனே இவ்விடத்தில் பேசப்படுகிறான் என்பது ஸித்தம்.

இப்படி ஜீவாத்மாவை ப்ரஸ்தாவித்துவிட்டு, 'एतद्वै तत्' [இதுதான் அந்தப் பரமாத்மா] என்று சொன்னால் 'அப்படிச் சொல்வது ஜீவாத்ம பரமாத்மாக்களுக்கு ஐக்யம் சொன்னதாகாதோ? அது ஶாஸ்த்ர விருத்தமன்றோ?' என்று ஒரு ஶங்கை ஜநிக்கலாம். அம்மாதிரியான ஶங்கைக்கு இடம் கொடாமல் இருக்கும் பொருட்டே 'तत्' என்பதற்கு 'அதுவே' என்று அர்த்தம் சொல்லாமல், அந்தப் பரமாத்மாவை ஆத்மாவாக உடையதே' என்று விவரணம் செய்யப்பட்டிருக்கின்றது. 'இப்படி அர்த்தம் செய்வதற்கு ப்ரமாணம் உண்டோ? ஶரீரத்தைச் சொல்லும் ஶப்தம் ஶரீரி பர்யந்தம் குறிப்புடையதாகும் என்று ஒரு ந்யாயமுண்டு. இவ்விடத்தில் तत् என்பது ஶரீரியையன்றோ சொல்லுகின்றது? அது எப்படி ஶரீரவாசியாகும்? ஶரீரிவாசியான ஶப்தம் ஶரீரபர்யந்தம் குறிக்கும் என்னும் ந்யாயமும் உண்டோ?' என்று ஒரு கேள்வி பிறக்கும். இதற்கு ஸமாதாநமாவது : ஶரீரவாசியான ஶப்தம் ஶரீரிபர்யந்தம் குறிக்கும் என்னும் ந்யாயமானது, 'ஶரீரம்' அப்ருதக் ஸித்த விஶேஷணமாகவும் 'ஶரீரி' விஶேஷ்யமாகவும் இருப்பதாலன்றோ? அப்ருதக் ஸித்த விஶேஷணவாசியான ஶப்தம் விஶேஷ்ய பர்யந்தம் போகுமானால், அப்ருதக் ஸித்த விஶேஷ்யவாசியான ஶப்தம் விஶேஷணத்தையும் ஏன் குறிக்கக்கூடாது? இவ்விடத்தில் ஜீவன் விஶேஷணம், பரமாத்மா விஶேஷ்யம். இவை இரண்டும் அப்ருதக் ஸித்தங்கள் ; அதாவது: ஒன்றைவிட்டு மற்றொன்று வர்த்தியாது. அந்தக் காரணத்தைக் கொண்டு ஜீவவாசியான ஶப்தம் பரமாத்ம பர்யந்தம் போகுமானால், அந்தக் காரணத்தைக் கொண்டே பரமாத்ம வாசியான ஶப்தமும் ஜீவனையும் சொல்லுகின்றது என்று சொல்வது ந்யாயத்திற்கு ஒத்ததுதானே. ஆகையால், 'तत्' என்னும் பரமாத்ம

**अरण्यो र्निहितो जातवेदा गर्भ इव सुभृतो गर्भिणीभिः ।
दिवे दिवे ईड्यो जागृवद्भिर्हविष्मद्भिर्मनुष्येभिरग्निः ॥ एतद्वै तत् ॥ ८ ॥**

---

வாசியான ஶப்தம் அதை ஆத்மாவாக உடைய [அதாவது: அதை அப்ருதக் ஸித்த விஶேஷ்யமாக உடைய] ஜீவாத்ம பர்யந்தம் செல்லுகின்றது என்று விவரிக்கக்கூடும். இம்மாதிரியே கீழே முதல் அத்யாயம் இரண்டாவது வல்லி 17-வது மந்த்ரத்தில் "**ब्रह्मजज्ञं देवमीड्यं**" என்னும் இடத்தில் '**देवम्**' என்னும் பதத்திற்கு 'தேவனை ஆத்மாவாக உடைய ஜீவனை' என்று அர்த்தம் சொல்லப்பட்டிருக்கின்றது. ஸ்ரீ பகவத் கீதையிலும் "**क्षेत्रज्ञं चाऽपि मां विद्धि**" என்னும் பகவத் வாக்யத்தில் ஸ்ரீ க்ருஷ்ணனைச் சொல்லும் '**माम्**' [என்னை] என்னும் ஶப்தம் '**मदात्मकं**' [என்னை ஆத்மாவாக உடையவன்] என்னும் அர்த்தத்தில் ப்ரயோகம் செய்யப்பட்டிருப்பதாகப் பகவத் பாஷ்யகாரருடைய பாஷ்யம்.

**देवतामयी** - 'தேவ' என்னும் ஶப்தத்திற்கு 'இந்த்ரியங்கள்' என்னும் பொருள் உண்டு.

---

8. இவ்வாறு இந்த ப்ரபஞ்சத்தில் தென்படும் சேதநாசேதந வஸ்துக்களுள் ப்ரதாநமான சிலவற்றை உதாஹரித்து இவையெல்லாம் ப்ரஹ்மாத்மகமென்று சொல்லிவிட்டு, அதனால் த்ருப்தி அடையாமல், மறுபடியும், இந்த லோகத்தில் ப்ரஜைகளெல்லாம் ஜீவித்திருப்பதற்கு அத்யவஶ்யங்களாயும் எல்லாருக்கும் பரமோபகாரத்தைச் செய்யுமவையாயும் எல்லாராலும் பூஜிக்கப்படுமவையாயும் இருக்கும் அக்நி ஸூர்யன் முதலியவைகளும் ப்ரஹ்மத்தையே அந்தராத்மாவாக உடைத்தாயிருக்கின்றனவென்று வற்புறுத்துகிறார். இந்த மந்த்ரத்தில் அக்நியைப்பற்றியும் அடுத்துவரும் மந்த்ரத்தில் ஸூர்யனைப்பற்றியும் ப்ரஸ்தாவிக்கிறார்.

[ப - ரை.] **दिवे दिवे** - ஒவ்வொரு நாளும், **जागृवद्भिः** - விழித்துக் கொண்டிருக்கும் [அதாவது: மிக்க ஸாவதாநமாக இருக்கும் ஸ்வபாவமுள்ள], **हविष्मद्भिः** - ஹவிஸ்ஸை யுடைய [அதாவது: நெய் முதலிய ஹவிஸ்ஸை ஹோமம் செய்வதில் ப்ரவ்ருத்தர்களான], **मनुष्येभिः** : மநுஷ்யர்களால் [அதாவது: ருத்விக் முதலானவர்களால்], **ईड्यः** - ஸ்துதிக்கப்பட்டுக் கொண்டிருக்கும், **अग्निः** - உயர்ந்த ஸ்திதிக்கு நயிப்பிக்கும் ஶீலமுள்ள, [**यः** - எந்த], **जातवेदाः** - அக்நி தேவதையானது, **गर्भिणीभिः** - கர்ப்ப ஸ்த்ரீகளால், **सुभृतः** - ஜாக்ரதையுடன் வளர்க்கப்பட்டு வரும், **गर्भ इव** - கர்ப்பத்திலிருக்கும் ஶிஶுவைப்போல, **अरण्योः** - அரணிக்கட்டைகளில், **निहितः** - வைக்கப்பட்டிருக்கிறதோ, **एतद्वै** - இந்த அக்நி ஸ்வரூபமானது, **तत्** - [கீழ்ச் சொல்லப்பட்டுள்ள] ப்ரஹ்மத்தையே ஆத்மாக உடையது.

यतश्चोदेति सूर्यो अस्तं यत्र च गच्छति ।
तन्देवास्सर्वेऽर्पितास्तदु नात्येति कश्चन ॥ एतद्वै तत् ॥ ९ ॥
यदेवेह तदमुत्र यदमुत्र तदन्विह ।
मृत्योस्स मृत्युमाप्नोति य इह नानेव पश्यति ॥ १० ॥

---

9. [ப - ரை.] **यतः** - எதனிடமிருந்து [எந்த ப்ரஹ்மத்தினிடமிருந்து], **सूर्यः**-ஸூர்யன், **उदेति** - உதயத்தைப் பெறுகிறானோ, **यत्र** - எந்த ப்ரஹ்மத்தினிடத்தில், **अस्तम्** - அஸ்தமநத்தை, **गच्छति** - அடைகிறானோ, **तम्** - அந்த ப்ரஹ்மத்தினிடத்தில், **सर्वे देवाः** - எல்லாத் தேவதைகளும், **अर्पिताः** - ப்ரதிஷ்டிதர்களாக இருக்கிறார்கள். **तत्** - அந்தப் பரமாத்மாவை, **कश्चन** - ஒருவரும், **नात्येति** - அதிக்ரமிக்கிறாரில்லை. **एतद्वै** - இந்த ஸூர்யன் முதலிய தேவர்களின் ஸ்வரூபமும், **तत्** - அந்த ப்ரஹ்மத்தையே ஆத்மாவாக உடையதே.

---

10. இப்படி பஹு ப்ரகாரமாக 'ஸர்வத்துக்கும் பரமாத்மாவே ஆத்மா' என்று பரமாத்மாவுக்கு ஸர்வாத்மத்வத்தை ப்ரபஞ்சித்துவிட்டு, 'அது எப்படி உபபந்நமாகும்?' என்று ஆக்ஷேபிப்பவர்களுக்கு ஸமாதாநம் சொல்லுகிறார் இந்த மந்த்ரத்தில். **'य इह नानेव पश्यति'** [பரமாத்மாவினிடத்தில் எவன் பேதத்தைப் பார்க்கிறானோ அவன் ஸம்ஸாரத்திலேயே உழன்று கொண்டிருப்பான்] என்று சொல்வதைப் பார்த்தால், எல்லாம் ஒன்று என்னும் மதம் வற்புறுத்தப்படுவது போலத் தோன்றும். அடுத்துவரும் மந்த்ரத்திலும் **'नेह नानास्ति किञ्चन'** [பேதம் என்பதே இல்லை] என்று சொல்லப்படுகின்றது. ஆனால், இப்படி ஸ்வரூபைக்யம் இவ்விடத்தில் உபதேசிக்கப்படுகின்றது என்று சொல்வது ப்ரகரணத்திற்கு ஒத்ததன்று என்பதும், மற்றை இடங்களில் செய்யப்படும் பேத உபதேசத்திற்கு அத்யந்தம் விருத்தம் என்பதும், ஶரீர ஶரீரி பாவத்தை அவலம்பித்து இந்தப் பேத நிஷேதத்திற்கு அர்த்தம் செய்வதே ஸமஞ்ஜஸமென்பதும் சற்று ஊன்றிப் பார்ப்பவர்களுக்கு நன்கு விளங்கும்.

இவ்விடத்தில் ஶங்கிக்கப்படும் ஶங்கையாவது: 'பரமாத்மாவே என்னுடைய ஆத்மா' என்னும் தோற்றம் அஸங்கதம். ஆத்மாவானது நான் என்று அஹந்தைக்கு ஆஶ்ரயமாகவன்றோ எல்லாராலும் அநுஸந்திக்கப்படுகின்றது? அந்த நான் என்னும் தோற்றம் 'நான் இவ்விடத்தில் இருக்கிறேன்; இந்த இடத்தைக் காட்டிலும் பிந்நமான வேறோர் இடத்தில் இல்லை' என்று தேஶாந்தர வ்யாவ்ருத்தமாகவே உண்டாகக் கூடியதன்றோ? அப்படிப்பட்ட தோற்றம் உண்டாகுமவனுக்கு 'ஸர்வ தேஶங்களிலும் ஸர்வ காலங்களிலும் இருக்குமதான பரமாத்மாவே என்னுடைய அந்தராத்மா' என்னும் தோற்றம் எப்படி உண்டாகும்? இதுதான் ஆக்ஷேபம். இதற்கு, 'பரஸ்பரம் விருத்தங்களான இம்மாதிரி

मनसैवेदमाप्तव्यन्नेह नानाऽस्ति किञ्चन ।
मृत्योस्स मृत्युं गच्छति य इह नानेव पश्यति ॥ ११ ॥

தோற்றங்கள் தோன்றுவதற்கு ஸம்பாவனையே இல்லை' என்பதே ஸமாதாநம். அது எப்படி என்றால்: தத்வத்தை உணர்ந்தவர்களுக்கு நான் என்னும் தோற்றம் ஜீவ விசிஷ்டமான பரமாத்மாவையே விஷயமாக உடையதாதலால், 'ஸங்குசிதமான ஓரிடத்தின் ஸம்பந்தத்தைப் பெற்றவன் நான்' என்னும் தோற்றம் ஜநிக்கவே மாட்டாது. அவர்களுக்கு 'நானே மநு, நானே ஸூர்யன்' என்று, வாமதேவருக்குத் தோன்றினது போல, பரமாத்மாவானது எல்லா வஸ்துக்களிலும் எவ்விடத்திலும் இருப்பதாகவன்றோ தோற்ற முண்டாகும்? தத்வத்தை உணராதவர்களுக்கோ வென்றால் நான் என்னும் தோற்றம் ஜீவனையே விஷயமாக உடையது. அவர்களுக்குத் தாம் ஒரு குறிப்பிட்ட தேசத்தில் இருப்பதாகவே தோற்றம் உண்டாகும். அவர்களுக்குப் பரமாத்மாவின் தோற்றமில்லை யாகையால், ஸர்வ தேசத்திலும் ஸர்வ காலத்திலும் இருக்கும் பரமாத்மாவின் தோற்றத்தால் உண்டாகக்கூடிய விரோதத்திற்கே இடம் இல்லை. இந்த விரோதாபாவத்தை அவலம்பித்தே இந்த மந்த்ரம் பேசுகின்றது.

[ப - ரை] **इह** - இந்த லோகத்தில், **यत्** எதுவோ [எந்தப் பரமாத்ம தத்வமானது 'நான்' என்னும் அநுஸந்தாநத்திற்கு விஷயமோ], **तदेव** - அதுவே, **अमुत्र** - லோகாந்தரத்தில் இருப்பவர்களுக்கும் ஆத்மா. **यत्** - எது, **अमुत्र** - லோகாந்தரத்தில் இருப்பவர்களுக்கு ஆத்மாவோ, **तत्** - அதுவே, **इह** - இந்த லோகத்தில் ஏற்படும் அநுஸந்தாநத்திற்கு விஷயம். [ஆகையால்] **यः** - எவன், **इह** - இவ்விடத்தில், **नाना इव** - அந்த இரண்டும் வெவ்வேறாக இருப்பதுபோல, **पश्यति** பார்க்கிறானோ [அதாவது: இந்த உண்மையை அறியவில்லையோ], **सः** - அவன், **मृत्योः** - ஸம்ஸாரத்திலிருந்து, **मृत्युम्** - ஸம்ஸாரத்தையே, **आप्नोति** - அடைகிறான். [அதாவது: அவனுக்கு ஸம்ஸார பந்தம் விலகாமலே நிற்கின்றது.]

---

11. இப்படி எல்லாவற்றுக்கும் அந்தராத்மாவாக இருக்கும் பரமாத்ம தத்வத்தை நாம் எப்படி அடையக்கூடு மென்றால், அது விசுத்தமான மநஸ் ஒன்றாலேயே க்ரஹிக்கத் தகுந்தது என்று இந்த மந்த்ரம் சொல்லுகின்றது.

[ப - ரை] **इदम्** - இந்த ஆத்ம ஸ்வரூபமானது, **मनसैव** - மநஸ்ஸாலேயே [அதாவது: விசுத்தமான மநஸ்ஸினால் மாத்ரம்], **आप्तव्यम्** - க்ரஹிக்கத்தகுந்தது. **इह** - இவ்விடத்தில், **नाना** - பிந்நமாக [அதாவது - அப்ரஹ்மாத்மகமாக], **किञ्चित्** - ஒன்றும், **नास्ति** - இல்லை. [மற்றவை கீழ்மந்த்ரத்திற்போலவே. ஏற்கெனவே சொல்லப்பட்ட அர்த்தத்தை த்ருடமாகச் செய்வதற்காக இவ்விடத்தில் மறுபடியும் அது சொல்லப்படுகிறது.]

अङ्गुष्ठमात्रः पुरुषो मध्य आत्मनि तिष्ठति ।
ईशानो भूतभव्यस्य न ततो विजुगुप्सते ॥ एतद्वै तत् ॥ १२ ॥

---

12. அந்தப் பரமாத்மா உபாஸகர்களை அநுக்ரஹிக்கும் பொருட்டு அவர்களுடைய ஹ்ருதயத்தில் ஸந்நிஹிதனாகவும், அந்த ஹ்ருதயத்தில் இருக்கிறபடியால் அந்த ஸ்தாநத்திற்கு அநுகுணமான ஆக்ருதியுடன் கூடினவனாகவும் இருக்கிறானென்று இந்த மந்த்ரம் சொல்லுகின்றது. மநுஷ்யர்களுடைய ஹ்ருதயம் அவர்களுடைய அங்குஷ்ட அளவு உள்ளதாம்; ஆகையால் அந்தப் பரமாத்மாவும் அந்த அங்குஷ்ட அளவு உள்ளவனாக அவ்விடத்தில் இருக்கிறானாம். மநுஷ்யர்களே உபாஸநத்திற்கு அதிகாரிகளாகிறபடியால், அவர்களுடைய ஹ்ருதயத்தில் அந்த அளவு உள்ளவனாக இருக்கிறான் என்பதைப்பற்றி மாத்ரம் இவ்விடத்தில் ப்ரஸ்தாவிக்கப்படுகிறது. அங்குஷ்ட மிராத குதிரை முதலிய ம்ருகங்களுக்கு உபாஸநாதிகாரம் இல்லையாதலால், அவைகளைப்பற்றி இவ்விடத்தில் ப்ரஸ்தாவமில்லை.

[ப - ரை] **भूतभव्यस्य** - இறந்த காலம் எதிர்காலம் [நிகழ்காலம்] இம்மூன்று காலங்களிலும் இருக்கும் ஸகல சேதநாசேதந வர்க்கத்திற்கும், **ईशानः** - ஈஶ்வரனாக [நியந்தாவாக] இருக்கும், **पुरुषः** - [பரம புருஷன், **मध्य आत्मनि** - [உபாஸக] சரீரத்தின் நடுவில், **अंगुष्ठमात्रः** – அங்குஷ்டம் [அதாவது: கட்டைவிரல்] அளவு உள்ளவனாக, **तिष्ठति** இருக்கிறான். **ततः** – அப்படி அவன் ஈஶ்வரனாக இருக்கிறபடியால், **न विजुगुप्सते** - [அங்கு இருப்பதில்] ஜுகுப்ஸை அடைகிறானில்லை. அதாவது: வாத்ஸல்யாதிஶயத்தால் உபாஸகர்களுடைய தேஹத்தில் இருக்கும் தோஷங்களொன்றையும் பாராட்டாமல் அவைகளைப் போக்யம் போலவே பாவித்து வருகிறான்.

இவ்வாறு இந்த மந்த்ரத்தைப் பரமாத்ம பரமாகவே நமது ஆசார்யர்கள் நிர்வஹித்திருக்கிறார்கள். இந்த மந்த்ரத்தில் சிலர் ஜீவாத்மாவே ப்ரதிபாதிக்கப்படுகின்றது என்று ஆக்ஷேபிப்பது உண்டு. மற்றும் சிலர், 'இந்தக்கடவல்லி முழுவதும் பஶுபதி என்னும் தேவதா விஶேஷத்தைப் பரதேவதையாகப் பேசுகின்றது. அப்படி அது பேசுகின்றது என்பது இந்த மந்த்ரத்தால் நன்கு ஏற்படும்' என்று சொல்வார்கள். இவையெல்லாம் உபபந்நங்களல்ல வென்பது மேற் சொல்லப்படப்போகும் ஹேதுக்களால் விளங்கும்.

முதலில், ஜீவாத்ம விஷயமென்று கொள்பவர்களின் வாதத்தைக் கவனிப்போம். அவர்கள் சொல்வதாவது :—' இந்த மந்த்ரத்தில் ப்ரதிபாதிக்கப்படும் வஸ்து அங்குஷ்ட அளவு உள்ளது என்று சொல்லப்பட்டிருக்கிறது. அந்த அளவு ஜீவாத்மாவுக்கே உண்டு என்று ஶ்ருதி ஸ்ம்ருதிகளிலிருந்து ஏற்படுகிறபடியால், அதே அளவைச் சொல்லும் இந்த

உபநிஷத்தும் அந்த ஜீவாத்மாவையே குறிக்கவேண்டும் என்பதுதான். அவர்கள் உதாஹரிக்கும் ஶ்ருதி வாக்யமாவது :—"प्राणाधिपस्सञ्चरति स्वकर्मभिरंगुष्ठमात्रः" [ப்ராணாதிபனாக இருக்குமவன் தனது கர்மங்களால் அங்குஷ்ட அளவுள்ளவனாக ஸஞ்சரிக்கிறான்]. இதில் 'ப்ராணாதிபன்' என்றும் 'தனது கர்மங்களினால்' என்றும் தென்படும் நிர்த்தேஶங்கள் இது ஜீவாத்ம விஷயமே என்பதை நிராக்ஷேபமாகத் தெரிவிக்கின்றது. ஸ்ம்ருதியும், "अंगुष्ठमात्रं पुरुषं निश्चकर्ष यमो बलात्" [அங்குஷ்ட அளவுள்ள புருஷனை யமன் பலாத்காரமாக இழுத்தான்] என்று ஜீவாத்மாவையே அங்குஷ்ட அளவு உள்ளவனாகப் பேசுகின்றது. இவை இம்மாதிரிப் பேசினாலும், 'भूतभव्यस्येशानः' [ஸகலத்திற்கும் ஈஶ்வரன்] என்றுசொல்லப்பட்டிருக்கிறபடியால், அஸங்குசிதமான நியமந ஶக்தியையுடைய பரமாத்மாவே இவ்விடத்தில் விவக்ஷிதன் என்று சொல்லலாமோ வென்றால், முதலிற் சொல்லப்பட்டுள்ள ஜீவ லிங்கமாகிற அங்குஷ்ட பரிமாணத்வம் பலீயஸ் ஆதலால், பின்வரும் 'எல்லாவற்றுக்கும் ஈஶ்வரன்' என்பதைக் கொஞ்சம் ஸங்கோசித்துக்கொள்வதே உசிதமாகு மன்றோ? 'தன்னைக்காட்டிலும் நிக்ருஷ்டமாக இருக்கும் ஸகலத்திற்கும் ஈஶ்வரன்' என்று அர்த்தம் சொல்லவேண்டுமே தவிர்த்து, உபக்ரமத்திற் சொல்லப்பட்டதற்கு விருத்தமாக அர்த்தம் செய்வது ஶாஸ்த்ர ஸம்மத மாகமாட்டாது. இதுதான் இவர்கள் செய்யும் ஆக்ஷேபம்.

இதற்கு ஸமாதாநமாவது :—'அங்குஷ்ட பரிமாணவத்வம் ஜீவனுக்கு மாத்ரமே, பரமாத்மாவுக்கு அது இல்லை' என்று சொல்வது சரியன்று. அந்தப் பரிமாணவத்வம் பரமாத்மாவைப்பற்றியும் பேசப்பட்டிருக்கின்றது. "अगुष्ठमात्रः पुरुषोऽगुष्ठञ्च समाश्रितः" என்று தைத்திரீய உபநிஷத்திலும், "अंगुष्ठमात्रः पुरुषोऽन्तरात्मा सदा जनानां हृदये सन्निविष्टः" என்று ஶ்வேதாஶ்வதரோபநிஷத்திலும் அங்குஷ்ட மாத்ரத்வம் பரமாத்மாவுக்கும் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆனால், இரண்டு புருஷர்கள் விஷயத்திலும் அங்குஷ்ட பரிமாணவத்வம் ஔபாதிகமே. ஜீவன் அத்யந்த அணுபரிமாண முள்ளவன் என்று

"वालाग्रशतभागस्य शतधा कल्पितस्य च । भागो जीवस्य विज्ञेयः"

என்று ஸ்ரீஶ்வேதாஶ்வதர உபநிஷத்தில் சொல்லப்பட்டிருக்கிறபடியால், அந்த ஜீவனுக்கு அங்குஷ்ட பரிமாணவத்வம் அவன் வஸிக்கும் ஹ்ருதயத்திற்குத்தகுந்தபடியாக ஔபாதிகமென்றே சொல்லவேண்டும். பரமாத்மாவுக்கும், விபுவான அவன் உபாஸகனுடைய ஹ்ருதயத்தில் இருக்கிறானென்று சொல்லப்பட்டிருக்கிறபடியால், அந்த உபாஸகருடைய ஹ்ருதயங்கள் அவரவர்களுடைய அங்குஷ்டத்தின் அளவை யுடையவையானபடியால் அதற்குத் தகுந்தபடி அங்குஷ்ட பரிமாணவத்வம் அவனுக்கும் ஔபாதிகமென்றே சொல்லவேண்டும். இப்படி அங்குஷ்ட பரிமாணவத்

வம் ஜீவாத்மா பரமாத்மா என்னும் இருவருக்கும் ஸாதாரணமாக இருக்கிறபடியால் அதைக்கொண்டு ப்ரக்ருத விவாதத்தை நிர்ணயிப்பது ஸாத்யமில்லை. அஸங்குசிதமான பூதபவ்ய ஈஶித்ருத்வமோ பரமாத்மாவுக்கே அஸாதாரணம். அந்த ஈஶித்ருத்வம் இவ்விடத்தில் நிர்த்தேஶிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் அந்த ஈஶித்ருத்வ நிர்த்தேஶ பலத்தைக் கொண்டு அங்குஷ்ட ப்ரமிதனென்று சொல்லப்படும் புருஷன் பரமாத்மாவே என்று நிர்ணயம் செய்யப்படுகின்றது.

நிற்க: இந்த அத்யாயத்திலேயே "**यदिदं किञ्च जगत्सर्वं**" [2-6-2] 'அங்குஷ்ட ப்ரமிதனை புருஷனிடமிருந்து பயந்து ஸகல ஜகத்தும் நடுங்குகின்றது' என்று சொல்லப்படுகிறது. இப்படி ஜகத் முழுவதையும் நடுங்கச்செய்யும் ஶக்தியானது பரமாத்மாவுக்கே அஸாதாரணமென்பது "**भीषास्माद्वातः पवते**" இத்யாதியான தைத்திரீய உபநிஷத் வாக்யத்திலிருந்து வ்யக்தமாகின்றது. மேலும், அடுத்த வல்லியில் '**न तत्र सूर्यो भाति न चन्द्रतारकम्**" [2-5-15] 'இந்த அங்குஷ்ட ப்ரமிதனை புருஷனுக்கு ஸூர்ய சந்த்ராதிகளின் தேஜஸ்ஸை மறைக்கக்கூடிய ஒரு தேஜோ விஶேஷம் இருக்கின்றது' என்று சொல்லப்படுகின்றது. இப்படிப்பட்ட தேஜோ விஶேஷம் பரமாத்மாவுக்கே அஸாதாரணமென்பது "**तं देवा ज्योतिषां ज्योतिः........येन सूर्यस्तपति तेजसेद्धः**" இத்யாதியான ப்ருஹதாரண்யக உபநிஷத் வாக்யத்திலிருந்து வ்யக்தம். இம்மாதிரியான ஹேதுக்களால் இந்த மந்த்ரத்தில் ப்ரதிபாதிக்கப்படும் புருஷன் பரமாத்மாவே என்பது ஸித்தம்.

இரண்டாவது: இந்த வாக்யத்தில் தென்படும் 'ஈஶாந' என்னும் ஶப்த பலத்தைக்கொண்டு இந்தக் கடோபநிஷத் முழுவதும் பசுபதியாகிற தேவதா விஶேஷத்தையே ப்ரதிபாதிக்கின்றது என்று வாதிப்பவர்களின் உபபாதநங்களைப் பராமர்ஶிப்போம். அவர்கள் சொல்வதாவது:— '**ईश्वरश्शर्व ईशानः**' என்னும் நிகண்டு பாடத்தால் 'ஈஶாந' என்னும் ஶப்தம் பஶுபதி என்னும் தேவதா விஶேஷத்தில் ரூடமாய் அதையே பொருளாகக் கொண்டிருக்கிறது. ரூடியான பொருள் ஒத்து வருகையில் அதைக் கைவிட்டு யௌகிகமாக அர்த்தம் செய்வது ஶாஸ்த்ர ஸம்மதமாகமாட்டாது. "**तद्विष्णोः परमं पदम्**" இத்யாதியான இடத்தில் 'விஷ்ணு' என்னும் தேவதை ப்ரதிபாதிக்கப்பட்டிருக்கிறதே என்றால், அந்த வாக்யத்திற்கு 'அது விஷ்ணுவின் ஸ்வரூபமே' என்பது பொருளன்று; [**विष्णोः स्वरूपादपि परमं उत्कृष्टम्**] விஷ்ணுவை ஒரு எல்லையாகச் சொல்லி 'அதைக்காட்டிலும் உயர்ந்தது பஶுபதியென்னும் தேவதா விஶேஷத்தின் ஸ்வரூபம்' என்பதே அதன்பொருள். இவ்வாறு நிர்ணயம் ஏற்படுகிறபடியால், பரமாத்ம ஸ்வரூபத்தை ப்ரதிபாதிக்கும் மற்றை வாக்யங்களுக்கு இதற்கு அநுகுணமாகப் பொருள்படுத்திக்கொண்டு, இந்த உபநிஷத் முழுவதும் பசுபதியாகிற தேவதா விஶேஷத்தையே ப்ரதிபாதிக்கின்றது என்றே சொல்லவேண்டும். இதுதான் இவர்கள் செய்யும் வாதம்.

இதைக் காட்டிலும் பலீயஸ்ஸாக இன்னும் ஒரு ஹேதுவையும் அவர்கள் சொல்லுகிறார்கள். அது என்னவென்றால்:— ஸ்ரீ வ்யாஸர், தமது ப்ரஹ்மஸூத்ரத்தில், அங்குஷ்ட மாத்ரனென்று ஶ்ருதியில் சொல்லப்படுமவன் ஜீவாத்மாவன்று அவன் பரமாத்மாவே என்பதை உபபாதிக்குமிடத்தில், ஜீவாத்மாவை வ்யாவ்ருத்தி செய்வதற்கு शब्दादेव- என்று ஒரு ஹேதுவைப் படித்திருக்கிறார். அதாவது: 'லிங்கம் முதலியவையான ப்ரமாணங்களால் இந்த நிர்ணயம் செய்யப்படவில்லை; ஸாக்ஷாத் ஶ்ருதியாலேயே [शब्दादेव] இது ஏற்படுகின்றது' என்று ईशानः-என்பதற்கு ஶ்ருதி பரத்வத்தை அப்யுபகமம் செய்துகொண்டு, அந்தப் பலத்தால் அவர் ஜீவனை வ்யாவ்ருத்தி செய்திருப்பதாகத் தெரிகிறது. அப்படிப்பட்ட பலவத்தான ஶ்ருதி பரத்வம் பெற்றிருக்கும் ஈஶாந ஶப்தத்தை ரூடி அர்த்தத்திலிருந்து விலக்கி அதை யௌகிகமாகச் செய்வது உசிதமாகுமா? ஜீவனை வ்யாவ்ருத்தி செய்வதுபோல நாராயணனையும் வ்யாவ்ருத்தி செய்வதாக அதை எடுத்துக் கொள்வதன்றோ உசிதமாகும்?' என்பதுதான்.

இந்த இரண்டு ஆக்ஷேபங்களுக்கும் ஸித்தாந்திகள் சொல்லும் ஸமாதாநமாவது:—முதலில், 'ஈஶாந' என்னும் பதம் யோகார்த்தத்தாலேயே இவ்விடத்தில் ப்ரயோகம் செய்யப்பட்டிருக்கின்றது என்பது, அதன் கர்மாவைப் போதிப்பிக்கும் भूतभव्यस्य-என்று இவ்விடத்தில் உபாதாநம் செய்யப்பட்டிருக்கும் பதத்திலிருந்து விளங்குகின்றது. 'ஈஶாந' என்னும் பதத்திற்குப் பசுபதி என்பது பொருளானால், 'பூதப்வ்யத்திற்குப் பசுபதி' என்று அநந்விதமாக நிற்கும். அந்தப் பதத்திற்கு ஈஶித்ருத்வம் பொருளாகும் பக்ஷத்தில் 'எவைகளுக்கு ஈஶிதா?' என்று ஆகாங்க்ஷை ஜநிக்க, 'பூத பவ்யத்திற்கு ஈஶிதா' என்பது ஸங்கதமாகுமன்றோ? ஆகையால், இவ்விடத்தில் 'ஈஶாந' ஶப்தத்திற்கு ரூட்யர்த்தமான 'பஶுபதி' என்னும் அர்த்தத்தை உபஸ்தாபநம் செய்வதில் யோக்யதை இல்லை. இம்மாதிரி, யோகரூடிமத்துக்களாயிருக்கும் ஶப்தங்களுக்கு யோகார்த்தத்துடன் அந்விதமான பதாந்தரங்களுடைய ஸமபிவ்யாஹாரம் இருக்கும் இடங்களில் ரூட்யர்த்தத்தை உபஸ்தாபநம் செய்ய யோக்யதை இல்லையென்றும், அந்தமாதிரி பதாந்தர ஸமபிவ்யாஹார மிராமலிருக்கும் இடங்களில் ரூட்யர்த்தத்தை உபஸ்தாபநம் செய்வதற்கு அவைகளுக்கு யோக்யதை உண்டென்றும் மஹாகவி ப்ரயோகங்களிலிருந்தும் ஏற்படும்.

"पद्मानि यस्याग्रसरोरुहाणि प्रबोधयत्यूर्ध्वमुखैर्मयूखैः"

என்னுமிடத்தில், 'ஸரோருஹ' பதத்திற்குப் 'பத்மம்' என்னும் ரூடியான அர்த்தம் இருக்கையிலும், இவ்விடத்தில் 'பத்ம' என்னும் பதத்துடன் ஸமபிவ்யாஹாரம் இருக்கிறபடியால், அது 'பத்மம்' என்னும் அர்த்தத்தைப் போதியாமல் கேவலம் 'ஸரஸ்ஸில் முளைத்திருக்கும்' என்னும் யௌகிகார்த்தத்தையே போதிப்பிக்கின்றதன்றோ? இப்படி 'ஈஶாந' என்

अङ्गुष्ठमात्रः पुरुषो ज्योतिरिवाधूमकः ।
ईशानो भूतभव्यस्य स एवाद्य स उ श्वः ॥ एतद्वै तत् ॥ १३ ॥

னும் பதம் இவ்விடத்தில் ரூட்யர்த்தத்தை உபஸ்தாபநம் செய்வதில் அக்ஷமமாகப் போய்விட்டபடியால், அதற்கு ப்ருதித்வமும் இல்லையென்றே சொல்லவேண்டும். ஸ்ரீ வ்யாஸ ஸூத்ரத்தில் இருக்கும் 'சப்தாதேவ' என்னும் பதம் 'ஈசாந' ஶப்த ரூப ப்ருதியைக் குறிக்கவில்லை; 'பூதபவ்யஸ்ய ஈசாந:' என்னும் வாக்யத்தையே குறிக்கின்றது. 'ஶப்தாதேவ' என்பதிலுள்ள அவதாரணத்தின் தாத்பர்யமாவது: லிங்கத்தைக் காட்டிலும் வாக்யம் துர்ப்பலமாயிருந்தபோதிலும் ப்ரக்ருதத்தில் அங்குஷ்ட பரிமிதத்வம் ஜீவாத்ம பரமாத்மாக்கள் இரண்டுக்கும் பொதுவாயிருக்கிறபடியால் அது அர்த்தத்தை நிர்ணயிக்கப் போதாதாகிறபடியால், 'ஈசாநோ பூதபவ்யஸ்ய' என்னும் வாக்யத்திலிருந்தே அந்த இருவர்களுடைய அந்யதர நிர்ணயம் ஏற்படவேண்டுமென்பதுதான்.

"तद्विष्णोः परमं पदम्" என்னுமிடத்தில் 'விஷ்ணோ:' என்னும் பதத்திற்கு 'விஷ்ணு அபேக்ஷயா உத்க்ருஷ்டமானது பஶுபதி என்று பெயருள்ள பரமமான வஸ்து' என்று பொருள் கொள்வது சரியன்று. "तद्विष्णोः परमं पदं सदा पश्यन्ति सूरयः" என்னும் தைத்திரீய உபநிஷத் வாக்யம் இதனால் ப்ரத்யபிஜ்ஞாபிக்கப்படுகின்றதன்றோ? அப்படி நித்ய ஸூரிகளால் எப்பொழுதும் பார்க்கப்படும் ஸ்தாநமானது வைஷ்ணவ ஸ்தாநமே என்பதை

"एकान्तिनः सदा ब्रह्मध्यायिनो योगिनो हि ये ।
तेषां तत्परमं स्थानं यद्वै पश्यन्ति सूरयः ॥"

என்கிற ஸ்ரீ விஷ்ணு புராண வாக்யம் உபப்ருஹ்மணம் செய்கின்றதாகையால், ப்ரக்ருதத்தில் விஷ்ணு ஸம்பந்தி ஸ்தாந விஶேஷமே ப்ரதிபாதிக்கப்படுகின்றது என்பது ஸித்தம்.

---

13. அந்தப் பரமாத்மாவின் ஜ்யோதிஸ்ஸானது அந்யாத்ருஶம் என்பதை இந்த மந்த்ரம் சொல்லுகின்றது.

[ப - ரை] **भूतभव्यस्य ईशानः अंगुष्ठमात्रः पुरुषः** - காலத்ரய வர்த்தியான ஸகல சேதநா சேதநங்களுக்கும் ஈஶ்வரனாயும் அங்குஷ்ட பரிமாணமுள்ளவனாயுமிருக்கும் அந்தப் புருஷன், **अधूमकः** - புகையற்றிருக்கும், **ज्योतिरिव [प्रकाशते]** - ஜ்யோதிஸ் போல [ப்ரகாசிக்கின்றான்]. **अद्य** - இப்பொழுது [இருக்கும் பதார்த்தங்களெல்லாம்], **स एव** - அவனையே ஆத்மாவாக உடைத்தாயிருக்கின்றன; **श्वः** - நாளை [இருக்கப்போகும் பதார்த்தங்களும்], **स उ** - அவனையே ஆத்மாவாக உடையன **एतद्वै तत्** - [கீழ்ச் சொல்லப்பட்டுள்ள பொருளையே இதற்கும் கொள்க.]

**यथोदकं दुर्गे वृष्टं पर्वतेषु विधावति ।**
**एवं धर्मान् पृथक् पश्यंस्तानेवानु विधावति ॥ १४ ॥**
**यथोदकं शुद्धे शुद्धमासिक्तं तादृगेव भवति ।**

---

14. ஜகத்திலுள்ள சேதநா சேதந வஸ்துக்களெல்லாம் பரமாத்மாவையே தமது ஆத்மாவாக உடைத்தா யிருக்கின்றன என்னும் விஷயம் பலவாருக இந்த வல்லியில் விளக்கப்பட்டது. இப்படி ஸர்வமும் ப்ரஹ்ம மொன்றையே ஆத்மாவாக உடைத்தா யிருக்கின்றது என்னும் ஜ்ஞாநத்தைப் பெருமல், ஒவ்வொரு வஸ்துவும் வெவ்வேறு அதிகரணங்களை உடைத்தா யிருக்கின்றது என்று ப்ரமித்திருப்பவன் அம்ருதத்வத்தை அடையாமல் ஸம்ஸாரத்திலேயே உழல்கிருன் என்று இவ்விடத்தில் உபதேஶிக்கிருர்.

[ப - ரை] **यथा** - எப்படி, **दुर्गे** - ஸுலபமாகக் போகக்கூடாத [மலையின் ஶிகரத்தில்], **वृष्टम्** - வர்ஷிக்கப்பட்ட, **उदकम्** - ஜலமானது, **पर्वतेषु** - [தாழ்ந்து சுற்றியிருக்கும்] மலைகளில், **विधावति** - வெவ்வேருக விழுந்து விழுந்து ஒடுகின்றதோ, **एवम्** - அப்படியே, **धर्मान्** - [பரமாத்மாவொன்றையே ஆஶ்ரயித்து நிற்கும் அந்தர்யாமித்வ] தர்மங்களை, **पृथक्** - வெவ்வேருக இருக்கும் வஸ்துக்களின் தர்மங்களாக, **पश्यन्** - பார்க்கிறவன், **तानेव अनु** - அந்தப் பர்வத அருவிகளையே அநுஸரித்து [அதாவது: அந்த அருவிகள் போலவே], **विधावति** - [அஜ்ஞாநத்தால் மூடப்பட்டவனுய் ஸம்ஸாரத்திலேயே] சுற்றிச் சுற்றி உழல்கிருன்.

தேவ மநுஷ்ய திர்யக் ஸ்தாவரங்களாகிற நான்குவித ஸ்ருஷ்டியும் ப்ரத்யந்த பர்வதங்கள்போல; பரமாத்மா உயர்ந்த பர்வத ஶிகரம் போல; அந்தப் பரமாத்ம கதமான அந்தர்யாமித்வ தர்மம் மழை ஜலம் போல; தேவன் முதலிய ஸ்ருஷ்டிகளில் ப்ரவஹிக்கும் அந்த அந்தர்யாமித்வ தர்மம் ப்ரத்யந்த பர்வதங்களில் ப்ரவஹிக்கும் அருவிகள்போல; பரமாத்மா ஒருவனே எல்லா வஸ்துக்களிலும் அந்தர்யாமியாக இருக்கிருன் என்பதை அறியாதவன் உயர்ந்த பர்வதத்தை அறியாமல் சுற்றுப் பர்வதங்களில் விழும் ஜலத்தை வெவ்வேறு உத்பத்தியை யுடையதாக ப்ரமிப்பவன் போல.

---

15. வஸ்து ஸ்திதியைச் சரியானபடி அறிந்தவனுடைய நற்கதியைச் சொல்லுகிறது இந்த மந்த்ரம்.

[ப - ரை] **गौतम** - ஹே கௌதமனே, **यथा** எப்படி, **शुद्धे** - சுத்த ஜலத்தில், **आसिक्तम्** - சேர்க்கப்பட்ட, **शुद्धमुदकम्** - சுத்தமான ஜலமானது, **तादृगेव भवति** - அதற்கு ஸத்ருஶமாகவே இருக்கிறதோ [விஸத்ருஶமாக மாறுகிறதில்லையோ], **एवम्**-அப்படியே, **विजानतः** - வஸ்து ஸ்திதியை

एवं मुनेर्विजानत आत्मा भवति गौतम ॥ १५ ॥

உள்ளபடி அறிந்திருக்கும், **मुनेः** - மநந ஶீலனுகிற ப்ரஹ்மவித்துடைய, **आत्मा** - ஆத்மாவானது, **भवति** - [விஶுத்தமான பரமாத்மாவுக்கு ஸமாநமாகவே] ஆகின்றது.

சுத்தமான ஜலத்துடன் சுத்தமான ஜலம் சேர்ந்து பரமஸாம்யத்தை அடைவதுபோல, ப்ரஹ்மவித்தின் சுத்தமான ஆத்மா ஶுத்தமான பரமாத்மாவுடன் சேர்ந்து அதனுடன் பரமமான ஸாம்யத்தைப் பெற்றுத் தானும் ஶுத்தமாக நிற்கின்றது. 'ஹே கௌதம!' என்னும் ஸம்போதநம், ப்ராப்யமான பரம ஸாம்யத்தின் வைபவத்தை நினைத்து ஸந்தோஷத்தால் ப்ரவஹித்தபடி.

இரண்டாவது அத்யாயத்தில் முதல் வல்லி முற்றிற்று.

---

॥ इति द्वितीयाध्याये प्रथमवल्ली ॥



श्रीः

# ॥ द्वितीयाध्याये द्वितीयवल्ली ॥

हरिः ओम् ॥

पुरमेकादशद्वारमजस्यावक्रचेतसः ।
अनुष्ठाय न शोचति विमुक्तश्च विमुच्यते ॥ एतद्वै तत् ॥ १

ஸ்ரீ:

## இரண்டாவது அத்யாயம்—இரண்டாவது வல்லி

மேலே சொல்லப்பட்ட விஷயமே இந்த வல்லியில் ப்ரபஞ்சிக்கப் படுகின்றது. ஒரே ஆத்மா ஸகல சேதநாசேதந வஸ்துக்களுக்கும் அந்தராத்மாவாக இருந்துகொண்டிருக்கிறது என்பது மிகவும் துர்ப்போதமன்றோ ?

1. இந்த மந்த்ரத்தில் முக்தாத்ம ஸ்வரூபமும் பரமாத்மாவையே ஆத்மாவாக உடைத்தாயிருக்கிறது என்பது விஷயம். பத்ததசையில் ஆத்மா இருக்கும் ஶரீரத்தை ஒரு பத்தநமாகவும் அதிலுள்ள ஆத்மாவை அதன் ஈஶ்வரனாகவும் பேசி அவனால் அது நன்றாக அறியப் படத்தக்கது என்பதை நிரூபிக்கிறார்.

[ப - ரை.] **अजस्य** - பிறப்பற்றும், **अवक्रचेतसः** - ருஜுவான புத்தியை உடையதுமான [விவேகியான], [**आत्मनः**- ஆத்மாவுக்கு], **एकादशद्वारम्** - பதினொரு த்வாரங்களை யுடைய [ஶரீரமானது], **पुरम्** பத்தநமாகிறது [அதாவது: பத்தநத்தின் ஸொந்தக்காரனுக்கு அந்தப் பத்தநம் எப்படி நன்றாக விவேசித்து அறியப்படவேண்டியதோ, அப்படியே ஆத்மாவுக்கு இந்த ஶரீரம் விவேசித்து அறியப் படத்தகுந்தது]. **अनुष्ठाय** - அப்படி அறிந்து, **न शोचति** - துக்கிக்கிறானில்லை [அதாவது: தேஹாநுபந்தியான காம க்ரோதாதிகளாலே விடப்பட்டவனாகிறான்]. **विमुक्तश्च** - [அப்படி காம க்ரோதாதிகளால்] விடப்பட்டவனாய்க் கொண்டு, **विमुच्यते** - [ப்ராரப்த கர்மாநுபவத்தின் முடிவில் ப்ரக்ருதி ஸம்பந்தத்திலிருந்து] விடப்பட்டு முக்தனாகிறான். **एतत्** - இந்த மந்த்ரத்தில் ப்ரதிபாதிக்கப்படும் முக்தாத்ம ஸ்வரூபமும், **तद्वै** - அந்தப் பரமாத்மாவையே ஆத்மாவாக உடையது.

**एकादशद्वारम्** - பதினொரு த்வாரங்களாவன :- தலையில் ஏழு த்வாரங்கள் ; நாபியுடன்கூடக் கீழ் நோக்கிய த்வாரங்கள் மூன்று ; ஶிரஸ்ஸில் ஊர்த்வ முகமானது ஒன்று ; ஆகப் பதினொன்று. ஒரு பத்தநத்திற்கு எப்படிக் கோட்டை வாசல்கள், அந்த வாசல்களைக் காப்பாற்றுபவர்கள், அவை யெல்லாவற்றுக்கும் அதிஷ்டாதா - ஆக இம்மாதிரி பல உபகரண

हं॰सश्शुचिषद्वसुरन्तरिक्षसद्धोता वेदिषदतिथिर्दुरोणसत् ।
नृषद्वरसदृतसद्व्योमसदब्जा गोजा ऋतजा अद्रिजा ऋतं बृहत् ॥ २

ஸம்பத்திகள் உண்டோ, அப்படியே பல உபகரணங்களால் ஸம்பந்நமாக நமது ஶரீரம் இருக்கிறபடியால், இந்த ஶரீரம் ஒரு பத்தநத்திற்கு ஸமாநமாகப் பேசப்படுகின்றது. அந்த ஶரீரத்தின் ஸ்வரூபத்திற்கும் தனக்குமுள்ள விஶேஷத்தை அறிந்து அவன் விமோசநத்தை அடைகிறான் என்பது கருத்து.

---

2. முக்தாத்ம ஸ்வரூபம் மாத்ரம் பகவானுக்கு ஶரீரமென்பது இல்லை; ஜகத்தில் தென்படும் ஸகல பதார்த்தங்களும் அவனுக்கு ஶரீரம் என்பது இந்த மந்த்ரத்தில் விவரிக்கப்படுகின்றது.

[ப - ரை.] **शुचिषत्** - க்ரீஷ்ம ருதுவில் இருக்கும்படியான [அதாவது : தேஜஸ்வியாக இருக்கும்], **हं॰सः** - ஸூர்யனும், **अन्तरिक्षसत्** - ஆகாஶத்தில் இருக்கும், **वसुः** - வாயுவும், **वेदिषत्** - யஜ்ஞஶாலையில் இருக்கும், **होता** - ருத்விக்கும், **दुरोणसत्** - க்ருஹத்திற்கு வந்திருக்கும், **अतिथिः** - அதிதியும், **नृषत्** - மநுஷ்யர்களுக்குள் இருக்கும் [ப்ரத்யகாத்மாவும்], **वरसत्** - தேவர்களுக்குள் இருக்கும் [ப்ரத்யகாத்மாவும்], **ऋतसत्** - ஸத்ய லோகத்தில் இருக்கும் [ப்ரதயகாத்மாவும்], **व्योमसत्** - பரமபதத்தில் இருக்கும் [ப்ரத்யக்தத்வமும்], **अब्जाः** - ஜலத்தில் உண்டாகும் ஜந்துக்களும், **गोजाः** - பூமியில் ஜநிக்கும் ஜந்துக்களும், **ऋतजाः** - யஜ்ஞங்களாகிற கர்மங்களின் பலமாக உண்டாகும் ஸ்வர்க்கம் முதலியவைகளும் [அதாவது : ஸ்வர்க்க லோகத்தில் இருக்கும் ஜீவன்களும்], **अद्रिजाः** - மலைகளில் ஜநிக்கும் ஜந்துக்களும், [இவையெல்லாம்] **बृहत्** - பெரிதான [அதாவது : அளவற்றதான], **ऋतम्** - ஸத்யரூபமான ப்ரஹ்மத்தையே ஆத்மாவாக உடையவை.

**हंसः** - ஸூர்யன், **हन्ति=गच्छति** [போகிறான்] **इति हंसः** - எப்பொழுதும் போய்க் கொண்டிருக்கிறபடியால் ஸூர்யன் ஹம்ஸனென்று அழைக்கப்படுகிறான். '**शुचि**' என்பது க்ரீஷ்ம ருதுவுக்குப் பெயர். இந்தப் பதங்களெல்லாவற்றிலும் தென்படும் '**सत्**' என்பதன் வ்யுத்பத்தியானது ''**सीदति-वर्तते** [இருக்கிறான்] **इति सत्**' என்பது தான்.

**वसुः—वासयति सर्वान् वाय्वात्मना** [வாயுவாக இருந்துகொண்டு எல்லாரையும் வஸிக்கும்படி செய்கிறான்.]

**ऋतजाः** - இதற்கு மற்றுமொரு விதமாகப் பொருள் சொல்வார்கள். யஜ்ஞத்தில் உண்டாகும் ஜந்துக்கள் என்று பொருள்படுத்துவது உபபந்நமாகமாட்டாதாகையால், எது எது பஹுகாலம் ஸ்தாயியாக இருக்கிறதோ அதது 'ருதம்' என்பதைப் பொருளாக எடுத்துக்கொண்டு ஆகாசம் சிரகால ஸ்தாயியானதால் அதை 'ருதம்' என்று

ऊर्ध्वं प्राणमुन्नयत्यपानं प्रत्यगस्यति ।
मध्ये वामनमासीनं विश्वेदेवा उपासते ॥ ३

अस्य विस्रंसमानस्य शरीरस्थस्य देहिनः ।
देहाद्विमुच्यमानस्य किमत्र परिशिष्यते ॥ एतद्वै तत् ॥ ४

---

சொல்லி, 'ऋतजाः' என்பதற்கு 'ஆகாயத்தில் உண்டாகும் ஜந்துக்கள்' என்று பொருள்படுத்தக்கூடும்.

---

3. கீழ் உதாஹரிக்கப்பட்ட வஸ்துக்கள் ப்ரபஞ்சத்திலுள்ள ஸகல வஸ்துக்களுக்கும் உபலக்ஷணம். அப்படி ஸகல வஸ்துக்களிடத்திலும் பரமாத்மா ஆத்மாவாக இருக்கிறான் என்பதற்குச் சிற்சில லிங்கங்கள் சொல்லப்படுகின்றன.

[ப - ரை.] [எல்லாருடைய ஹ்ருதயத்தில் இருக்கும் பரமாத்மா] **प्राणम्** - ப்ராண வாயுவை, **ऊर्ध्वम्** - மேல் முகமாக, **उन्नयति** - உயரச் செலுத்துகிறான்; **अपानम्** - அபாநமென்று சொல்லப்படும் மற்றொரு வாயுவை, **प्रत्यक्** - கீழ்முகமாக, **अस्यति** - தள்ளுகிறான். [இவ்வாறு வ்யாபாரங்களைச் செய்துகொண்டு] **मध्ये** - நடுவில் [அதாவது: ஹ்ருதயத்தின் நடுவில்], **आसीनम्** - இருக்கும், **वामनम्** - [எல்லாராலும்] பூஜிக்கத் தகுந்தவனை [அந்தப் பரமாத்மாவை], **विश्वेदेवाः** - ஸத்வ ப்ரக்ருதியாயிருக்கும் எல்லா ஜநங்களும், **उपासते** - உபாஸிக்கிறார்கள்.

தேஹத்தில் ஸஞ்சரிக்கும் வாயுவானது ஜடமான வஸ்து; ஸ்வயமாக ஒரு வ்யாபாரத்தைச் செய்வதற்கு அஶக்தம். ஆகையால் ஸ்வதந்த்ரனை ஒரு சேதநன் அதை அதிஷ்டாநம் செய்துகொண்டு அதை அந்த வ்யாபாரங்களில் ப்ரவர்த்திப்பிக்கவேண்டும். அந்த ஸ்வதந்த்ர சேதநன் எல்லாருடைய ஹ்ருதயத்தில் இருக்கும் பரமாத்மாவே. ஸாத்விகர்களே அவனை அறிந்து உபாஸிக்கிறார்கள்.

**वामनम्** - இதற்கு 'ஹ்ரஸ்வமான ஆக்ருதியை உடையவன்' என்றும் பொருள் கூறலாம். அங்குஷ்டமாத்ரனாக ஹ்ருதயத்தில் வஸிக்கிறப்டியால், அவனை 'வாமநன்' என்று பேசக்கூடுமன்றோ?

---

4. அப்படி அதிஷ்டாநம் செய்துகொண்டிருக்கும் பரமாத்மாவை உபாஸிக்கும் ஸாத்விகனுக்கு, ஶரீரம் த்ருடமாக இருக்கும் பொழுதோ, ஶரீரம் தளரும்பொழுதோ, ஶரீரம் போன பிறகோ, ஒரு பொழுதும் வேறு கர்த்தவ்யமான விஷயமொன்றுமில்லை என்று இந்த மந்த்ரத்தில் சொல்லுகிறார்.

[ப - ரை] **अस्य देहिनः** - இந்த உபாஸகனுக்கு, **विस्रंसमानस्य** - தளர்ச்சியை அடையும் தேஹத்தை உடைத்தாயிருக்கும் பொழுதோ,

न प्राणेन नापानेन मर्त्यो जीवति कश्चन ।
इतरेण तु जीवन्ति यस्मिन्नेतावुपाश्रितौ ॥ ५

हन्त त इदं प्रवक्ष्यामि गुह्यं ब्रह्म सनातनम् ।
यथा च मरणं प्राप्य आत्मा भवति गौतम ॥ ६

---

**शरीरस्थस्य च**-ஶரீரத்தில் தார்ட்யம் இருக்கும் பொழுதோ, **देहात्**-தேஹத்திலிருந்து, **विमुच्यमानस्य** - விடப்பட்டு மரணம் அடையும் பொழுதோ, **अत्र** - இவ்விடத்தில், **किम्** - என்ன, **परिशिष्यते** - [செய்யப்படவேண்டியதாக] விஞ்சி நிற்கிறது? [அவனுற் செய்யப்படவேண்டியதாக வேறு ஒன்றும் அவஶிஷ்டமாக இல்லை என்பது தாத்பர்யம். அத்ாவது:-பரமாத்மாவைச் சரிவர உபாஸிக்கிறவனுக்கு ஸ்வரூபாவிர்ப்பாவம் கிடைக்க, ஶரீரம் இருக்கும் காலம் பர்யந்தம் விளம்பமே தவிர்த்து, வேறு அவன் செய்யவேண்டுவதான கார்ய மொன்றுமில்லை] **एतद्वै तत्** - இந்த உபாஸகனுடைய ஸ்வரூபம் அந்தப் பரமாத்மாவையே ஆத்மாவாக உடையது.

---

5. 'ஸர்வ ப்ராணிகளும் அந்தப் பரமாத்மாவின் பலத்தாலேயே ஜீவிக்கின்றன; அவனே எல்லாருடைய ப்ராணநத்திற்கும் ஹேது' என்பது இதில் சொல்லப்படுகிறது.

[ப - ரை] **कश्चन मर्त्यः**- ஒரு மநுஷ்யனும், **प्राणेन न जीवति** - ப்ராணனுல் ஜீவித்திருக்கவில்லை; **नापानेन** - அபாநத்தாலும் ஜீவித்திருக்கவில்லை; **तु** - ஆனல், **यस्मिन्** - எவனிடத்தில் [எந்தப் பரமாத்மாவினிடத்தில்], **एतौ**-இவை இரண்டும் [ப்ராணம் அபாநம் ஆகிய இவை இரண்டும்], **उपाश्रितौ** - ஆஶ்ரயித்து நிற்கின்றனவோ, **[तेन] इतरेण** - அந்த மற்றொருவனுலேயே, **जीवन्ति** - [எல்லா மநுஷ்யர்களும்] ஜீவித்திருக்கிறூர்கள்.

ப்ராணாபாநங்கள் முதலியவைகளுடைய ஜீவிதம் எந்தப் பரமாத்மாவைச் சார்ந்து நிற்கின்றதோ, அந்தப் பரமாத்மாவையே சார்ந்து நிற்கின்றது எல்லாருடைய ஜீவிதமும் என்பது கருத்து.

---

6. இந்த மந்த்ரத்தில் தாம் மேற்கொண்டு சொல்லப் போகும் விஷயத்தில் ஶிஷ்யனை அபிமுகமாகச் செய்துகொள்ளும் பொருட்டு ப்ரரோசகமாகச் சில வார்த்தைகளைச் சொல்லுகிறூர்.

[ப - ரை.] **हे गौतम** - ஹே கௌதமனே! **आत्मा** - ஆத்மாவானது, **मरणं प्राप्य** - மரணத்தை அடைந்த பிறகு [அதாவது: தேஹத்தை விட்ட பிறகு. இந்த விடத்தில், '**येयं प्रेते**' - முதல் வல்லி 20-வது மந்த்ரம், என்னுமிடத்திற் போல, மரணம் என்னும் பதம் கடைசி தேஹம் போவதைக் குறிக்கின்றது என்பது, ஆசார்யர்களின் நிர்வாஹம்].

योनिमन्ये प्रपद्यन्ते शरीरत्वाय देहिनः ।
स्थाणुमन्येऽनुसंयन्ति यथाकर्म यथाश्रुतम् ॥ ७

य एषु सुप्तेषु जागर्ति कामङ्कामं पुरुषो निर्मिमाणः ।
तदेव शुक्रं तद्ब्रह्म तदेवामृतमुच्यते ।
तस्मिन् लोकाः श्रितास्सर्वे तदु नात्येति कश्चन ॥ एतद्वै तत् ॥ ८

---

**यथा भवति** - எப்படி ஆகிறான் [அதாவது: என்ன ப்ரகாரங்களுடன் கூடினவனாக ஆகிறான்], [**इति** - என்னும்], **इदं गुह्यं सनातनं ब्रह्म** - ரஹஸ்யமாயும் ஶாஶ்வதமாயும் இருக்கும் ஸ்வரூபத்தை, **ते**-உனக்கு, **प्रवक्ष्यामि** - சொல்லுகிறேன். **हन्त** - அஹோ! ஆஶ்சர்யம்.

---

7. கடைசிதேஹம்போன பிறகு முக்தன் எப்படி ஆகிறான் என்பதை உபதேஶிக்கப் போகிறவராய், முதலில், மரணமடைந்தவுடன் ப்ரஜைகள் தங்கள் தங்கள் ஜ்ஞானத்திற்கும் தாம்தாம் அநுஷ்டித்த கர்மங்களுக்கும் தக்கவாறு ஜந்மங்களை அடைகிறார்கள் என்று சொல்லுகிறார்.

[ப - ரை] **अन्ये** - சில, **देहिनः** - ப்ரஜைகள் [பரமாத்ம தத்வத்தை அறியாத சிலர்], **शरीरत्वाय** - ஶரீரத்தைப் பெறுவதற்காக, **योनिम्** - யோநி த்வாரத்தை, **प्रपद्यन्ते** - ப்ரவேஶிக்கிறார்கள். **अन्ये** - மற்றும் சிலர், **यथाकर्म** - தங்கள் தங்கள் கர்மங்களுக்குத் தக்கவாறும், **यथाश्रुतम्** - தங்கள் தங்கள் ஜ்ஞானத்திற்குத் தக்கவாறும், **स्थाणुम्** - ஸ்தாவரத்தன்மையை, **अनुसंयन्ति** - அடைகிறார்கள்.

---

8. 'பகவானுடைய ஸங்கல்பத்திற்கு அநுகுணமாக ஜகத்ஸ்ருஷ்டி ஏற்படுகின்றது; எல்லாம் அவனையே ஆஶ்ரயித்து நிற்கின்றது; ஒருவரும் அவனுடைய ஸங்கல்பத்தை அதிக்ரமிக்க மாட்டார்' என்று இதில் சொல்லப்படுகின்றது. அதாவது: அவன் ஒருவனே எல்லாவற்றுக்கும் அந்தராத்மாவாக இருந்து கொண்டு எல்லாரையும் நியமித்துக் கொண்டிருக்கிறான் என்பது கருத்து.

[ப - ரை] **एषु** - இவையெல்லாம் [இந்த ப்ராணிகளெல்லாம்], **सुप्तेषु** - தூங்கிக்கொண்டிருக்கும் பொழுது, **यः पुरुषः** - எந்தப் புருஷன், **कामङ्कामम्**- திரும்பத் திரும்ப ஸங்கல்பித்துக்கொண்டு, **जागर्ति**-விழித்திருக்கிறானோ, **तदेव** - அதுவே [அவனே], **शुक्रम्** - ப்ரகாஶமானது [ஸ்வயம் ப்ரகாஶமானது]: **तत् [एव] ब्रह्म** - அதுதான் ப்ரஹ்மம்; **तदेवामृतम्** - அதுதான் அம்ருதம் (என்று) **उच्यते** - சொல்லப்படுகிறது; **तस्मिन्** - அதனிடத்தில்தான், **सर्वे लोकाः**-எல்லா லோகங்களும், **श्रिताः**- ஆஶ்ரயித்து நிற்கின்றன; **तत्** - அதை, **कश्चन** - ஒருவனும், **नात्यति** - மீறமாட்டான். **तत्** என்பதுச் சாந்தஸம்; **तम्** என்று இருத்தல் வேண்டும். **एतद्वै तत्**

अग्निर्यथैको भुवनं प्रविष्टो रूपं रूपं प्रतिरूपो बभूव ।
एकस्तथा सर्वभूतान्तरात्मा रूपं रूपं प्रतिरूपो बहिश्च ॥ ९

**कामं कामम्** - இது ஒரு அப்யஸம்; **कामयित्वा कामयित्वा** என்பது இதன் விரிவு. **स्मारं स्मारं** என்பதுபோல.

ஸ்வப்நத்தில் காணப்படும் வஸ்துக்களின் ஸ்ருஷ்டி ஜீவாத்மாவாலேயே செய்யப்படுகின்றது என்று வாதிக்கும் சிலர் இந்த வாக்யத்தைத் தங்களுடைய மதத்திற்கு அநுகூலமென்று உதாஹரிக்கிறார்கள். அவர்கள், '**काम**'-என்னும் பதம் காமிக்கப்படும் புத்ர மித்ர களத்ராதிகளை நிர்த்தேசிக்கின்றது என்று அர்த்தம் சொல்லி, அப்படிப்புத்ராதிகளின் இச்சை ஜீவாத்மாவுக்கே ஸம்பாவித மாகையால் ஜீவாத்ம பரமே இந்த வாக்யம் என்று வாதிக்கிறார்கள். பின்வரும் '**तदेव शुक्रम्**' - இத்யாதியான வாக்யம் பரமாத்மாவுக்கே அந்வயிக்குமாதலால் **कामम्** - என்பதற்கு அம்மாதிரி பொருள் கொள்வது உபபந்நமாகமாட்டாது.

**तदेव अमृतम्** - அதுதான் அம்ருதம். ஸ்ரீவைகுண்டத்திலிருக்கும் நித்யர்களுக்கும் முக்தர்களுக்கும் அம்ருதத்வம் இருக்கையிலும், அவர்களுக்கு நிருபாதிகமான அம்ருதத்வமில்லையாதலால், ப்ரஹ்மமொன்றே அம்ருதமென்று இவ்விடத்திற் சொல்லப்படுகிறது. ப்ரஹ்மத்தின் அம்ருதத்வம் நிருபாதிகம்; [மற்ற எதையும் சார்ந்தது அன்று]. இவ்விடத்திலுள்ள அம்ருதம் என்னும் பதத்திற்கு, 'நிருபாதிகமான அம்ருதம்' என்பதே பொருள்.

---

9. ஒரே ஆத்மா எல்லா வஸ்துக்களுக்கும் அந்தராத்மாவாக இருக்கின்றது என்பது பலதடவை சொல்லப்பட்டிருந்த போதிலும், அது அந்ருஜுவான புத்தியை யுடையவர்களின் மநஸ்ஸில் ப்ரவேசியாமல் இருக்கின்றதாதலால், அதிமாத்ரம் ஆதரவை யுடைய ஶ்ருதி அதை த்ருடமாக மறுபடியும் த்ருஷ்டாந்த பூர்வகமாக உபதேசிக்க ஆரம்பிக்கின்றது. ப்ருதிவீ அப் தேஜஸ் முதலான பூதங்களுள் தேஜஸ் என்னும் பூதம் இவ்விடத்தில் த்ருஷ்டாந்தமாகச் சொல்லப்படுகின்றது. இந்த லோகத்தில் தென்படும் ப்ருதிவீ முதலியவை கேவலம் அந்தந்தப் பூதம் மாத்ரமல்ல; ஒவ்வொன்றிலும் மற்றைப் பூதங்களும் இருக்கின்றன. ஆனால், அந்தப் பூதங்கள் ஸ்வல்ப பாகமே. அதாவது: ப்ருதிவீயாகத் தென்படும் பூதத்தில் ப்ருதிவீ அம்ஶம் பெரும்பாகமாகவும், மற்றை அப் முதலிய அம்ஶங்கள் ஸ்வல்பமாகவும் இருக்கின்றன. முதல் முதலில் பகவான் பூதங்களை ஸூக்ஷ்மமாக ஸ்ருஷ்டித்துப் பிறகு இந்த அண்டங்களை ஸ்ருஷ்டிப்பதற்காக அந்தப் பூதங்களைக் கீழ்க்கூறியவாறு கலக்கிறான். இதை 'த்ரிவ்ருத்கரணம்' என்று சொல்வார்கள். ஆகையால் இந்த அண்டத்திற்கு உட்பட்டிருக்கும் வஸ்து ஒவ்வொன்றிலும் எல்லாப் பூதங்களும் இருக்கின்றனவென்று

वायुर्यथैको भुवनं प्रविष्टो रूपं रूपं प्रतिरूपो बभूव ।
एकस्तथा सर्वभूतान्तरात्मा रूपं रूपं प्रतिरूपो बहिश्च ॥ १०

सूर्यो यथा सर्वलोकस्य चक्षुर्न लिप्यते चाक्षुषैर्बाह्यदोषैः ।
एकस्तथा सर्वभूतान्तरात्मा न लिप्यते लोकदुःखेन बाह्यः ॥ ११

---

நாம் அறியவேண்டும். இவ்விடத்தில் சொல்லப்படும் த்ருஷ்டாந்தமாவது: தேஜஸ் என்னும் தத்வம் ஒன்றுக இருக்கையிலும் அது அண்டாந்தர்க்கதமான வஸ்துக்கள் முழுவதிலும் புகுந்து எப்படி ஒவ்வொரு ரூபத்திலும் ப்ரதிஸங்க்ராந்தமாக இருக்கின்றதோ, அப்படியே பரமாத்மா ஒருவனுக இருக்கையிலும் ஒவ்வொரு வஸ்துவிலும் ப்ரதிஸங்க்ராந்தமான அந்தர்யாமி விக்ரஹத்தைக்கொண்டு உள்ளிலும் இருக்கிருன்; வெளி வ்யாப்திக்கும் குறைவில்லை என்பதுதான்.

[ப - ரை.] **यथा**-எப்படி, **एकः** - ஒன்றுக இருக்கும், **अग्निः**-தேஜோதாதுவானது, **भुवनम्**- அண்டாந்தர்வர்த்தியான லோகத்தில், **प्रविष्टः** - ப்ரவேஶித்ததாய்க்கொண்டு, **रूपं रूपम्** - ஒவ்வொரு ரூபத்திலும், **प्रतिरूपः** - ஸங்க்ரமித்திருக்கும் ரூபத்தையுடைத்தானதாக, **बभूव** -இருக்கின்றதோ, **तथा** - அப்படியே, **एकः** - ஒருவனுன, **सर्वभूतान्तरात्मा** - எல்லா வஸ்துக்களுக்கும் அந்தராத்மாவாக இருக்கும் பகவான், **रूपं रूपम्** - ஒவ்வொரு வஸ்துவிலும், **प्रतिरूपः** - உட்புகுந்துள்ள [அந்தர்யாமி] விக்ரஹத்துடன் கூடினவனுக இருக்கிருன்; **बहिश्च** - வெளியிலும் இருக்கிருன்.

---

10. இதில் வாயு என்னும் தாது த்ருஷ்டாந்தமாகச் சொல்லப்படுகிறது. கீழ் மந்த்ரத்திற்போலவே இதிலும் அந்வயமும் அர்த்தமும். 'அக்நி' என்னும் ஸ்தாநத்தில் 'வாயு' என்பதை நிவேஶிப்பதுதான் விஶேஷம்.

---

11. இப்படிப் பரமாத்மா லோகத்திலுள்ள வஸ்துக்களெல்லாவற்றிலும் புகுந்து நின்றுல், அந்த வஸ்துக்களிடம் ஸம்பந்திக்கும் துக்கஹேதுக்கள் இவனையும் ஸ்பர்ஶிக்கமாட்டாவோ என்னும் ஸந்தேஹத்திற்கு ஸமாதாநமாக ஸூர்யனையும் கண் என்னும் இந்த்ரியத்தையும் த்ருஷ்டாந்தமாக எடுத்துக்கொண்டு, லோக துக்க மொன்றும் அவனை ஸ்பர்ஶிக்கமாட்டாது என்பதை நிரூபிக்கிருர்.

[ப - ரை.] **यथा** - எப்படி, **सूर्यः** - ஸூர்யனுனவன், **सर्वलोकस्य** - எல்லா லோகத்திற்கும், **चक्षुः** - கண்ணுக இருக்கையிலும் [அதாவது: கண்ணுகிய இந்த்ரியத்தில் ப்ரவேஶித்திருக்கையிலும்], **चाक्षुषैः** - அந்தக் கண் இந்த்ரியத்திற்கு உள்ள, **बाह्यदोषैः** - பாஹ்ய தோஷங்களால், **न लिप्यते** - ஸ்பர்ஶிக்கப்படாமல் இருக்கிறதோ, **तथा** - அப்படியே, **एकः** - ஒருவனுன, **सर्वलोकान्तरात्मा** - எல்லா லோகத்திற்கும் அந்தராத்மாவாக இருக்கும் பகவான், **लोकदुःखेन** - லோகத்தில் தென்படும் தோஷங்

**एको वशी सर्वभूतान्तरात्मा एकं बीजं बहुधा यः करोति ।**
**तमात्मस्थं येऽनुपश्यन्ति धीरास्तेषां सुखं शाश्वतन्नेतरेषाम् ॥ १२**

களால், **न लिप्यते** - தொடப்படாமலே இருக்கிறுன். **बाह्यः** - வெளியிலும் வ்யாபித்து நிற்கிறுன்.

ஸூர்யனுக்கும் கண் இந்த்ரியத்துக்கும் ஒருவித ஸம்பந்த முண்டு என்று ஶ்ருதி சொல்லுகின்றது. அந்த ஸம்பந்தமாவது: இந்தக் கண் இந்த்ரியத்தில் ஸூர்யன் ப்ரவேஶித்து நிற்கிறுன் என்பதுதான். "**रश्मिभिरेषोऽस्मिन् प्रतिष्ठितः** - இவன் [இந்த ஸூர்யன்] தனது கிரணங்களால் இதில் [இந்தக் கண் இந்த்ரியத்தில்] ப்ரதிஷ்டிதனுக இருக்கிறுன்" என்பது ஶ்ருதி.

---

12. 'பகவான் நமக்கு அந்தர்யாமியாக இருக்கிறுன் என்னும் உண்மையை எவன் அறிகிறுனே, அறிந்து அவனை எவன் உபாஸிக்கிறுனே அவன்தான் மோக்ஷத்தைப் பெறக்கூடியவன்' என்பது இந்த மந்த்ரத்தால் விவரிக்கப்படுகின்றது.

[ப - ரை.] **यः** - எவன், **एकः** - ஒருவனே [அதாவது: எவனுக்கு ஈடும் எடுப்பும் இல்லையோ], **यः** - எவன், **वशी** - ப்ரபஞ்சம் முழுவதையும் தனது வஶமாக உடைத்தாயிருக்கிறுனே, **यः** - எவன், **सर्वभूतान्तरात्मा** - ஸர்வபூதங்களுக்கும் அந்தராத்மாவோ, **यः** - எவன், **एकं बीजम्** - ஒரே வித்தாக இருக்கும் [தமஸ் என்னும்] தத்வத்தை, **बहुधा** - பஹுவாக [பலவகைப்பட்ட வஸ்துக்களை யுடைய ப்ரபஞ்ச ரூபமாக], **करोति** - செய்கிறுனே, **तम्** - அவனை, **ये** - எந்த, **धीराः** - விவேகிகள், **आत्मस्थम्** - தமக்குள் அந்தர்யாமியாக இருக்கிறுனென்று, **अनुपश्यन्ति** - பார்க்கிறுர்களோ [பார்த்து உபாஸிக்கிறுர்களோ], **तेषाम्** - அவர்களுக்கே, **शाश्वतं सुखम्** - நித்யமான ஆநந்தம்; **इतरेषां न** - மற்றை ஒருவருக்கும் இல்லை.

'**वशी**' - என்பதற்கு 'பக்த வஶ்யன்' என்றும் பொருள் கொள்ளக்கூடும். "**इमौ स्म मुनिशार्दूल किङ्करौ समुपस्थितौ**" - [ஹே மஹர்ஷியே! நாங்கள் இருவரும் உங்களுக்குக் கிங்கரர்களாக நிற்கிறேம்] என்றன்றே ஸ்ரீ சக்ரவர்த்தித் திருமகனுடைய பக்தவஶ்யதை இருக்கிறது?

**एकं बीजम्**-ப்ரளய காலத்தில் ப்ரபஞ்சம் முழுவதும் 'தமஸ்' என்று வ்யவஹரிக்கப்படும் ஒரு அவஸ்தையை அடைந்து பரமனுன தேவனிடத்தில் சேர்ந்து நிற்கிறதென்று ஶ்ருதியில் சொல்லப்படுகிறது. மறுபடியும் ஸ்ருஷ்டியைச் செய்வதாகப் பகவான் ஸங்கல்பிக்கும்பொழுது அவனுடைய ஸங்கல்பமடியாக அந்தத் 'தமஸ்' என்னும் ஒரே தத்வம் 'மஹத்' முதலிய பஹுவித ப்ரபஞ்சமாக மாறுகிறபடியால், அந்தத் 'தமஸ்' என்னும் பீஜத்தைப் பகவான் பஹுவாகச் செய்கிறுன் என்று சொல்லப்படுகிறது.

नित्यो नित्यानां चेतनश्चेतनानामेको बहूनां यो विदधाति कामान् ।
तमात्मस्थं येऽनुपश्यन्ति धीरास्तेषां शान्तिश्शाश्वती नेतरेषाम् ॥ १३

"तदेतदिति मन्यन्ते निर्देश्यं परमं सुखम् ।
कथन्नु तद्विजानीयां किमु भाति विभाति वा ॥" १४

---

13. அப்படி ஒருவனாகவே இருந்துகொண்டு மற்றை ஸகல சேதந வஸ்துக்களுக்கும் அபேக்ஷிதங்களான அர்த்தங்களெல்லாவற்றையும் எவ்வித ஆயாஸமுமின்றிக்கே கொடுத்தருள்கிறான் என்பது இதனாற் சொல்லப்படுகிறது.

[ப - ரை.] **यः** - எந்த, **नित्यः** - நித்யனாக இருக்கும், **चेतनः** - சேதநன், **एक [एव] सन्** - ஒருவனாகவே இருந்துகொண்டு, **नित्यानाम्** - நித்யங்களாக இருக்கும், **बहूनाम्**-பஹுவான, **चेतनानाम्**-சேதநர்களுடைய, **कामान्**-இஷ்டங்களை, **विदधाति** -கொடுக்கிறானோ, **तम्**-அப்படிப்பட்ட [சேதநனை], **आत्मस्थम्** - தனக்குள் அந்தர்யாமியாக இருக்கிறானென்று, **ये धीराः** - எந்த விவேகிகள், **अनुपश्यन्ति**-பார்க்கிறார்களோ, **तेषाम्**-அவர்களுக்கே, **शाश्वती** - எந்நாளும் இருக்கும், **शान्तिः** - ஶாந்தியானது [உண்டு]; **न इतरेषाम्** - மற்றவர்களுக்கு [அது] இல்லை.

இந்த மந்த்ரத்தின் முதல் பாதிக்கு வேறுவிதமாகவும் அந்வயம் செய்யக்கூடும். **नित्यानां नित्यः** - நித்யர்களுக்கெல்லாம் நித்யனாகவும், **चेतनानां चेतनः** - சேதநர்களுக்கெல்லாம் சேதநனாகவும் இருக்கும், **यः** - எவன். [மற்றது முன்போலவே]. ஜீவர்களென்று சொல்லப்படும் வஸ்துக்களெல்லாம் ஸ்வரூப நாஶ மற்றவர்களாதலால் அவை நித்யங்கள்; ஆனால் அந்த நித்யத்வம் பகவானுடைய ஸங்கல்பத்தால் ஏற்பட்டதானபடியால் அது ஸோபாதிகம். பகவானுடைய நித்யத்வமோ நிருபாதிகம். ஆகையால் பகவானை 'நித்யர்களுக்கெல்லாம் நித்யன்' என்று சொல்லக்கூடும். இம்மாதிரியே 'சேதநர்களுக்கெல்லாம் சேதநன்' என்பதும்.

---

14. இவ்வாறு குரு உபதேஶித்தார். இதைக் கேட்ட ஶிஷ்யனுக்கு ஒரு ஸந்தேஹம் ஜநிக்கின்றது. அவன் ப்ரஶ்நம் செய்கிறான்.

[ப - ரை.] **तत्** - அப்படிப்பட்ட [அலௌகிகமான], **परमं सुखम्** - பரமாநந்த ரூபமான ப்ரஹ்மத்தை, **एतदिति** - இதுவென்று [உள்ளங்கைக் கனிபோல, அபரோக்ஷம்போல], **निर्देश्यम्** - சுட்டிக் காட்டத் தகுந்ததாக, **मन्यन्ते** - [உங்களைப்போன்ற யோகிகள்] எண்ணுகிறார்களே. **कथन्नु** - எப்படி, **तत्** - அதை [ரூபம் முதலியன அற்ற அந்த ப்ரஹ்மத்தை], **विजानीयाम्** - [அப்ரத்யக்ஷமான வஸ்துவை க்ரஹிக்க ஸாமர்த்யமற்ற நான்] அறிவேன்? [**तत्** - அது], **किमु भाति** - ப்ரகாஶத்துடன்

न तत्र सूर्यो भाति न चन्द्रतारकं नेमा विद्युतो भान्ति कुतोऽयमग्निः ।

கூடியதாக இருக்கிறதா? **विभाति** - ஸ்பஷ்டமாக ப்ரகாசிக்கிறதா? **[किं] वा [न]** - இல்லாவிட்டால் [மற்றைத் தேஜஸ்ஸுக்களால் மங்கலாகச் செய்யப்பட்டு] அஸ்பஷ்டமாக இருக்கிறதா?

---

15. இந்தக் கேள்விக்கு ஸமாதாநம் சொல்லுகிறார். அதாவது: "**आदित्यवर्णं तमसःपरस्तात**"-[தமஸ்ஸுக்கு அப்புறத்தில் ஸூர்யன்போல ஜ்வலித்துக்கொண்டிருக்கிறான்] என்றும், "**सदैकरूपरूपाय**"-[எப்பொழுதும் எவ்வித விகாரமு மற்றிருக்கும் ரூபத்தை உடைத்தாயிருக்கிறான்] என்றும் ஶ்ருதிகள் சொல்லுகிறபடி அவனுக்கு திவ்ய மங்கள விக்ரஹமொன்று உண்டு. அதுதான் நமக்கு த்யாநத்திற்கு ஶுபமான ஆலம்பநம். அப்படிப்பட்ட ரூபத்துடன் கூடினவனை அவன் மற்றை ஜ்யோதிஸ் எல்லாவற்றையும் அதிஶயித்திருக்கும் தீப்தியுடன் ப்ரகாஶிக்கிறான். இதுதான் அந்தக் கேள்விக்கு ஸமாதாநம்.

[ப - ரை.] **तत्र** - அவ்விடத்தில் [பகவானுடைய ப்ரகாஶத்தின் ஸாக்ஷாத்காரம் நேருமிடத்தில்], **सूर्यः** - ஸூர்யன், **न भाति** - ப்ரகாஶிக்கமாட்டா. **चन्द्रतारकम्** - சந்த்ரனும் நக்ஷத்ரங்களும், **[न भाति** - ப்ரகாஶிக்கிறதில்லை]. **इमा विद्युतः** - இந்த மின்னல்களும், **न भान्ति** - ப்ரகாசிக்கமாட்டா. **अयमग्निः** - இந்த நெருப்பானது, **कुतः** - எப்படி ப்ரகாசிக்கும்? [ஸூர்யன் முதலியவை யெல்லாம் மங்கிப் போகுங்காலத்தில் நம்முடைய த்ருஷ்டிக்குக் கோசரமான இந்த அக்நியைப் பற்றி கேட்பானேன்? அதாவது: பகவானுடைய தேஜஸ்ஸால் இவை யெல்லாம் மறைக்கப்படுகின்றன. அதற்கு எதிரில் இவையெல்லாம் ப்ரகாஶமற்றவை என்பது தாத்பர்யம்]. **सर्वम्** - எல்லா வஸ்துக்களும், **भान्तं तमेव** - ப்ரகாஶிக்கும் அந்தப் பகவானைக் காரணமாகக் கொண்டே, **अनुभाति** - அதை அநுஸரித்தே ப்ரகாசிக்கின்றது. [அதாவது: பரமாத்மாவான தேஜஸ் ஸகல இதர தேஜ: பதார்த்தங்களுக்கும் காரணம்; மற்றை தேஜஸ் எல்லாம் அதன் கார்யம் என்பது தாத்பர்யம். '**अनुभानम्**' என்பதற்குப் 'பிந்தி ப்ரகாசிப்பது' என்பது பொருள். லோகத்தில் காரணம் முன்னும் கார்யம் பின்னுமாகக் காணப்படுகிறபடியால் இவ்விடத்தில் ஸூர்யன் முதலியவை பிந்தி ப்ரகாசிக்கின்றன என்பதற்குப் 'பகவானுடைய தேஜஸ் காரணம், இவைகளின் தேஜஸ் அதன் கார்யம்' என்று சொல்லப்படுகின்றது.] **तस्य** - அவனுடைய, **भासा** - ப்ரகாஶத்தால், **इदं सर्वम्** - இவை யெல்லாம், **विभाति** - ப்ரகாஶிக்கின்றன [அதாவது: பகவானுடைய தேஜஸ்ஸால் அநுக்ரஹிக்கப்பட்டே இவைகளின் தேஜஸ் எல்லாம் தம் தம் கார்யமாகிற ப்ரகாஶநத்தில் ஸாமர்த்யத்தைப் பெறுகின்றது].

तमेव भान्तमनुभाति सर्वं तस्य भासा सर्वमिदं विभाति ॥ १५

इति द्वितीयाध्याये द्वितीयवल्ली ॥

---

இந்த அர்த்தத்தை ஸ்ரீ பாஷ்யத்தில் காணலாம். "**सर्वतेजसां छादकं, सर्वतेजसां कारणभूतं, सर्वतेजसामनुग्राहकम्**" என்பது அந்தத் திவ்ய ஸூக்தி. ஸ்ரீ ஶ்ருத ப்ரகாஶிகாசார்யர் இதைப் பின்வருமாறு விவரித்திருக்கிறார். "இந்த மந்த்ரத்தில் முதல் பாதியின் கருத்தை '**सर्वतेजसां छादकम्**' என்பதாலும், இரண்டாவது பாதியின் முதல் பாகமாகிற '**तमेव भान्तम्**' இத்யாதியின் கருத்தை '**सर्वतेजसां कारणभूतम्**' என்பதாலும், கடைசிப் பாதத்தின் கருத்தை '**सर्वतेजसामनुग्राहकम्**' என்பதாலும் ஸ்ரீ பாஷ்யம் விளக்குகின்றது."

'எல்லா தேஜஸ்ஸுக்கும் காரணமாக இருக்கின்றது பகவானுடைய தேஜஸ்' என்பதன் பொருளாவது: மற்றைத் தேஜஸ்ஸுக்கள் உத்பத்தி பெறும் வ்யாபாரத்தில் பகவானுடைய தேஜஸ்ஸானது நிமித்த காரணம் என்பதுதான். [கார்யமான ஒவ்வொரு வஸ்துவுக்கும் நிமித்த காரணமென்றும் உபாதாந காரண மென்றும் இரண்டுவித காரணங்கள் உண்டு. இவ்விடத்தில் பகவானுடைய தேஜஸ் நிமித்த காரணமாகின்றதே தவிர அது உபாதாந காரணமாகவில்லை; ஏனென்றால் பகவானுடைய தேஜஸ் அப்ராக்ருதம்; இதர வஸ்துக்களின் தேஜஸ் ப்ராக்ருதம். இப்படிப் பகவானுடைய தேஜஸ் விஸஜாதீய மாகையால், அது உபாதாந காரணமாக மாட்டாது. உபாதாநமும் உபாதேயமும் ஸஜாதீயங்களாகவன்றோ இருக்கவேண்டும்? இது இவ்விடத்தில் கவனிக்கத் தக்கது]. 'அநுக்ராஹகமாகவும் அது இருக்கின்றது' என்பதன் பொருளாவது: ஒருவஸ்து உத்பத்தி பெறுவதற்கு உபகாரகமாயிருப்பதைக் காரண மென்றும், உத்பந்நமான வஸ்து தனக்கு உரிய வ்யாபாரத்தைச் செய்வதில் உபகாரகமாயிருப்பதை அநுக்ராஹக மென்றும் சொல்வார்கள். இவ்விடத்தில் உத்பந்நமான ஸூர்ய தேஜஸ் முதலிய தேஜஸ்ஸுக்கள் தங்கள் தங்களுக்கு உரிய ப்ரகாஶந ரூப வ்யாபாரத்தைச் செய்வதற்கு அபேக்ஷிதமான ஸாமர்த்யத்தைப் பகவானுடைய தேஜஸ்ஸிலிருந்தே பெறுகிறபடியால் அது அவைகளுக்கு அநுக்ராஹக மாகின்றது. இந்த அநுக்ராஹகத்வமே "**तस्य भासा सर्वमिदं विभाति**" - என்னும் நாலாவது பாதத்தால் விவரிக்கப்படுகின்றது.

'இவ்விடத்தில், பகவானுடைய தீப்தியின் ஸாக்ஷாத்காரம் நேருமிடத்தில் ஸூர்யன் முதலானவை [**न भान्ति**] - ப்ரகாஶிக்கவில்லை என்று சொல்லப் பட்டிருக்கின்றதே. அது யுக்தமா? முக்தர்களும் அர்ஜுநனைப் போன்ற திவ்ய சக்ஷுஸ்ஸைப் பெற்றவர்களும் பகவானுடைய தேஜஸ்ஸை ஸாக்ஷாத்கரித்துக் கொண்டிருக்கும் பொழுதே மற்றைத்

தேஜஸ்ஸுக்களையும் ஸாக்ஷாத்கரிக்கிறார்களன்றோ?' என்று ஒரு ஸந்தேஹம் ஜநிக்கக் கூடும். இதற்கு ஸமாதாநமாவது: **न भान्ति** - [ப்ரகாசிக்கவில்லை] என்பதற்கு 'இவை ப்ரகாஶிக்காமலே போய்விடுகின்றன' என்பது தாத்பர்யமன்று. 'பரமாத்மாவின் ரூபம் அதிபாஸ்வரம்' என்பதே அதன் தாத்பர்யம்.

பரமாத்மா ஸ்பஷ்டமாக ப்ரகாஶிக்கின்றதா? என்று ஶிஷ்யன் கேட்டதற்கு இந்த மந்த்ரத்திற் சொல்லப்பட்டது ஸமாதாநமாகின்றது. 'அதை நீங்கள் ஸாக்ஷாத்தாகத் தர்ஶிக்கிறீர்களே; அப்படி நான் எவ்விதம் அதைப் பார்ப்பேன்' என்னும் ஸந்தேஹத்திற்கு ஸமாதாநத்தை இந்த மந்த்ரத்தில் காணோமே' என்று ஒரு ஶங்கை உண்டாகலாம். அந்த ஶங்கையை உத்தேஶித்தே ஆசார்யர்கள் 'இந்த மந்த்ரத்தில் பகவானுடைய திவ்ய மங்கள விக்ரஹம் விவக்ஷிதம்' என்று விவரித்திருக்கிறார்கள். அந்த விக்ரஹமே உபாஸகர்களின் த்யாநத்திற்கு ஶுபமான ஆலம்பநமாகின்றது.

இரண்டாவது அத்யாயத்தில் இரண்டாவது வல்லி முற்றிற்று.



श्रीः

# ॥ अथ द्वितीयाध्याये तृतीयवल्ली ॥

हरिः ओम् ॥

ऊर्ध्वमूलोऽवाक्छाख एषोऽश्वत्थस्सनातनः ।
तदेव शुक्रं तद्ब्रह्म तदेवाऽमृतमुच्यते ।
तस्मिन् लोकाः श्रितास्सर्वे तदु नात्येति कश्चन ॥ एतद्वै तत् ॥ १ ॥

ஸ்ரீ:

இரண்டாவது அத்யாயம் மூன்றுவது வல்லி

இது பர்யந்தம், ஜகத் முழுவதிலும் பரமாத்மா அந்தர்யாமியாக இருக்கிறுன் என்பதையும், அப்படி இருக்கையிலும் ஜகத்தில் தென்படும் தோஷங்களால் அவன் ஸ்பர்ஶிக்கப்படாமலே இருக்கிறுன் என்பதையும் விஸ்தாரமாகவும் ஆதராதிஶயத்தால் திரும்பத் திரும்பவும் பல தடவை விவரித்துவிட்டு, இனி அந்தராத்மாவாக இருக்கும் அவனுக்கும் அவனுடைய ஶரீரமாக இருக்கும் சேதநா சேதநங்களுக்கு முள்ள வைலக்ஷண்யத்தை விளக்கி, அவனுடைய ஸகல நியந்த்ருத்வம் முதலான மஹிமையை ப்ரஸ்தாவித்து, தேஹத்தைக் காட்டிலும் விலக்ஷணமான ஆத்ம யாதாத்ம்ய ஜ்ஞாநம் மாத்ரம் பகவத் ப்ராப்திக்கு அபர்யாப்தமென்றும், பகவச் சரணுகதியே அதற்குப் பர்யாப்தமான உபாயமாகுமென்றும் சொல்லி ஆக்யாயிகையை முடிக்கிறுர்.

1. முதல் மந்த்ரத்தில் ஸம்ஸாரம் ஹேயம் என்பதை விளக்கும் பொருட்டு அதை ஒரு வ்ருக்ஷமாகப் பேசுகிறுர். வ்ருக்ஷமாகப் பேசுவதன் கருத்து என்னவென்றுல், வ்ருக்ஷம் எப்படி வெட்டத்தகுந்த பதார்த்தமோ அம்மாதிரியே ஸம்ஸாரமும் சேதிக்கத்தகுந்ததே என்பதை ஸூசிப்பிக்கவேண்டு மென்பதுதான். வ்ருக்ஷம் என்னும் பதம் எந்தத் தாதுவிலிருந்து உண்டானதோ அந்தத் தாதுவுக்கு 'வெட்டுதல்' என்பது பொருள். பகவத் கீதையில் ஐந்தாவது அத்யாயம் முதல் ஶ்லோகத்திலும் இதே வர்ணநத்தைக் காணலாம்.

"ऊर्ध्वमूलमधश्शाखमश्वत्थं प्राहुरव्ययम् ।
छन्दांसि यस्य पर्णानि यस्तं वेद स वेदवित् ॥"

இந்த ஸம்ஸார வ்ருக்ஷத்திற்கு எல்லா லோகங்களுக்கும் மேல் இருக்கும்படியான சதுர்முக லோகம் ஆதியாகிறபடியால் அதற்கு வேர் உயர இருக்கின்றது என்றும், பூமியில் இருக்கும் ஸகல ஜந்துக்களும் அதற்கு அந்தமாகிறபடியால் அதன் கிளைகள் கீழ்நோக்கி இருக்கின்றன வென்

**यदिदं किञ्च जगत्सर्वं प्राण एजति निस्सृतम् ।**
**महद्भयं वज्रमुद्यतं य एतद्विदुरमृतास्ते भवन्ति ॥ २ ॥**

---

றும், அஸங்கத்திற்கு ஹேதுவான ஸம்யக் ஜ்ஞாநம் வரும் பர்யந்தம் அது ப்ரவாஹ ரூபமாக வளர்ந்துகொண்டே இருக்கிறபடியால் அது ஸநாதந மென்றும் சொல்லப்படுகின்றது. இந்த ஸம்ஸார வ்ருக்ஷத்தை அஶ்வத்த வ்ருக்ஷமென்று வர்ணிப்பதற்கும் ஒரு காரணம் உண்டு. "**श्वो न स्थास्यतीत्यश्वत्थः**" [நாளை நிற்காததாகையால் அஶ்வத்தம். ஸம்யக் ஜ்ஞாநம் ஜநித்து அதனால் அஸங்கம் ஏற்பட்டுவிட்டால், உடனே ஸம்ஸாரம் போய்விடு மாதலால் அது நாளைநிற்கமாட்டாது என்று, சொல்லக்கூடும்]. ப்ரஹ்மத்தைப் பற்றிப் பேசவேண்டிய இடத்தில் ஸம்ஸாரத்தைப்பற்றிப் பேசுவது எப்படி ஸங்கதமாகு மென்றால், பகவா னுடைய விபூதியாகிற ப்ரபஞ்சத்தை ப்ரதிபாதிப்பது, அவன் அதைக் காட்டிலும் அத்யந்த விலக்ஷணன் என்பதை விளக்கும் பொருட்டாகு மன்றோ? பர தத்வத்தை அறியவேண்டு மென்னும் இச்சைக்குக் காரண மாயிருக்கும் வைராக்யத்தை ஜநிப்பிக்கும் பொருட்டென்றும் சொல்லக் கூடும்.

[ப - ரை] **एषः** - இந்த, **अश्वत्थः** - [ஸம்ஸாரமாகிற] அஶ்வத்த வ்ருக்ஷமானது, **ऊर्ध्वमूलः** - உயர இருக்கும் வேரை உடையது; **अधश्शाखः** - கீழ்நோக்கிச் செல்லும் கிளைகளை உடையது; **सनातनः** - எப்பொழுதும் இருப்பது [அதாவது: ப்ரவாஹ ரூபமாக வ்யயமற்றது]. **तदेव शुक्रम्**.......[இதன் அர்த்தத்தை முந்தினவல்லி 8-வது மந்த்ரத்தில் காண்க]. 'இந்த ஸம்ஸார வ்ருக்ஷம் இப்படிப்பட்டது; அந்த ப்ரஹ்மமே ப்ரகாஶகமானது' என்று சொல்வதால் வைலக்ஷண்யம் வெளியாகின்றது.

---

2. 'ஜகத் முழுவதும் அந்தப் பரமாத்மாவில் ஸ்திதியைப் பெற் றிருக்கின்றது; அவனிடமிருந்தே ஜநித்தது; அவனிடமிருந்து பயந்தே தன் தன் கார்யத்தில் ப்ரவர்த்திக்கின்றது' என்று சொல்லி அவ னுடைய பெருமையைப் பேசுகிறது இந்த மந்த்ரம்.

[ப - ரை] **इदम्** - இந்த [அதாவது: அசிந்த்யமான பல வித ரசனையை உடைத்தாயிருப்பதாலும் ப்ரஹ்மாதி ஸ்தம்ப பர்யந்தமான வஸ்துக்களுடன் கூடியதாய் இருப்பதாலும் ப்ரத்யக்ஷம் முதலிய ப்ரமா ணங்களால் ஸித்தமான], **यत् किञ्च सर्वं जगत्** - எந்த ஜகத் முழுவதும் [அதாவது: ஈஶ்வரன் நீங்கலான போக்ய போக்த்ரு ரூபமான ஸகல முடம்], **प्राणे** - ப்ராண ஶப்த நிர்த்திஷ்ட புருஷனிடத்தில் [இருப்பை யுடையதோ]; **निस्सृतम्** - [அந்த ப்ராண ஶப்த நிர்த்திஷ்ட புருஷனிட மிருந்தே] வெளி வந்திருக்கிறதோ, [**तत्** - அந்த ஜகத் முழுவதும்], **उद्यतं वज्रम्** - உயரத் தூக்கப்பட்டிருக்கும் வஜ்ரத்தை உடையவர்போல இருக்

भयादस्याग्निस्तपति भयात्तपति सूर्यः ।
भयादिन्द्रश्च वायुश्च मृत्युर्धावति पञ्चमः ॥ ३ ॥

इह चेदशकद्बोद्धुं प्राक्छरीरस्य विस्रसः ।
ततस्सर्गेषु लोकेषु शरीरत्वाय कल्पते ॥ ४ ॥

यथादर्शे तथाऽऽत्मनि यथा स्वप्ने तथा पितृलोके ।
यथाऽप्सु परीव ददृशे तथा गन्धर्वलोके छायातपयोरिव ब्रह्मलोके ॥ ५ ॥

---

கும் பரம புருஷனிடமிருந்து, **महद्भयम्** - பெரிய பயத்தினால், **एजति** - நடுங்குகிறது [அதாவது : தன்தன் கார்யத்தில் ப்ரவர்த்திக்கின்றது].

**महत्, भयम्, वज्रम्, उद्यतम्** - இந்நான்கு பதங்களும் முதல் வேற்றுமையின் ரூபத்தை உடைத்தாயிருக்கையிலும், ஐந்தாம் வேற்றுமையின் அர்த்தத்தை உடையன என்பது கவனிக்கத்தக்கது. இவைகளுள் முதல் இரண்டு பதங்கள் பயத்தையும், மற்றை இரண்டு பதங்கள் அந்தப் பயத்திற்கு ஹேதுவாக இருக்கும் பரப்ரஹ்மத்தையும் குறிக்கின்றன. ஆகையால், அவைகளை **उद्यतवज्रादिव परमपुरुषात् सञ्जातेन भयेन** - என்று எடுத்துக்கொள்ள வேண்டும்.

---

3. கீழ் மந்த்ரத்திற் சொல்லப்பட்ட விஷயமே இதில் விவரிக்கப் படுகின்றது.

[ப - ரை] **अस्य भयात्** - இவனிடமிருந்து பயத்தால், **अग्निः**- அக்நியானது, **तपति** எரிக்கிறது; **भयात्** - [அந்தப்] பயத்தாலேயே, **सूर्यः** ஸூர்யன், **तपति** - ஜ்வலிக்கிறான்; **भयात्** - [அந்தப்] பயத்தாலேயே, **इन्द्रश्च** - இந்த்ரனும், **वायुश्च** - வாயுவும், **पञ्चमः** - ஐந்தாவதாக இருக்கும், **मृत्युः** - ம்ருத்யுவும், **धावति** - ஓடுகிறான். [அதாவது :—எல்லாரும் தங்கள் தங்கள் வ்யாபாரத்தில் ப்ரவ்ருத்தியைச் செய்கிறார்கள்.]

---

4. ஜகத் ஸ்திதி இவ்விதம் இருக்கின்றது என்பதை நம்முடைய ஶரீரம் இருக்கும் காலத்திலேயே நாம் அறிந்து கொள்ளவேண்டும்; அறியாவிட்டால் ஸம்ஸாரம் நம்மை விடாது.

[ப - ரை] **शरीरस्य** - ஶரீரத்தின், **विस्रसः प्राक्** - விழுகைக்கு முன், **इह** - இந்த லோகத்திலேயே, **बोद्धुम्** - [ப்ரஹ்மத்தை] அறிவதற்கு, **अशकश्चेत्** - ஶக்தியற்றவனாக இருக்கும் பக்ஷத்தில், **ततः** - அந்தக் காரணத்தால், **सर्गेषु** - ஸ்ருஷ்டியைப் பெறும் **लोकेषु** - லோகங்களில், **शरीरत्वाय** - சிதறிப்போகும் ஸ்வபாவமுள்ள ஶரீரத்தன்மையின் பொருட்டு, **कल्पते** - ஆகிறான்.

---

5. ஆத்ம தத்வத்தை உள்ளபடி அறிவது மிகவும் ஶ்ரம ஸாத்யம் என்பது இதில் சொல்லப்படுகிறது. ஒரு லோகத்திலும் அந்தத் தத்வம் ஶுத்தமாக அறியப்பட மாட்டாதாம்.

इन्द्रियाणां पृथग्भावमुदयास्तमयौ च यत् ।
पृथगुत्पद्यमानानां मत्वा धीरो न शोचति ॥ ६ ॥

---

[ப - ரை] इह - இந்த லோகத்தில் உண்டாகும், आत्मनि - ஆத்ம விஷயமான தோற்றமானது, दर्शे यथा - அமாவாஸ்யை இருட்டில் எப்படியோ [எப்படி வஸ்துக்களின் ப்ரதிபாஸம் அப்பொழுது இருக்க மாட்டாதோ], तथा - அப்படியே இருக்கும். पितृलोके - பித்ரு லோகத்தில் [உண்டாகும் தோற்றமும்], स्वप्ने यथा - ஸ்வப்நத்தில் உண்டாகும் ப்ரதிபாஸம் எப்படியோ, तथा - அப்படியே [அதாவது: ஸம்ஶயத்துடன் இருப்பதுடன் மறுபடியும் அநுஸந்தாநத்திற்கு அநர்ஹமாகவே] இருக்கும். गन्धर्वलोके - கந்தர்வ லோகத்தில் [உண்டாகும் தோற்றமும்], यथा अप्सु परिददृशे - ஜலத்திற்குள் இருக்கும் வஸ்து எப்படித் தென்படுமோ, तथा - அப்படியே [அஸ்பஷ்டமாக இருக்கும்]. ब्रह्मलोके - சதுர்முக ப்ரஹ்மலோகத்தில் [உண்டாகும் தோற்றமும்], छायातपयोरिव - வெயிலும் நிழலும் கலந்திருக்கும் இடத்தில் உண்டாகும் தோற்றத்தைப் போன்றதே [ஶுத்தமான ஆதபம் இருக்குமிடத்திற் போல இருக்கமாட்டாது].

यथादर्शे - இதை यथा आदर्शे - என்றும் பத விபாகம் செய்யலாம். அப்பொழுது 'கண்ணாடியில் எப்படியோ' என்பது பொருள் ஆகும். கண்ணாடியில் காணப்படும் பிம்பம் ஸாக்ஷாத்தாகப் பார்க்கப்படும் வஸ்துவைப்போல அவ்வளவு தெளிவாக இருக்கமாட்டாது. அதனுடன் இடது வலது பாகங்கள் விபரீதமாகவும் தென்படுமன்றோ? அம்மாதிரியே இந்த லோகத்தில் ஏற்படும் ஆத்ம வஸ்து ப்ரதீதி என்பது கருத்து.

---

6. 'ஆத்மாக்கள் ஜ்ஞாநைகாகாரங்கள்; தேஹம் முதலியவைகளில் தென்படும் உத்பத்தி விநாஶங்களும் பரஸ்பர வைலக்ஷண்யமும் ஆத்ம வஸ்துவில் இல்லை' என்பது இதில் சொல்லப்படுகின்றது.

[ப - ரை] पृथगुत्पद्यमानानाम् - வெவ்வேறாக இருந்துகொண்டும் உத்பத்தியைப் பெற்றுக்கொண்டு மிருக்கும், इन्द्रियाणाम् - இந்த்ரியங்களுடைய [இது தேஹம் முதலியவைகளுக்கும் உபலக்ஷணம்], पृथग्भावम् - வெவ்வேறாக இருக்கும் தன்மையையும் [அதாவது: ஒன்றைக் காட்டிலும் மற்றொன்று விலக்ஷணமாக இருந்துகொண்டு அதனால் வேறென்று வ்யவஹரிக்கக்கூடியதாயிருக்கும் தன்மையையும்], यत् उदयास्तमयौ च - உத்பத்தி விநாஶமென்று எந்த விகாரங்களுண்டோ அவைகளையும், मत्वा - அறிந்துகொண்டு, धीरः - விவேகியாக இருக்குமவன், न शोचति - ஶோகிக்கமாட்டன்.

यत् - என்னும் பதம் அவ்யயம்; அது 'यौ' என்னும் அர்த்தத்தில் ப்ரயோகம் செய்யப்பட்டிருக்கிறது.

इन्द्रियेभ्यः परं मनो मनसस्सत्वमुत्तमम् ।
सत्वादधि महानात्मा महतोऽव्यक्तमुत्तमम् ॥ ७ ॥
अव्यक्तात्तु परः पुरुषो व्यापकोऽलिङ्ग एव च ।
यद् ज्ञात्वा मुच्यते जन्तुरमृतत्वञ्च गच्छति ॥ ८ ॥

---

7 - 8. பகவானை அடைவதற்கு, ஆத்ம வஸ்துவானது தேஹம் முதலியவைகளைக் காட்டிலும் விலக்ஷணம் என்னும் ஜ்ஞாநத்தைப் பெறுவதுடன், அந்தப் பகவானை ஶரணமாகக் கைப்பற்றவும் வேண்டுமென்பதைச் சொல்வதற்காக, முதல் அத்யாயம் மூன்றாவது வல்லியின் 10 - 11 மந்த்ரங்களிற் சொல்லப்பட்டுள்ள வஶீகார்ய விஷயத்திலுள்ள மேன்மேல் இருக்கும் ப்ராதாந்யத்தையும் கடைசியாக 'सा परा गतिः' என்பதில் தென்படும் ஶரணவரணத்தையும் இவ்விடத்தில் மறுபடியும் ஸங்க்ரஹமாக விவரிக்கிறார். அவ்விடத்தில் ப்ரஸ்தாவிக்கப்பட்டுள்ள சில வஸ்துக்கள் இவ்விடத்தில் உதாஹரிக்கப்படாமலிருந்தால் அவைகளையும் இவ்விடத்தில் சேர்த்துக் கொள்ளவேண்டும். இந்த்ரியங்களுக்கு அடுத்த படியாக அவ்விடத்தில் அர்த்தங்கள் ப்ரஸ்தாவிக்கப்பட்டிருக்கின்றன; இவ்விடத்தில் அவை இல்லை. ஆனாலும் அவைகளும் இவ்விடத்தில் விவக்ஷிதமே. அவ்விடத்திற் சொல்லப்படாத 'सत्त्वम्' என்று ஒன்று இவ்விடத்திற் சொல்லப்படுகிறது. ஆனால் 'புத்தி' என்பது சொல்லப் படவில்லை. ஆகையால், அந்த 'ஸத்வம்' என்பது புத்தியைக் குறிப்பதாக க்ரஹிக்கப்படவேண்டும்.

[ப - ரை] **मनः इन्द्रियेभ्यः परम्** - மநஸ் இந்த்ரியங்களைக் காட்டிலும் ப்ரதாநம் [வஶீகரிக்கப்பட வேண்டிய விஷயத்தில்]; **मनस उत्तमं सत्त्वम् [परम्]** - மநஸ்ஸைக்காட்டிலும் புத்தி ப்ரதாநம்; **सत्त्वात् महान् आत्मा अधि** - புத்தியைக்காட்டிலும் [கர்த்ருத்வத்தாலே] மஹாந் என்று சொல்லக்கூடிய ஆத்மா ப்ரதாநம்; **महतः अव्यक्तमुत्तमम्** - ஆத்மாவைக் காட்டிலும் ஶரீரம் ப்ரதாநம்; **अव्यक्तात् व्यापकः अलिङ्गः पुरुष एव परः** - ஶரீரத்தைக் காட்டிலும் ஸர்வாந்தராத்மபூதமான அந்தர்யாமியாகவும் லிங்கங்களால் அறியப்படக்கூடாதவனாகவும் இருக்கும் புருஷனே ப்ரதாநமான வஸ்து. **यत्** - எந்தப் பரமபுருஷனாகிற வஸ்துவை, **ज्ञात्वा** - அறிந்து [அதாவது: ஶரணமாக அடைந்து], **जन्तुः** - ப்ராணியானது, **मुच्यते** - [கர்ம பந்தத்திலிருந்து விடப்படுகின்றது; **अमृतत्वंच गच्छति** - அம்ருதத்வத்தையும் அடைகின்றது. [**अलिङ्गः** - 'ஶாஸ்த்ரம்' என்னும் ஒரு ப்ரமாணத்தாலேயே அறியக்கூடியவன். மற்றை ப்ரமாணங்களுக்கு அவன் கோசரன் அன்று.]

மூன்றாவது வல்லியில் தென்படும் மந்த்ரங்களும் இவைகளும் ஒரே தாத்பர்யத்துடன் கூடியவை. அவ்விடத்திற் சொல்லப்பட்டுள்ள அர்த்தங்களை இவ்விடத்திலும் கண்டுகொள்க.

**न सन्दृशे तिष्ठति रूपमस्य न चक्षुषा पश्यति कश्चनैनम् ।**
**हृदा मनीषा मनसाऽभिक्लृप्तो य एतद्विदुरमृतास्ते भवन्ति ॥ ९ ॥**

**यदा पञ्चावतिष्ठन्ते ज्ञानानि मनसा सह ।**
**बुद्धिश्च न विचेष्टेत तामाहुः परमां गतिम् ॥ १० ॥**

---

9. அலிங்கனாயிருக்கும் அந்தப் பரமாத்மாவை க்ரஹிக்கும் மார்க்கம் இதில் சொல்லப்படுகிறது.

[ப - ரை] **अस्य** - இவனுடைய, **रूपम्** - ஸ்வரூபமானது [திவ்ய மங்கள விக்ரஹமும் விவக்ஷிதம்], **सन्दृशे** - அபிமுகமாக [அதாவது - தர்ஶநத்திற்கு விஷயமாக], **न तिष्ठति** - இல்லை. **कश्चन** - ஒருவனும், **एनम्** - இவனை, **चक्षुषा** - கண்ணால், **न पश्यति** - பார்க்கிறானில்லை. [ஒரு இந்த்ரியத்திற்கும் இலக்கு ஆகிறானில்லை என்பது கருத்து]. ஆனால், **मनीषा** - ஶாந்தி தாந்தி முதலியவைகளுடன்கூடிய, **मनसा** - மநஸ்ஸைக்கொண்டு, **हृदा** - பக்தியாலே [பக்தி ஒன்றாலேயே], **अभिक्लृप्तः** க்ரஹிக்கத்தகுந்தவன். **ये** - எவர்கள், **एतम्** - இவனை, **विदुः** - அறிகிறார்களோ [அதாவது: அறிந்து உபாஸிக்கிறார்களோ], **ते** - அவர்கள்தாம், **अमृताः** - மோக்ஷத்தை அடைந்தவர்களாக, **भवन्ति** - ஆகிறார்கள்.

மஹாபாரதத்தில், இந்த மந்த்ரத்தின் முதல்பாதி அப்படியே படிக்கப்பட்டு, இரண்டாவது பாதியின் ஸ்தாநத்தில் "**भक्त्या च धृत्या च समाहितात्मा ज्ञानस्वरूपं परिपश्यतीह**" என்று படிக்கப்பட்டிருக்கிறது. இவை இரண்டும் ஒரே பொருளை உடைத்தானதாதலால், 'ஹ்ருதா' என்பதற்குப் 'பக்தியால்' என்றும் 'மநீஷா மநஸா' என்பதற்கு 'த்ருதியால்' என்றும் பொருள் கொள்ளப்படுகிறது. பகவானை அடைவதற்குப் பக்தி ஒன்றே ஸாதநமாகிறபடியால், இவ்விடத்தில், 'த்ருதியால் மநஸ்ஸை ஸமாஹிதமாகச் செய்துகொண்டு பக்தியால் க்ரஹிக்கப்படுகிறான்' என்று அந்வயம் செய்துகொள்ளவேண்டும். இந்த அந்வயம் ஸ்ரீவேதார்த்த ஸங்க்ரஹத்தில் ஸூசிப்பிக்கப்பட்டிருக்கின்றது.

---

10. இது முதல் நாலு மந்த்ரங்களால், 'பகவானை க்ரஹிப்பது இந்த்ரியங்களால் ஸாத்யமில்லை; வேதாந்த வாக்யங்களால் அவன் ஒருவன் இருக்கிறான் என்று தெரிந்துகொண்டு, பிறகு த்யாநமாகிற யோகத்தால் மாத்ரம் அவனை அடைய ப்ரயத்நம் செய்யவேண்டும். என்பது விளக்கப்படுகின்றது.

[ப - ரை.] **यदा** - எப்பொழுது, **पञ्च ज्ञानानि** - ஐந்து ஜ்ஞாநேந்த்ரியங்கள், **मनसा सह** - மநஸ்ஸுடன் கூட, **अवतिष्ठन्ते** - அடங்கியிருக்கின்றனவோ, **बुद्धिश्च** - புத்தியும் [அத்யவஸாயத்துடன் கூடிய மநஸ்ஸும்], **न विचेष्टेत** - சலியாமல் நிற்கின்றதோ, **ताम्** - அந்த ஸ்திதியை,

तां योगमिति मन्यन्ते स्थिरामिन्द्रियधारणाम् ।
अप्रमत्तस्तदा भवति योगो हि प्रभवाप्ययौ ॥ ११ ॥
नैव वाचा न मनसा प्राप्तुं शक्यो न चक्षुषा ।
अस्तीति ब्रुवतोऽन्यत्र कथं तदुपलभ्यते ॥ १२ ॥

---

**परमां गतिम्** - உயர்ந்த கதியென்று [அதாவது: ஶரீரத்தைவிட்டு மோக்ஷத்திற்குப் போகும் மார்க்கமென்று], **आहुः** - சொல்லுகிறார்கள்.

**ज्ञानानि-ज्ञायतेऽनेनेति** [எதனால் விஷயங்கள் புலப்படுகின்றனவோ], அதாவது: இந்த்ரியம். ஆகையால் 'ஜ்ஞாநாநி' என்பதற்கு 'ஜ்ஞானேந்த்ரியங்கள்' என்பது பொருள்.

**बुद्धिः** - மநஸ்ஸுக்கே புத்தி என்றும் அஹங்கார மென்றும் சித்த மென்றும் பெயர்களுண்டு அத்யவஸாயத்துடன் கூடினபொழுது 'புத்தி' என்றும், அபிமாநத்துடன் கூடினபொழுது 'அஹங்கார' மென்றும், சிந்திக்கும்பொழுது 'சித்தம்' என்றும் அதைப் பேசுவார்கள். "**अध्यवसायाभिमानचिन्तावृत्तिभेदान्मन एव बुद्ध्यहङ्कारचित्तशब्दैर्व्यपदिश्यते**" என்பது ஸ்ரீ பாஷ்யம்.

---

11. [ப-ரை.] **ताम्** - அந்த, **स्थिराम्** - த்ருடமான, **इन्द्रियधारणाम्**- இந்த்ரிய நிக்ரஹத்தை, **योगमिति** யோகமென்று, **मन्यन्ते** - எண்ணுகிறார்கள். **तदा** - அப்பொழுது [இந்த்ரியங்கள் நிர்வ்யாபாரமாக இருக்கும் பொழுது], **अप्रमत्तः** - அவதாநத்துடன் கூடிய சித்தத்தை உடையவனாக, **भवति** - ஆகிறான். **योगः** - யோகமானது, **प्रभवाप्ययौ हि** - உத்பத்தியையும் நாஶத்தையும் தர்மங்களாக உடையதன்றோ [அதாவது: ஒவ்வொரு க்ஷணத்திலும் உண்டாகி மாறக்கூடியது.] ஆகையால் யோகம் செய்யும் பொழுது ஸாவதாநமாக இருத்தல் வேண்டும். [**प्रभवाप्ययौ** - இதற்கு மற்றுமொரு விதமாகப் பொருள் கொள்ளக்கூடும். அதாவது: 'இஷ்டத்தைக் கொடுப்பதாகிற ப்ரபவத்தையும் அநிஷ்டத்தை நிவர்த்திப்பதாகிற அவ்யயத்தையும் உடையது' என்பதுதான்.] இப்படி யோகம் ஸகல புருஷார்த்தங்களுக்கும் ஸாதநமாகிறபடியால், அதைச் செய்யும் பொழுது ஸாவதாநமாக இருப்பது அவஶ்யம் ஆகின்றது என்று சொல்லப்படுகிறது.

---

12. [ப-ரை.] [**एतत्** - இந்த ஆத்ம தத்வமானது], **वाचा** - வாக்கினால், **प्राप्तुं** - அடைவதற்கு, **नैव शक्यः** - ஶக்யமே அன்று; **मनसा न** - மநஸ்ஸினால் அடைவதற்கும் ஶக்யமன்று; **चक्षुषा न** - கண்ணால் அடைவதற்கும் ஶக்யமன்று. **अस्तीति ब्रुवतः** - இருக்கிறது என்று சொல்லுமதைக் காட்டிலும் [அதாவது: ஆத்ம தத்வமென்று ஒன்று உண்டு என்று சொல்லும் ஶாஸ்த்ரத்தைக் காட்டிலும்], **अन्यत्र** - மற்றோர்

अस्तीत्येवोपलब्धव्यस्तत्त्वभावेन चोभयोः ।
अस्तीत्येवोपलब्धस्य तत्त्वभावः प्रसीदति ॥ १३ ॥

यदा सर्वे प्रमुच्यन्ते कामा येऽस्य हृदि श्रिताः ।
अथ मर्त्योऽमृतो भवत्यत्र ब्रह्म समश्नुते ॥ १४ ॥

---

இடத்தில், **तत्** - அது, **कथम्** - எப்படி, **उपलभ्यते** - அடையப்படக்கூடும்? [ஆத்ம தத்வமானது உபநிஷத்தாகிற ஶாஸ்த்ர மொன்றிலிருந்தே அறியப்படத் தகுந்தது என்பது கருத்து.]

13. [ப - ரை.] **अस्तीति** - [ஆத்ம தத்வம்] உண்டென்று, **[शब्दात्] एव** - ஶப்த ப்ரமாணமாகிற ஶாஸ்த்ர மொன்றிலிருந்து மாத்ரமே **उपलब्धव्यः** - அறியப்படத் தகுந்தது. **तत्वभावेन च** - அந்த:கரணத்தாலும் [அது அறியப்படக்கூடும். அதாவது: முதலில் ஶாஸ்த்ரமும், பிறகு மநந நிதித்யாஸநங்களுமே அதை அறிவிக்கும்]. **उभयोः** - [இந்த] இரண்டாலும் [ஶப்தம் மநஸ் ஆகிய இந்த இவ்விரண்டாலும்], **अस्तीत्येवोपलब्धस्य** - [ஆத்மதத்வம் என்பது] இருக்கின்றது என்று அறிந்தவனுக்கே, **तत्वभावः** - மநஸ்ஸானது, **प्रसीदति** தெளிவை அடைகின்றது [அதாவது: பூர்வம் ஶப்தம் மநஸ் இவைகளால் அறியப்பட்ட அந்தத் தத்வம் பிறகு மிகவும் தெளிவாக ப்ரகாஶிக்கின்றது.]

**उपलब्धस्य** - இதற்கு 'அறியப்பட்ட' என்பதே பொருளானாலும், சிற்சில விடங்களில் 'அறிந்த' என்று பொருளும் கூடும். **'भुक्ता ब्राह्मणाः'** என்னுமிடத்தில் 'புஜிக்கப்பட்ட' என்னும் பொருளுடன் கூடிய **'भुक्ता'** என்பதற்கு 'புஜித்த' **[भुक्तवन्तः]** என்று பொருள் கொள்வது இதற்கு த்ருஷ்டாந்தமாகும்.

14. இப்படி ஹ்ருத் கதமான விஷய காமங்களெல்லாம் ஶாந்தமாகி ப்ரஹ்ம வித்யையில் ப்ரவ்ருத்தனை ப்ரஹ்ம வித்துக்கு இந்தத் தேஹம் இருக்கும் பொழுதே அம்ருதத்வம் கிடைக்கிறதென்பது இதில் சொல்லப்படுகின்றது.

[ப - ரை.] **ये अस्य हृदि श्रिताः** - எவை எவை [எந்த எந்தக் காமங்கள்] இவனுடைய [உபாஸகனுடைய] ஹ்ருதயத்தில் [பூர்வம்] இருந்தனவோ, **सर्वे [ते] कामाः** - அந்தக் காமங்களெல்லாம், **यदा** - எப்பொழுது, **प्रमुच्यन्ते** - விலகுகின்றனவோ [ஶாந்தியை அடைகின்றனவோ], **अथ** - அதற்குப் பிறகே, **मर्त्यः** - மரண தர்மத்தையுடைய இவன் [அதாவது: இந்த உபாஸகன்], **अमृतो भवति** - அம்ருதத்வத்தைப் பெறுகிறான் [அதாவது: அவனைவிட்டு உபாஸநத்திற்குப் பூர்வம் செய்யப்பட்ட பாபங்களெல்லாம் விலகுகின்றன; உபாஸ்திக்குப் பிறகு ஸம்பவிக்கும் பாபங்களெல்லாம் அவனிடம் ஸம்பந்தம் பெறாமலே போய் விடுகின்றன.] **अत्र** - உபாஸந காலத்தில், **ब्रह्म समश्नुते** - ப்ரஹ்மானு

**यदा सर्वे प्रभिद्यन्ते हृदयस्येह ग्रन्थयः ।**
**अथ मर्त्योऽमृतो भवत्येतावदनुशासनम् ॥ १५ ॥**

---

பவத்தைப் பெறுகிறான். [பூர்வாக விநாஶம் உத்தராக அஶ்லேஷம் இப்படிப்பட்ட ரூபமான அம்ருதத்வத்தை அடைகிறான்.

இந்த வாக்யத்தை ப்ரமாணமாக அவலம்பித்துச் சிலர் ப்ரஹ்ம வித்துக்களுக்கு உத்க்ராந்தி இல்லையென்று வாதிக்கிறார்கள். ஒரு ஜந்து மரணம் அடையும் தஶையில் இந்த்ரியங்களெல்லாம் மநஸ்ஸுடன் ஸம்யோகத்தை அடைகின்றனவென்றும், அப்படி ஸகலேந்த்ரிய ஸம்யுக்தமான மநஸ் ப்ராணனுடன் சேர்கின்றதென்றும், அந்த ப்ராணன் ஜீவனுடன் சேர்கின்றதென்றும், அந்த இந்த்ரியம் முதலியவைகளுடன் கூடின ஜீவன் பூத ஸூக்ஷ்மங்களுடன் சேர்ந்து தேஹத்தைவிட்டு வெளிப்படுகிறானென்றும் உபநிஷத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இதை உத்க்ராந்தி என்று சொல்வார்கள். 'இப்படிப்பட்ட உத்க்ராந்தி அப்ரஹ்ம வித்துக்களுக்கு மாத்ரமே; ப்ரஹ்ம வித்துக்கள் '**अत्र ब्रह्म समश्नुते**' என்கிறபடி இவ்விடத்திலேயே ப்ரஹ்மத்தை அநுபவிக்கிறார்களென்று சொல்லப்பட்டிருக்கிறபடியால், அவர்களுக்கு உத்க்ராந்தியில்லை என்பது அவர்களுடைய வாதம். இப்படி வாதிப்பது அநுபபந்நம் என்பது நமது ஸித்தாந்தம். முதலாவது: இந்த வாக்யத்திற்கு அடுத்து வரும் 16-வது மந்த்ரத்தில் '**तयोर्ध्वमायन्नमृतत्वमेति**' [மூர்த்தந்ய நாடி வழியாக உத்க்ரமிக்கும் ப்ரஹ்மவித் அம்ருதத்வத்தை அடைகிறான்] என்று ப்ரஹ்ம வித்துக்கும் உத்க்ராந்தி சொல்லப்பட்டிருக்கின்றது. இரண்டாவது: '**तस्य तावदेव चिरं यावन्न विमोक्ष्ये**' [தேஹம் போகும் பர்யந்தமே ப்ரஹ்மவித்துக்கு ப்ரஹ்ம ப்ராப்தியில் விளம்பம்] என்று சொல்லுகிறபடியால், '**अत्र ब्रह्म समश्नुते**' என்பதால் சொல்லப்படும் அம்ருதத்வம் நிஶ்ஶேஷ பந்தம் போவதைக் குறிக்கமாட்டாது என்பது ஸித்தம். ப்ரஹ்ம ப்ராப்தியானது அர்ச்சிராதி மார்க்கத்தால் தேஶ விஶேஷத்தை அடைந்த பிறகே ஸம்பவிக்கிறது என்று பஹு ஶ்ருதிகள் சொல்லுகின்றன. நிற்க, தேவயாந மார்க்கத்தாலே தேஶ விஶேஷத்திற்குப் போகிறவனுக்கு மத்யே மார்க்கத்தில் சந்த்ரனுடன் ஸம்வாதம் சொல்லப்பட்டிருப்பதிலிருந்து அப்பொழுது அவனுக்கு ஸூக்ஷ்ம ஶரீரம் இருக்கிறதென்று ஏற்படுகிறபடியாலும் கர்ம பந்தம் அவனுக்கு இவ்விடத்திலேயே நிஶ்ஶேஷமாக விலகிவிட்டது என்று சொல்வது அநுபபந்நமே யாகும். ஆகையால், இவ்விடத்திற் சொல்லப்படும் அம்ருதத்வம் உத்தராகத்தின் அஶ்லேஷம் பூர்வாகத்தின் விநாஶம் இந்த ரூபமான அம்ருதத்வமென்று நாம் அறிய வேண்டும். இதுதான் நமது ஸித்தாந்தம்.

---

15. கீழ் விவரிக்கப்பட்ட விஷயத்தையே ஆதராதிஶயத்தால் மறுபடியும் ப்ரஸ்தாவித்து, 'உபதேஶிக்கப்பட வேண்டிய விஷயம் இவ்வளவுதான்' என்று உபஸம்ஹாரம் செய்கிறார்.

[ப - ரை.] **यदा** - எப்பொழுது, **हृदयस्य सर्वे ग्रन्थयः** - ஹ்ருதயத்திலுள்ள முடிச்சுக்களெல்லாம் [முடிகள் போல ஸுலபமாக அவிழ்க்கக் கூடாத ராகத்வேஷாதிகளெல்லாம்], **प्रभिद्यन्ते** - விடப்படுகின்றனவோ, **अथ** - அதற்குப் பிறகே, **मर्त्यः** - மநுஷ்யன், **अमृतो भवति** - மோக்ஷத்தை

**शतञ्चैका च हृदयस्य नाड्यस्तासां मूर्धानमभिनिस्सृतैका ।**
**तयोर्ध्वमायन्नमृतत्वमेति विष्वङ्ङन्या उत्क्रमणे भवन्ति ॥ १६ ॥**
**अङ्गुष्ठमात्रः पुरुषोऽन्तरात्मा सदा जनानां हृदये सन्निविष्टः ।**

---

அடைந்தவனாகிறான். **अनुशासनम्** - உபதேசம் செய்யப்படவேண்டிய விஷயம், **एतावदेव** - இவ்வளவுதான்.

'இவ்வளவு தான் என்று முடித்துவிட்டு மறுபடியும் மூன்று மந்த்ரங்களால் சில விஷயங்கள் சொல்லப்படுகின்றனவே; அது எப்படி?' என்றால், இதுபர்யந்தம் சொல்லப்பட்ட விஷயம் உபாஸகன் செய்ய வேண்டிய க்ருத்யம்; இனி சொல்லப்படப்போவது உபாஸநத்தால் ப்ரஸந்நனான பகவான் செய்வதைப்பற்றியது என்று அறியவேண்டும். மூர்த்தந்ய நாடி வழியாகவோ வேறு வழியாகவோ ஜீவன் உத்க்ரமணம் அடைவதொன்றும் ஜீவ க்ருத்யமாக மாட்டாதன்றோ?

---

16. இரண்டாவது அத்யாயத்தில் இரண்டாவது வல்லி முதல் மந்த்ரத்தில் "**विमुक्तश्च विमुच्यते**" [ஜீவ தசையில் ஆத்யாத்மிகம் முதலிய துக்கங்களிலிருந்து விடப்பட்டவனைப் ப்ராரப்த கர்மாவஸாநத்தில் ப்ரக்ருதி ஸம்பந்தத்திலிருந்து விடுவிக்கப்பட்டவனாகிறான்] என்று எந்தப் பரம முக்தி ப்ரஸ்தாவிக்கப்பட்டதோ அந்தப் பரம முக்தியே இவ்விடத்தில் ப்ரதிபாதிக்கப்படுகின்றது.

[ப - ரை.] **हृदयस्य** - ஹ்ருதயத்திற்கு, **शतञ्च एका च** - நூற்றொரு, **नाड्यः** - நாடிகள் [உண்டு]. **तासां [मध्ये]** - அவைகளுக்குள், **एका** - ஒன்று, **मूर्धानम्** - ஶிரஸ்ஸை நோக்கி, **अभिनिस्सृता** - போகின்றது. **तया** - அந்த நாடி வழியாக, **ऊर्ध्वम्** - உயர, **आयन्** - போகிறவன், **अमृतत्वम्** - மோக்ஷத்தை, **एति** - அடைகின்றான். **अन्याः** - மற்றை நாடிகளெல்லாம், **विष्वङ्ङुत्क्रमणे**-குறுக்காகப் போவதில் [ஸம்ஸார மார்க்கத்தின் வழியாகச் செலுத்துவதில்], **भवन्ति** - உபயோகப்படுகின்றன. '**विष्वक्**' என்பதை நாடிகளுக்கு விஶேஷணமாகவும் எடுத்துக் கொள்ளலாம் அப்பொழுது அதற்குக் 'குறுக்கே போகும் நாடிகள்' என்பது பொருளாகும்.

ப்ரஹ்மவித்துக்கு உத்க்ரமணம் நேரும்பொழுது, ஜீவனுடைய ஸ்தாநமாகிற ஹ்ருதயத்தின் அக்ரபாகத்தில் ஸ்ரீ ஶரண்யனுடைய அநுக்ரஹத்தால் ஒரு நல்ல ப்ரகாஶம் ஏற்படுகின்றதென்றும், அந்த ப்ரகாஶத்தால் மூர்த்தந்ய நாடியை விவேசநம் செய்துகொண்டு அதன் வழியாக அவன் வெளிப்படுகிறானென்றும், அது வழியாக வெளிப்படுகிறவன் ப்ரஹ்மலோகத்திற்குப் போய் அந்தத் தேஶ விஶிஷ்ட ப்ரஹ்ம ப்ராப்தியைப் பெற்று ஸ்வ ஸ்வரூபாவிர்ப்பாவ லக்ஷணமான மோக்ஷத்தை அடைகின்றானென்றும் உபநிஷத்துக்களில் சொல்லப்பட்டிருக்கிறது. அப்ரஹ்மவித்துக்களுக்கு அம்மாதிரி ப்ரகாஶம் ஏற்படாததால், அவர்கள் வேறு நாடிகளில் ப்ரவேஶித்து ஸம்ஸார மார்க்கத்திற் சேருகிறார்கள். "**हार्दानुग्रहलब्धमध्यधमनिद्वाराद् बहिर्निर्गतः**" என்பது அபியுக்தர்களின் ஸூக்தி. இப்படிப் புறப்படுவது ஜீவ க்ருத்யமாக மாட்டாது; இது உபாஸநத்தால் ப்ரீதனான பகவானுடைய க்ருத்யமே ஆகும்.



17. உபதேஶத்தை முடிக்கிறார்.

तं स्वाच्छरीरात्प्रवृहेन्मुञ्जादिवेषिकां धैर्येण ।
तं विद्याच्छुक्रममृतन्तं विद्याच्छुक्रममृतमिति १७ ॥

मृत्युप्रोक्तान्नचिकेतोऽथ लब्ध्वा विद्यामेतां योगविधिञ्च कृत्स्नम् ।
ब्रह्म प्राप्तो विरजोऽभूद्विमृत्युरन्योऽप्येवं यो विदध्यात्ममेव ॥ १८ ॥

सह नाववतु । सह नौ भुनक्तु । सह वीर्यं करवावहै । तेजस्विनावधीतमस्तु मा विद्विषावहै ॥ ओं शान्तिश्शान्तिश्शान्तिः ॥

हरिः ओं ॥

इति द्वितीयाध्याये तृतीयवल्ली ॥

द्वितीयोऽध्यायस्समाप्तः ॥

---

[ப - ரை.] **अङ्गुष्ठमात्रः** - அங்குஷ்ட ப்ரமாணத்தை யுடையவனாக, **अन्तरात्मा** - அந்தர்யாமியாக இருக்கும், **पुरुषः** - பரம புருஷன், **सदा** - எப்பொழுதும், **जनानाम्** - ஜநங்களுடைய, **हृदये** - ஹ்ருதயத்தில், **सन्निविष्टः** - ஸ்திரமாக இருக்கிறான். **तम्** - அவனை, **स्वात्** - தன்னுடைய தான [அதாவது: அந்தப் பரம புருஷனுடையதான], **शरीरात्** - ஶரீரத்திலிருந்து [ஶரீரமாகிற சேதநனிடமிருந்து], **धैर्येण** - ஜ்ஞாநப் பெருமையால், **मुञ्जात्** - கோரைப் புல்லிலிருந்து, **इषीकामिव** - ஈர்க்கைப்போல, **प्रवृहेत्** - கிழித்து எடுக்கவேண்டும். [அதாவது: ஜீவனைக் காட்டிலும் ப்ருதக் பூதனாக அறியவேண்டும்.]

'**जन**' என்னும் பதம் சேதநனாகிற ஜீவனைக் குறிக்கின்றது. ப்ரபஞ்சத்திலுள்ள ஸகல சேதநாசேதநங்களும் பகவானுக்கு ஶரீரமாகிறபடியால், இவ்விடத்தில் ஶரீர ஶப்தத்தால் ஜீவாத்மாவே க்ரஹிக்கப்படுகிறான்.

**सन्निविष्टः** - ஸ்திரமாக இருக்கிறான். அவன் இராத காலமில்லை என்பது பொருள். '**वर्तते सावरोधः**'' என்கிறபடி குடியும் குடித்தனமுமாகக் களத்ராதிகளுடன் இருக்கிறான் என்றும் த்வநிக்கிறது.

**तं विद्यात्** - இத்யாதியின் அர்த்தத்தை முந்தின வல்லியில் எட்டாவது வாக்யத்தில் காண்க. இந்த வாக்யம் இரட்டித்துப் படிக்கப்பட்டிருப்பது உபதேஶம் முடிந்துவிட்டது என்பதை ஸூசிப்பிக்கின்றது.

---

18. இந்த ஆக்யாயிகையின் அர்த்தத்தை உபஸம்ஹரிக்கிறார்.

[ப - ரை.] **नचिकेतः** - நசிகேதஸ்ஸானவர், **मृत्युप्रोक्ताम्** - தர்மராஜனால் சொல்லப்பட்ட, **एताम् विद्याम्** - இந்த [ஆத்ம] வித்யையும், **कृत्स्नं योगविधिञ्च** [**यदा पञ्च** - இத்யாதியால் விளக்கப்பட்ட] பூர்ணமான யோக விதியையும், **लब्ध्वा** - அடைந்து, **ब्रह्म** - ப்ரஹ்மத்தை; **प्राप्तः** - அடைந்தவனைக் கொண்டு, **विरजः विमृत्युश्च अभूत्** - ரஜஸ் மரணம் நீங்கினவனாக [அதாவது - ப்ரக்ருதி ஸம்பந்தம் நீங்கினவனாக ஆவிர்ப்பூதஸ்வ ஸ்வரூபனாய்], **अभूत्** - ஆனான். **यः अन्यः** - மற்ற எவனும், **एवं अध्यात्मं वित्** - இம்மாதிரி அத்யாத்ம வித்யையை அறிகிறானோ, **सोऽपि** - அவனும், **एवमेव** - இந்த நசிகேதஸ் போலவே, [**भवति** - ஆகிறான்.]

மூன்றாவது வல்லி முற்றிற்று.

கடோபநிஷத் முற்றிற்று.

